


# ரெக்ஸ் ~

# தரம் ஊரறிந்த உன்னதம்!

## இப்போது மற்றும் ஒரு கவர்ச்சி-அதன் விலைநயம்

எங்கள் ஸ்க்வாஷ்கள் மிகமிக நேர்த்தியான பழங்களாகப் பார்த்துப் பறித்து அவற்றிலி-ருந்து தயாரிக்கப் பட்டவை. பிறகு தூய சீனிப்பாகும் விசேஷ மான இதர சரக்குகளும் சேர்க்-கப் பட்டவை. எனவே சுவைத்-தறியாத புத்துணர்ச்சி தரும் பானமாக உங்களை அடைகிறது —ரெக்ஸ்.






கார்ன் ப்ராடக்ட்ஸ் கம்பெனி (இந்தியா) பிரைவேட் லிமிடெட், பம்பாய்-1.

Bensons/1911/TM

சௌமிய, வைகாசி 12 1969, மே 25

# கல்கி



## பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.


சத்தியமேவ ஜயதே
அந்தப் பத்தாம் பசலிக் கொள்கைக்குத் தார் பூசுங்கள். மன்னர்-களுக்குத் தந்த வாக்குறுதியை முறிப்போம்!


நக்ஸல் பாரி இயக்கம்


நெருப்பை யார் அணைப்பது என்பதே பிரச்னை
ராஜ்யங்-கள்
தில்லி
PK



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்.

மலர் 28 ❋ இதழ் 43



# ஸ்தாபன சுதந்திரமும் தனி நபர் சுதந்திரமும்

''ஏகமனதாக முடிவு காண வேண்டும்'' என்ற பேச்சு அதிகமாக உள்ளது. முக்கியமான பிரச்னை ஏதும் ஏற்பட்டால், உடனே 'ஏகோபித்த முடிவு' தேடத் தொடங்குவது வழக்கமாகி விட்டது. ஒருபுறத்தில் கட்சிகளுக்குள் பிளவுகளும் பேதமின்மையும் அதிகமாகி வருகையில், மறுபுறத்தில் ஏகமனதான முடிவைத் தேடும் போக்கும் அதே அளவுக்கு அதிகமாகியிருக்கிறது— செயலும் அதன் எதிர் விளைவும் சம சக்தி வாய்ந்தவை என்ற விஞ்ஞான உண்மைக்குச் சான்று போல்.

ஐக்கியமும், ஏகோபித்த தீர்மானமும் நல்லவைதான். ஆனால் அவை சுயேச்சையாகப் பிறக்க வேண்டும். நிர்ப்பந்தத்தின் மீது சிருஷ்டிக்கப்படலாகாது.

உயிரற்ற உடலுக்கும் உயிருள்ள உடலுக்கும் மெத்த மாறுபாடு உண்டு. எத்தனை சவங்களை ஒன்று குவித்தாலும் ஒரே ஓர் உயிருள்ள வியக்திக்கு ஈடாகா. நிர்ப்பந்தத்தின் மீது எத்தனை பேர் சேர்ந்து ஏகோபித்து முடிவு கண்டாலும் அதில் உண்மையில்லை; அது ஏமாற்றுதலே.

தொழிற்சாலையில் உள்ள தொழிலாளிகளிடையே ஐக்கியம் நிலவுவது நல்லது. இதனால் அவர்கள் நிர்வாகஸ்தர்களுக்கு முகம் கொடுத்துத் தங்கள் உரிமைகளைக் காத்துக் கொள்ள முடிகிறது. இந்த ஐக்கியத்தினால் ஓர் அதிகார சக்தி கிடைப்பதைக் கண்டதும், தொழிற்சங்கங்கள் பலவந்தமாக ஐக்கியத்தைக் கொண்டு வரப் பார்க்கின்றன. சிறுபான்மையினர் தங்களது சுயேச்சைக்கு மாறாக நடக்குமாறு நிர்ப்பந்தப்படுத்தப் பெறுகின்றனர். தொழிற் சங்கங்கள் கம்யூனிஸ ராஜ்யங்கள் போல யதேச்சாதிகாரமாகியுள்ளன. தொழிற் சங்கத் தலைவர்களுடைய சர்வாதிகாரத்தின் பொருட்டு, அங்கத்தினர்களின் சுதந்திரம் பறி கொடுக்கப்படுகிறது. பௌதிக லாபத்துக்காக ஆன்ம சுதந்திரம் பறி கொடுக்கப்படுகிறது.

'அதிகாரம் என்பது ஒருவரின் புத்தியைக் கெடுக்கும்' என்பது ஆங்கில வாசகம். 'அதிகாரத்தை அநுபவிப்பது மட்டுமின்றி அதிகாரத்துக்காக **ஆசைப்படுவதே** புத்தியைக் கெடுக்கும்' எனலாம். இந்த அதிகார ஆசைதான் அரசியல் கட்சிகளுடையவும், தொழிற்சங்கங்களுடையவும் சுதந்திர அடித்தளத்தை நாசமாக்கியுள்ளன. கட்சிக் கோறடா, ஒழுங்கு விதி, கட்டுப்பாட்டு மீறலுக்கான தண்டனை — ஆகியன ஸ்தாபனங்களின் ஆணிவேரையே அரிக்கத் தொடங்கிவிட்டன. பொதுவான சில இலட்சியங்களுக்காகப் பலர் **சுயேச்சையுடன்** ஒன்று சேருவதற்கே அரசியல் கட்சிகள் ஏற்பட்டன. அவற்றை அவ்வாறே காப்பாற்ற வேண்டும். ஆனால் அதிகார ஆசை காரணமாகத் தலைவர்கள் சர்வாதிகாரத்தில் இறங்குவதால், சிறுபான்மை அபிப்பிராயம் அடியோடு நசுக்கப்படுகிறது. உண்மையும் சுதந்திரமும் நிலவ வேண்டிய இடங்களில் பொய்யும் அடக்குமுறையுமே காணப்படுகின்றன.

இந்திய ராஷ்டிரபதித் தேர்தல் குறித்து, ''ஹிந்து'' பத்திரிகையில் ஸ்ரீ க. சந்தானம் எழுதியிருக்கிறார். இத்தேர்தலில் கட்சிக் கட்டுப்பாடுகளைத் தளர்த்த வேண்டும் என அவர் முடிவாக வேண்டுகோள் விடுத்திருக்கிறார். பாரத தேசத்தின் தலைமைப் பதவிக்கு அந்தஸ்தும், சவுர்ச்சியமும், சௌகரியங்களும் உள்ளன. எனவே, இப்பதவிக்கு இருவரோ அதற்கு மேற்பட்டவர்களோ போட்டியிட்டால் அதில் தவறேதும் இல்லை என்கிறார் ஸ்ரீ சந்தானம். ராஷ்டிரபதியைத் தேர்ந்தெடுக்கும் உரிமை பெற்ற அங்கத்தினர்கள் சட்சிக் கோறடாவோ, சட்

டுப்பாடோ இன்றிச் சுதந்திரமாக வாக்குப் போட வேண்டும் என்கிறார். வழி காட்டலாம், ஆனால் வலுக் கட்டாயம் கூடாது; இரகசிய முறையில் வாக்குப் பதிவு நடக்க வேண்டும்—என்றெல்லாம் கூறுகிறார். அவரது யோசனையை நான் முற்றிலும் ஆமோதிக்கிறேன். இவ்விஷயத்தில் ஒழுங்குக் கட்டுப்பாடு, கட்சிக் கொறடா என்பதையெல்லாம் முற்றிலும் ரத்து செய்துவிட வேண்டும்.

அதிகாரத்துக்கு மேலாகச் சுதந்திரத்தை மதிப்பது சுதந்திரக் கட்சியே ஆகும். அரசாங்கத்தின் தலையீடுகளை எதிர்த்துத் தனி மனிதனின் சுதந்திரத்தைக் காக்க வேண்டும் என்ற அடிப்படை தவிர, மற்ற அம்சங்களில் சுதந்திரக்கட்சி அங்கத்தினர்கள் சுயேச்சையாக நடக்கலாம் என அக்கட்சி வெளிப்படையாக அநுமதித்துள்ளது.

ராஷ்டிரபதித் தேர்தலில் இன்னாரை ஆதரிக்க வேண்டும் என்று சுதந்திரக்கட்சி தனது அங்கத்தினருக்குக் கூறலாமாயினும், அங்கத்தினர்கள் தமது சுயேச்சைக்கு மாறாக, கட்சிக் கட்டுப்பாட்டின்மீதே வாக்குப் போட வேண்டும் என்று சுதந்திரக் கட்சி எதிர்பார்க்கவில்லை.

பொதுவான பிரச்னைக்குத் திரும்புவோம்: எல்லா அரசியல் கட்சிகளும், தொழிற்சங்கங்களும், தொழிலக வர்த்தக சபைகளும், அந்தந்த ஸ்தாபனத்துக்குள் பலவந்தக் கட்டுப்பாட்டையே மேற்கொண்டிருக்கின்றன. இது துர்ப்பாக்கியவசமானது. இந்த முறையைக் கைவிட வேண்டும். நெடுமரங்கள் வேரில் களைன்றி நின்ற போதிலும், ஜீவ சத்து எங்கும் பரவிக் கிளைகள் சுதந்திரமாக வளர வசதி தருவதைப் பார்த்து நாமும் படிப்பினை பெற வேண்டும்.

"நடைமுறைக்கு உதவாத உமது கொள்கையால்தான் உம்முடைய கட்சி வளராமல் முடங்கியிருக்கிறது" என்று கண்டனக்காரர்கள் என்னைப் பரிகாசம் செய்வதைக் கேட்க முடிகிறது. ஆயினும், உலகின் மிகப் பெரிய ஜனநாயகமாகிய இந்தியா என்றென்றும் இன்று போலவே விஷயஞானமில்லாமல் இருந்துவிடாது என நம்புகிறேன். விரைவிலோ, காலம் தள்ளியோ — என்றேனும் ஒரு நாள் — நம் வாக்காளர்கள் ஜனநாயகத்தின் அடிப்படையான நல்லறிவைப் பெறுவது நிச்சயம். அதன்பின், அதிகாரத்துக்காகச் சுதந்திரத்தை விலை பேச மறுக்கும் கட்சி தேச வாழ்வில் அதற்குரிய இடத்தைப் பெறும். அந்நிய ஆட்சியிலிருந்து நாடு விடுதலை பெறுவதற்காக ஐம்பது ஆண்டுகள் போராடினோம். அது எப்பேர்ப்பட்ட விலை மதிப்பற்ற இலட்சியமோ, அதைப் போன்றதே ஸ்தாபனத்தின் யதேச்சாதிகாரத்திலிருந்து தனிமனிதன் விடுதலை பெறுவதும். அந்த இலட்சியத்தையே அடித்தளமாகக் கொண்டு, அதிலிருந்து பிரிக்க முடியாமல் பிணைப்புக் கொண்டிருப்பது சுதந்திரக்கட்சி.

**(ராஜாஜி 'ஸ்வராஜ்யா'வில் எழுதியது.)**

# ராஜாஜியின் கருத்துக்கள்

பல்வேறு கிராமங்களிலுள்ள மக்களைப் படையெடுப்புக்குப் பயிலுவிப்பதற்காக இருபத்தைந்து முழு—நேரத் தொண்டர்கள் அனுப்பப்பட்டிருக்கின்றனர் என்று நாடியா மாவட்டத்தின் நக்ஸல்பாரித் தலைவர் ஸ்ரீ ஸோவன் சாட்டர்ஜி கூறியுள்ளார். ஆயுதங்கள் சேகரிப்பது ஒரு சிரமமான காரியமல்ல என்றும், அவற்றை உபயோகிப்பதற்கு மக்களைப் பழக்குவதே முதல் காரியம் என்றும் அவர் கூறியிருக்கிறார். நக்ஸல்பாரி பாணி அமைப்பில் எல்லா ராஜ்யங்களின் பிரதிநிதிகளும் இருப்பதாக அவர் தெரிவித்திருக்கிறார்.

வடக்கு பிஹாரைச் சேர்ந்த நூற்றைம்பது நக்ஸல்பாரிக்காரர்கள் கெரில்லாப் போர் முறையிலும், நாச வேலையிலும் பயிற்சி பெறுவதற்காகச் சீனத்துக்குச் சென்றிருக்கிறார்கள் என்று மிகவும் நம்பகமாகத் தெரிகிறது என பிஹார் ராஜ்ய சட்ட சபை ஜனசங்கக் காரியதரிசி ஸ்ரீ ராமகிருபால் சின்ஹா கூறுகிறார். பிஹாரின் வடக்கு எல்லையில் பல கேந்திரங்களை நக்ஸல்பாரியினர் அமைத்திருப்பதாகவும், இவற்றில் புதிதாக ஆட்கள் சேர்க்கப்படுவதாகவும் அவர் தெரிவிக்கிறார்.

ஃஃஃ

ஆயுதப் பயிற்சி தந்து படையெடுப்பதை வெளிப்படையாக ஆதரித்து வருகிற கம்யூனிஸ்ட்களைத் தடை செய்வதற்குப் புதிதாகச் சட்டம் செய்ய வேண்டும் என்று நினைக்கிறது யூனியன் உள்துறை இலாகா. அதோடு, வலது — இடதுசாரி கம்யூனிஸ்ட்களுடன் இவ்விஷயமாகப் 'பேச்சு வார்த்தை' நடத்துகிறது. இந்தியாவில் உள்ள எல்லாச் சட்ட அறிஞர்களின் சங்கங்களுக்கும் இந்தப் போக்கு ஆச்சரியமாக இருக்கும்.

தீண்டாமை பற்றி ஒரு தனிமனிதர் கொண்டுள்ள — வெளியிட்டுள்ள — கருத்துக்காக அவர் மீது யூனியன் சர்க்காரின் விருப்பப்படி ஒரு ராஜ்ய சர்க்கார் குற்றம் சாட்டியுள்ளது. நீதிமன்றத்தில் உள்ள இவ்விஷயமாக நான் ஏதும் கூறலாகாது. ஆயினும், தனிமனிதரின் அபிப்பிராயத்தைவிட ஒரு ஸ்தாபனத்தின் செயல் திட்டம் அதிக கவனத்துக்குரியது என்று எடுத்துரைக்க விரும்புகிறேன். பிறரைத் தூண்டி விடுவதோடு மட்டுமின்றி, ஆயுத ரீதியில் போருக்குத் தயார் செய்தே வருகிறது ஒரு ஸ்தாபனம்.

தாமதிப்பதிலுள்ள ஆபத்தை அரசாங்கம் உணர வேண்டும். காலதேவதைக்கு முன் குடுமிதான் உண்டு. எனவே அந்தத் தேவதை நுழைகிறபோதே சிகையைப் பிடித்துக் கொண்டால்தான் உண்டு. விட்டு விட்டால் அதன் பின்புறம் வழுக்கை; அதனைப் பிடிக்க முடியாது.

கம்யூனிஸ்ட் கட்சியின் கிளர்ச்சிகளை அடக்கும் பொறுப்பை ஏற்க மறுப்பவரும் யூனியன் சர்க்கார் ஆட்சி பீடத்தில் இனியும் நீடிக்க உரிமை உண்டா என்பதை



## ஆசாரியர் அருள்மொழி

அம்பிகே ! என் பேச்செல்லாம் உனது ஜபமாகட்டும்; என் செய்கை யாவும் உனது முத்திரைகளாகவும், என் சஞ்சாரமனைத்தும் உனக்குச் செய்யும் பிரதட்சிணமாகவும், நான் உண்பது உனக்கு நிவேதனமாகவும், நான் சயனிப்பது உனக்குப் புரியும் நமஸ்காரமாகவும் ஆகட்டும். என் ஆன்மாவை உன்னிடம் அர்ப்பணம் செய்துவிட்ட இந் நிலையில் நான் அடைகிற இன்பங்கள் யாவும் உனது பூஜையின் அங்கங்களாகட்டும்.

ஆழ்ந்து சிந்திக்க வேண்டும். இப்பொறுப்பை ராஜ்ய சர்க்கார்களிடம் தள்ளப் பார்ப்பது கேலிக்கூத்தாகும். ஏனெனில், சில ராஜ்ய சர்க்கார்களே இந்த நாச வேலைக்காரர்களிடம் அநுதாபம் கொண்டிருப்பதோடு மட்டுமின்றி, அவர்களை ஊக்கி வருவதாகவும் நம்ப இடமிருக்கிறது.

இதற்குப் புதுச் சட்டம் வகுக்க வேண்டுமெனத் தில்லி சர்க்கார் நினைப்பது அதன் திறமையின்மைக்கே அடையாளம். புதுச் சட்டமும் ராஜ்ய சர்க்கார்கள்மீதே பாரத்தைச் சுமத்துமாயின், அதுவும் ஒரு கேலிக் கூத்தேயாகும்.

ஃஃஃ

''சீனத்தின் தேவ தேவிகளைக் கணக்கிட்டு முடியாது. இவர்களில் மற்றெல்லாரையும் விட, புத்தரையும்விடக்கூட, மக்களின் பக்தியைப் பெற்றிருப்பது கருணையின் தேவதையாகிய குவான் யின். மக்களின் துயருற்ற இதயங்களுக்கு அமைதியும், நோயுற்ற உடல்களுக்கு இதமும் ஊட்டுவதற்காகக் கைகளை விரித்துக் கொண்டு வரும் தேவி அவள். கஷ்ட தசையில் சீன மக்கள் அவள்பால் திரும்புகின்றனர். மற்ற தெய்வங்களையெல்லாம் ஒரு மொத்தமாகச் சேர்த்தால் இருப்பதைவிட அதிகமாக இந்த ஒரு தேவதையின் முன்பே அதிகப் பிரார்த்தனைகள் புரியப்படுகின்றன ; அதிகம் சாம்பிராணி தூபம் போடப்படுகிறது ; அதிகம் பலிகள் இடப்படுகின்றன.'' — இவ்வாறு சுமார் முப்பது வருடங்களுக்குமுன் ''ஆர்ய மார்க்கம்'' (Aryan Path) பத்திரிகையில் ஹெச். ஹெச். ஹார்ட் எழுதினார்.

குவான் யின் தேவியை ராமகிருஷ்ண பரமஹம்ஸரின் அன்னைத் தெய்வம் எனலாம்.

சீன மக்களின் உழைப்புத் திறன், பக்தி இவையும், கன்ஃபூஷியஸ் வகுத்த விதிகளில் அவர்களுக்குள்ள ஈடுபாட்டையும் கம்யூனிஸத்தின் கரு நிழல் அழித்து விடாது. சுதந்திரத்தை அழிப்பதும், தெய்வ நம்பிக்கை அற்றதுமான கம்யூனிஸ மாயை அகன்றால் சீனர்களின் பண்புகள் மீண்டும் மிளிரும்.

ஃஃஃ

அமெரிக்கா தனது ராணுவச் செலவில் எது லாபகரமானது, எது நஷ்டகரமானது என்பதை அமைதியாக மறுபரிசீலனை செய்யத் தருணம் வாய்த்திருக்கிறது. அணுஆயுதங்கள், ஏவு கணைகள் இவற்றுக்காக முடிவேயில்லாமல் செலவிடுவது யுக்தமா, அல்லது தரைப் படைகளும் கப்பற் படைகளும் நீண்ட காலமாக உபயோகித்து வரும் 'சம்பிரதாய' ஆயுதங்களுக்காகச் செலவிடுவது யுக்தமா — இவற்றில் எது அவசரமானது — [இவற்றில் எது அமெரிக்கப் பாதுகாப்புக்கும் உலகப் பாதுகாப்புக்கும் உகந்தது என்பதையெல்லாம் அமெரிக்கா மீண்டும் சிந்தித்துப் பார்க்க வேண்டும். ஒரு சாமானிய வெளி மனிதனுக்கு இவ்விஷயமாக யோசனை கூற உரிமையில்லைதான். எனினும், உபயோகிக்கப்படாமலே இருக்கப் போகும் அணு ஆயுதக் குவிப்புக்காகப் போட்டி போட்டுக் கொண்டு அளவுக்கு மீறி இருதரப்புகளும் செய்கிற செலவு] வியர்த்தமே என்பதை எடுத்துக் காட்ட வேண்டியதாகிறது.

ஃஃஃ

யதேச்சாதிகாரக் கட்சிகள் ஆட்சி நடத்தும் நாடுகளில் இறுதியில் ராணுவமே ஆட்சி அதிகாரம் பெறுகிறது. நிர்ப்பந்த முறையைச் சார்ந்து ஆட்சி பீடம் ஏறிய ஒரு கட்சி, இறுதியில் ராணுவத்தால் முறியடிக்கப்படுவதைத் தவிர்க்க முடியாது. இந்தப் போக்கை இப்போதே ருஷியாவிலும் சீனத்திலும் காண முடிகிறது எனப் பார்வையாளர்கள் கூறுகின்றனர்.

மாஸ்கோ செஞ்சதுக்கத்தில் நடந்த மே தின விழாவில் வழக்கமான [தொடக்கச் சடங்கு நடைபெறவில்லை என்றும், அணிவகுப்பு — ஆயுதக் காட்சி — டாங்கிகளின் உறுமல் முதலியன இல்லை என்றும் கூறுகிறது ''நியூயார்க் டைம்ஸ் வாராந்திர சஞ்சிகை''.

ருஷிய ராணுவத்தினர் மிகவும் சக்தி பெற்றுவிட்டதாகவும், எப்போது வாய்ப்புக் கிடைத்தாலும் உடனே அவர்கள் ஆட்சித் தலைமையைக் கைப்பற்றக் கூடும் என்றும், இது காரணமாகவே அவர்களது மே தின அணிவகுப்பு ரத்து செய்யப்பட்டு விட்டது என்றும் சிலர் கருதுகின்றனர்.

சிக்கனம் காரணமாகவோ, அல்லது தான் சமாதானத்தில் விருப்பம் கொண்டிருப்பதாக உலகுக்குக் காட்டுவதற்காகவோ ராணுவ அணிவகுப்பு எடுபட்டிருக்கலாம் என்று கருதுவோரும் உண்டு.

எனினும், மக்களின் கண்முன் ராணுவ அதிகாரிகளின் முக்கியத்தைக் குறைக்க ருஷிய அரசியல்வாதிகள் விரும்பியிருக்கலாம் என்ற கருத்தை ஒதுக்கிவிட முடியாது.

''பிரிவுத் துயரால் வாடியிருப்பான்
முதற் கவிஞன்! - அவன்
பெருமூச்சில் தோன்றியிருக்கும்
இதயகானம்?
பொங்கி விழிவழியே பேசாமல்
பெருக்கெடுத்திருக்கும் கவிதை -
அவனறியாமல்''

ஆதி கவி இராமாயணம் பாடியதற்கு இப்படி ஒரு காரணம் கோடித்துச் செய்யுள் இயற்றியவர் ஸ்ரீ சுமித்திரானந்தன் பந்த் என்னும் ஹிந்திக் கவிஞர்.

இயற்கைச் செல்வம் கொழிக்கும் அல்மோராவைச் சார்ந்த கௌஸானி என்னும் ஊரில் இன்றைக்கு எழுபது ஆண்டுகளுக்கு முன் பிறந்தவர் இவர். வயது எழுபது ஆனாலும் ஏழு வயதுப் பாலகனைப் போன்ற கள்ளங் கபடம் இல்லாத இதயம் படைத்தவர்.

எழிற் செல்வத்தைக் கணக்கு வழக்கின்றி இவர் பிறந்த மண்ணில் கொட்டிய இயற்கையன்னை வருங்காலக் கவிஞனுக்குத் தானே தாயாகிச் சீராட்டிப் பாராட்ட வேண்டும் என்ற பேராசையில் கவிஞர் பிறந்த ஆறு மணி நேரத்துக்கெல்லாம் ஈன்றெடுத்த அன்னையைப் பறித்துக் கொண்டு விட்டாள்! எழில் வளத்தினூடே இயற்கை அன்னையின் மடியிலே வளர்ந்த பாலகன் இயற்கையாகவே கவிட் ட ளம் பெற்று வளர்ந்து வந்தான்.

# கருத்தைக் கவரும் கவிச் செல்வர்

வறுமை பிடித்தாலும் கவிதை பிடிக்கும் அவனுக்கு. காளிதாசனின் மேகதூதனும், சாகுந்தலமும் அவனுக்கு இளம்பிராயம் முதற்கொண்டே உயிருக்குயிரான நூல்கள். அண்ணன் படிக்க அவன் கேட்டு அப்படியே மெய் மறந்து விடுவான்; மனத் திரையிலே கவிதை மேகம் குமிழும். அந்த மாதிரி வேளையிலேதான் ஒரு சமயம்....

''தம்பி ! இது என்ன?''

''கடிதம்.''

''கடிதமா, கவிதையா ?''

''கவிதைக் கடிதம் !''

''எப்படித் தம்பி, உனக்கு இப்படி எழுத வருகிறது !''

''அதுதான் தெரியவில்லை, அக்கா ! உனக்குக் கடிதம் எழுதப் பேனாவை எடுத்தேன். என் எழுத்து எப்படியெல்லாமோ போய் இப்படி முடிந்திருக்கிறது !''

''அருமையாக இருக்கிறதே !''

தமக்கை அளித்த ஊக்கத்தில் தம்பி கவியானான்.

அந்தத் தம்பி பள்ளிப் படிப்பை முடித்துக் கொண்டு, மியோர் சென்டிரல் கல்லூரியில் இண்டர் படித்துக் கொண்டிருந்த பொழுது....

1919ஆம் ஆண்டு அது.

காந்தியடிகள் அலாகாபாத்துக்கு விஜயம் செய்திருந்தார். ஒரு கூட்டத்தில் நாட்டு நிலைமையை விளக்கி, ''கல்லூரிப் படிப்பை நாட்டுப்பணிக்காகத் துறக்கத் தயாராக இருக்கும் மாணவர்கள் கையைத் தூக்குங்கள்!'' என்றார்.

காந்தியடிகளின் உருவத்தைக் கண்டதுமே அருவக் கற்பனையில் ஈடுபட்டு விட்டிருந்தது கவியுள்ளம். காந்தியடிகள் என்ன சொன்னார், ஏது சொன்னார் என்பதைக் கவனிக்கவில்லை. கற்பனையிலே அரைக் கண் மூடி அரைக் கண் திறந்திருந்த கவிஞரின் கையை ஒரு கை தூக்கிப் பிடித்தது. அது சுமித்திரானந்தன் பந்தின் சகோதரர் தேவிதத்தபந்தின் கை. இதில் வேடிக்கை என்னவென்றால், அண்ணனின் கை உயரவில்லை. இப்படியாகக் காந்தியடிகளோடு தொடர்பு கொண்ட



கவிஞர் தம் கவிதைகளால் காந்தியடிகளைக் கவரும் பெருமையைப் பெற்றார் !

காந்தியடிகளை மட்டுமென்ன, கவியரசர் டாகூரின் கவனத்தைக்கூடக் கவர்ந்த பெருமை ஸ்ரீ பந்துக்கு உண்டு.

ஹிந்தி மொழியில் அகத்துறை இலக்கியத்தில் புதிய சகாப்தத்தைப் புகுத்திய ஸ்ரீ பந்த், 'சாயா வாதம்' என்னும் கவிதை வழிக்கு வழிகாட்டியெனப் பெயர் பெற்றவர். எளிய சொற் கட்டு, கருத்தாழம் ஆகியவற்றுக்கு இவரது கவிதைகள் ஓர் எடுத்துக் காட்டு.

காதலைப் பற்றி ஓரிடத்தில் வேடிக்கையாகக் குறிப்பிடுகிறார் :



"இந்த நாலு பாத்திரங்களிலும் தண்ணீர் பிடித்து வைத்துவிட்டு வாருங்கள். சாப்பாடு போடுகிறேன். பிறகு நீங்கள் ஆபீஸ் போகலாம்!"

'இந்தக் காதலே ஒரு கோணல்! அந்த விந்தையை என்னவென்பது? நேருக்கு நேர் பார்க்கக் கூடாது? கடைக்கண் நோக்கிலேதான் கோடி இன்பத்தைக் காண்கிறது. விலக விலக நெருங்குகிறது. நெருங்க நெருங்க விலகி விளையாடுகிறது! குலம், கோத்திரம் பாராமல் தன் தாகத்தைத் தணித்துக் கொள்வது. அப்புறம் யார் வீட்டில் நீர் அருந்தினேன் என்று கேட்பது!'

இப்படிக் கூறும் பொழுது சகுந்தலையும் துஷ்யந்தனும் படிப்பவர்கள் கண்ணெதிரே நிற்பார்கள்!

இப்படியெல்லாம் எழுதிய கவியைக் கவியரசர் 1934ம் ஆண்டு அல்மோராவில் தங்கியிருந்த பொழுது பல முறை சந்தித்து அளவளாவியிருக்கிறார்; அவர் கவிதையை இவர் கேட்க, இவர் கவிதையை அவர் கேட்கக் கதை வளர்ந்தது. ஒரு நாள் டாகுர் கூறினார்: "பந்த்ஜி! நீங்கள் ஏன் சாந்தி நிகேதனுக்கு வந்து தங்கக் கூடாது? அங்கே உங்களைப்போல், உங்கள் அத்தனை வயதில் எத்தனையோ அழகிய பெண்கள் இருக்கிறார்கள்!"

ஸ்ரீ பந்துக்குக் கவியரசரின் இந்த வேடிக்கைப் பேச்சுக்குப் பொருள் விளங்கவில்லை.

ஒரு வேளை, "'முதற் கவிஞன் பிரிவுத் துயரால் வாடியிருப்பான். அப்புறமே காவியம் பிறந்திருக்கும்' என்று கூறிய பந்த் தமது காவியத்திலே காதல் நயத்தைக் கச்சிதமாகக் கொண்டு வருவதை நினைவூட்டிக் கவிஞனுக்கு அநுபவம் அவசியத் தேவையில்லை; அவன் கற்பனையே சிறந்ததோர் அநுபவம்' என்பதைச் சொல்லாமல் சொல்லிச் சாடியிருப்பாரோ?

ஆம், கவி பந்த் இதுவரையில் கல்யாணமாகாதவர்; கட்டைப் பிரம்மசாரி. அப்படியிருக்கும் பொழுது அவரது கவிதைகளிலே அநுபவமா பேசுகிறது?

"ஏன் நீங்கள் மணம் செய்து கொள்ளவில்லை? அநுபவம் மேலிட்டால் இன்னும் கற்பனை நன்ருக விரியுமே!" என்ருராம் நண்பர் ஒருவர்.

"நான் திருமணம் செய்து கொள்ள வேண்டாம் என்று வைராக்கியமாக இல்லை. இன்பமான இல்லறம் நடத்த வேண்டும் என்றுதான் ஆசைப்பட்டேன். ஆனல் குடும்பத்தில் பல தொல்லைகள்! எனது என்றிருந்த சொத்து சுதந்திரங்கள் பறிபோயின; போன சொத்தை மீட்டு நன்ருகப் பொருள் சேர்த்துத் திருமணம் செய்து கொள்ளலாம் என்று இன்று வரை ஓட்டிவிட்டேன். இனிமேல் இந்தக் கிழவனை..."

இப்படிச் சொல்லும் கிழவர் இப்பொழுது தான் கார் ஓட்டக் கற்றுக் கொள்ளுகிருர்!

"உமக்கு ஏன் ஐயா இந்த வயதில் போய் இந்த ஆசை?" — இப்படிக் கேட்கிறவர்களைப் பார்த்து, "ஆசைக்கு ஒரு நரை, திரை மூப்பு உண்டா? நன்ருகக் கற்றுக் கொண்டு உங்களை யெல்லாம் காரில் அழைத்துப் போகிறேனு, இல்லையா பாருங்கள்!" என்கிருர்.

வாழ்நாள் முழுதும் கவிதைக்கே தம்மை அர்ப்பணித்துவிட்ட ஸ்ரீ பந்தின் பெயரைக் கூறிக் கொண்டு ஏறக்குறைய நாற்பது நூல்கள் வாழ்கின்றன. அவற்றில் முப்பது செய்யுள் பகுதியைச் சேர்ந்தவை.

சாயாவாதம், ரஹஸ்ய வாதம் என்று கூறப்படும் அகத்துறையின் மூலம் ஆத்மீகத் துறையிலே முன்னேற்றம் காண விழையும் கவிஞர், எப்பொழுதும் ஆனந்தமாக இருக்க வேண்டும் என்று ஆசைப்படுகிருர். ஆயினும் பிரும்மத்தில் லயித்து விட்டால், அப்புறம் ஆனந்தம் கிட்டுமோ, கிட்டாதோ?

இப்படி ஓர் ஐயத்தைக் கேள்வியாக்கி, ஓங்கி உயர்ந்து எழும்பும் அலைகள் கூறுவது போலக் கூறுகிருர்: "நாங்கள் ஓடிப்போய்க் கரையைப் பார்த்துவிடக் கூடாது. ஆனல் கரையைப் பார்க்கும் ஆசையில் நாங்கள் தினம் தினம் முன்னேறிக் கொண்டே இருக்க வேண்டும். அதுவே ஆனந்தம்."

இப்படிக் கூறும் கவிஞரால் இந்த உலகத்தை மறக்க முடியவில்லை. நிழலின் அருமை வெய்யிலில் தெரியும் என்னும் பழமொழிக்குப் புது மெருகிட்டு, "துயரமில்லாவிட்டால் அத்தனை சுகங்களும் சாரமற்றவை. கண்ணீரின்றி வாழ்வே சுமையாகி விடும்" என்கிருர்.

இது போன்ற கருத்துக்களைக் கவிதையாக வடிக்கும் கவிஞர் பாரத அரசாங்கத்தினரால் 'பத்ம பூஷண்' விருது வழங்கப் பெற்றவர்; சாகித்ய அகாதமியினரால் பரிசுகள் வழங்கப்பட்டு, கௌரவ அங்கத்தினராகவும் நியமிக்கப்பட்டவர். இதுபோல் இன்னும் எத்தனை எத்தனையோ பரிசுகள் பெற்றவரை இவ்வாண்டு, ஸ்ரீ சாந்தி பிரசாத் ஜைன் நிறுவிய பாரதீய ஞான பீடத்தின் ஒரு லட்ச ரூபாய்ப் பரிசு தேடி வந்துள்ளது. 'சிதம்பரா' என்னும் கவிதைத் தொகுதி ஸ்ரீ பந்தை இந்தக் கௌரவத்துக்கு ஆளாக்கியுள்ளது. அவர் இலக்கியப் பணி மேலும் ஓங்க வாழ்த்துகிறோம். —ரா. வீ.







# 6வது ஆண்டு ஆரம்பம்!

**மயிலை**யில், பட்டு சேலைகளுக்கு என்றே அமைக்கப்பெற்ற இந்த ஷோ-ரூமுக்கு 5 ஆண்டுகள் வெற்றிகரமாகப் பூர்த்தியாகி **6-வது ஆண்டு** 17-5-69 துவங்கியுள்ள இத்தருணத்தில்,

- வாடிக்கையாளர்களுக்கும் எமக்குப் பெரிதும் ஒத்துழைப்பு அளித்த வியாபாரிகளுக்கும், எமது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.
- அடுத்து, எமது ஸ்தாபனத்தில் பணியாற்றும் ஊழியர்கள், சிப்பந்திகள் அனைவருக்கும் — முக்கியமாக சேல்ஸ்மென்கள் திறம்பட பணியாற்றியதற்கு எங்களது பாராட்டுதல் உரியனதாகும்.
- **கற்பகம், இந்திரா, சியாமளா** மற்றும் **ஐஸ்வரி**, ஆகிய 4 புதிய படைப்புகளைத் தங்களுக்கு அறிமுகம் செய்து, பட்டுச் சேலை தயாரிப்பில் ஓர் புதிய திருப்பத்தை உருவாக்கியதற்கு தங்களது அமோகமான வரவேற்பும் பேராதரவுமேதான் தூண்டுகோலாக விளங்கியது.
- சேலைகளைத் தேர்ந்தெடுத்தபின் தங்களை தங்கள் இல்லங்களில் நாங்களே கொண்டு சேர்க்க வசதி அளிக்கிறோம்.
- சென்னை வரும் வெளியூர் அன்பர்கள் சேலைகளைத் தேர்ந்தெடுத்தால் வி. பி. பி. மூலம் அனுப்பி வைக்கிறோம். இந்த விலையில் இவ்வுயர் ரகம் அங்கு கிடைக்காது.
- எமது சொந்தத் தறிகளில் தரமான பட்டில், உயர்ந்த ஜரிகையுடன், எமது மேற்பார்வையில் **அசல் பட்டுப் புடவைகளைத்** தயாரித்து **உற்பத்தியாளர்களின் விலைக்கே** வழங்குகிறோம்.
- தரமான சேலைகள், நியாயமான விலை மற்றும் வாடிக்கையாளர்களின் திருப்தி இவைகளே எங்கள் வியாபார நோக்கு!

**நல்லி சில்க்ஸ்**
**பட்டு சேலைகள்**

... ஈடு இணையற்ற பட்டு சேலைகளுக்கு மட்டுமே பிரத்யேகமான ஷோ-ரூம்

82, ராயப்பேட்டை ஹை ரோட்,
போன்: 74862
லஸ் மயிலாப்பூர் சென்னை-4

எமது துணை விற்பனை நிலையத்திற்கு விஜயம் செய்யுங்கள்!

நல்லி சில்க்ஸ்! பனாரஸ் ஹால் (போன்: 76444)

பனாரஸ் மற்றும் பான்ஸி ரக பட்டு சேலைகளும்
எல்லா சேலைகளுக்கும் மாட்சிங் சோளிகளும் கிடைக்கும்

# முத்தான முத்தையன்!

ராஜலக்ஷ்மி ராமமூர்த்தி

இன்று சென்னையை மட்டுமல்ல; தமிழ் நாட்டையே தொழிற் கல்லூரிகள் மயமாக மாற்றிய பெருமை, தொழில் நுட்பக் கல்லூரிகளின் இயக்குநராக இருந்த திரு முத்தையனையே சாரும். ஆசியாவிலேயே பெரிதான ஒரு 'டெக்னலாஜிகல் காம்ப்ளெக்ஸ்' சென்னையில்தான் உள்ளது.

சுமார் பத்தாண்டுகளுக்கு முன் அடையாற்றிலிருந்து சைதாப்பேட்டைக்குச் செல்பவர்கள் காட்டுப் பிரதேசத்துக்கு இடையே காவி வண்ணத்தில் ஒரு கட்டிடமும் மணிக்கூண்டும் தென்படுவதைப் பார்த்திருப்பார்கள். அதுதான் இந்தியாவிலேயே பழமையான கல்லூரிகளில் ஒன்றான கிண்டி பொறியியற் கல்லூரி. இன்று அந்தக் கல்லூரியைச் சுற்றிலும் புதுமையின் பொலிவோடு மயன் சிருஷ்டித்தது போல் பல மாளிகைகள் மிளிர்கின்றன. காடுகள் கட்டிடங்களாகவும், புதர்கள் புல்வெளிகளாகவும், முட் செடிகள் பூஞ்செடிகளாகவும் ஒற்றையடிப் பாதைகள் ஒய்யாரச் சாலைகளாகவும் காட்சி யளிக்கின்றன.







திறமையும் துணிவும் கைவரப்பெற்ற திரு முத்தையன் தம் கட்டிட வேலையின் தனிச் சிறப்பைக் காட்டும் வகையில் என்ஜினீயரிங் கல்லூரியை ஒட்டிப் பிரும்மாண்டமான கலையழகு வாய்ந்த கட்டிடங்களைக் கட்டுவித்தார்.

இவர் நிர்மாணித்துள்ள தொழில் நுட்ப இயக்குநர் தலைமை அலுவலகம் கட்டட அமைப்பில் தமிழகத்திலேயே மிகச் சிறந்த அலுவலகமாகத் திகழ்கிறது. அதில் ஒவ்வொரு பிரிவுக்கும் இடையிடையே அடுக்கறைகள் அமைத்துக் கொடுத்திருப்பது புதுமையான ஒன்று. கண்டோர் வியக்கும் இந்த அலுவலகத்தைக் குப்பைக் கூடையிலிருந்து குமாஸ்தாவின் ஃபைல்கள் வரையில் அக்கறை காட்டி ஒழுங்கு செய்தார் முத்தையன்.

கட்டிட முறையில் மேல் நாட்டுப் பாணியைக் கடைப்பிடிக்காமல் நமது தட்ப வெப்பங்களுக்கு ஏற்ற வகையில் மாற்றி அமைப்பார். கட்டிடத்தின் உள் அமைப்பும் சௌகரியங்களும் சரிவர அமையப் பெற்றால் வெளியழகும் தானாக அமையும் என்பது அவரது கருத்து. முகப்பை மட்டும்

○ திரு முத்தையன்.

○ தொழிற் பட்டரை - கிண்டி பொறி .இயற் கல்லூரி.

○ தொழில் நுட்பக் கல்வி இயக்குனர் அலுவலகம், சென்னை.

○ கவர்னர் திரு உஜ்ஜல்சிங்குடன் திரு முத்தையன் உரையாடுகிறார்.

○ திரு முத்தையன் குடும்பம்.

அழகுபடுத்தி விடுவதில் இவருக்கு நம்பிக்கையில்லை. விடுதியறைகளில் மாணவர்கள் எத்திசையில் தலை வைத்துப் படுத்தால் நல்லது என்று திட்டமிட்டு அந்தப் பக்கமே ஜன்னல்களை வைத்து விடுவார்.

இவரது கட்டிட சாதனைகளை உணர்ந்து கொண்ட வேறு பல ஸ்தாபனங்களும் தங்கள் கட்டிடங்களை நிர்மாணிக்கும் பணியை இவரிடமே ஒப்படைத்துப் பயனடைந்தன. இவரைப் பாராட்டுவதாக நினைத்துக் கொண்டு இவரை ஷாஜஹான் என்று யாரோ வர்ணித்தார்கள். இதனால் இவர் பெருமைப்படவில்லை. வேதனையடைந்தார். தாஜ்மஹால் கட்டிடக் கலையின் சிறப்புக்களுக்கு உறைவிடமாகத் திகழ்வது தான். ஆனால் முத்தையன் கட்டியதெல்லாம் தாஜ்மஹாலை விடப் பல்லாயிரம் மடங்கு நாட்டுக்குப் பயன் விளைவிப்பன அன்றோ?

தமிழகத்தின் முதல் தொழில் நுட்ப இயக்குநராகப் பதவி ஏற்றவர் திரு முத்





தையன். பொதுக் கல்வியின் ஓர் அங்கமாக இருந்த பொறி இயல் துறையையும், தொழில் துறையிடமிருந்த பாலிடெக்னிக்கையும் ஒருங்கிணைத்து அதன் தலைமையை ஏற்றுச் சிறந்த வகையில் நிர்வகித்துக் காட்டினார். மதுரை பல்கலைக் கழகத்தின் என்ஜினியரிங் போர்டின் தலைவராகவும், சென்னை — மதுரை பல்கலைக் கழக சிண்டிகேட் உறுப்பினராகவும், ஐ.ஐ.டி.யின் நிர்வாகக் குழு உறுப்பினராகவும் பணியாற்றினார். இவரது தலைமையின் கீழ் தொழிற் கல்வி தமிழகத்தில் வியத்தகு வளர்ச்சியடைந்தது.

அகில இந்திய ரீதியில் பொறியியலாளர் வளர்ச்சி இலட்சத்திற்கு 1.6 ஆக இருக்க, தமிழகத்தில் மட்டும் லட்சத்துக்கு 3.7 ஆக உயர்த்திய பெருமை இவருக்கு உண்டு.

இவர் தமிழகத்தின் முதல் டைரக்டராகப் பதவி ஏற்றபோது 7 பொறியியற் கல்லூரிகளும், 9 பாலிடெக்னிக்குகளும்தான் இருந்தன. இவரது உழைப்பின் வெற்றியால் தற்போது 12 பொறியியல் கல்லூரிகளும், 36 பாலிடெக்னிக்குகளும் உள்ளன. மேற்படி கல்விக்கூடங்களில் கற்போரின் எண்ணிக்கையும் முறையே 600 லிருந்து 2400 ஆகவும் 800லிருந்து 4800 ஆகவும் உயர்ந்துள்ளது.

பொறியியல் நிபுணர், முற்போக்குக் கல்வியாளர், சிறந்த நிர்வாகி, ஆராய்ச்சி வல்லுனர் ஆகிய எல்லாம் ஒருங்கே அமையப் பெற்ற திரு முத்தையன் நல்லதென்று முடிவு கட்டும் காரியங்களுக்கு எத்தனை இடையூறுகள் வந்தாலும் தோல்வி என்று அசிரத்தையாக ஒதுங்கி விடாமல் எதிர்த்து வெற்றி காண்பார்.

காலை ஏழு மணியிலிருந்து இரவு ஒன்பது மணி வரை தம்மைத் தம் பணிகளுக்கே அர்ப்பணித்து நின்ற திரு முத்தையனை எளிய மக்கள் கூட இயல்பாகக் கண்டு பேசி விட முடியும். நயமாகக் காரியத்தைச் சாதிப்பதில் வல்லவர். விரட்டலில் சாதிக்காததை அன்பில் சாதித்து விடுவார்.

தாம் போடும் வரை படங்களில் உள்ள குறைகளைக் காண்பித்துக் கொடுப்பவர்களுக்குத் தமது ரகசிய ஃபைலில் நல்ல 'ரிப்போர்ட்' தருவதாக ஊக்குவிப்பார். ஒரு சாதாரண சூபர்வைசரையும் ஊக்கப்படுத்தி அவரிடம் தோன்றும் கருத்துக்களை வரவேற்பார்.

தேர்வு முறைகளில் ரகசியங்களைப் பாதுகாக்கப் புதிய முறைகளைக் கையாண்டார். விடைத்தாள்களைப் பார்க்கும்போது அவைகள் எத்துறையைச் சேர்ந்த பாடத் திட்டம் என்பது மேலோட்டமாகத் தெரியாது. விடைத் தாள்களில் பொய்ப் பாதுகாப்பு நெம்பர் (Dummy Number System) என்ற முறையைக் கையாண்டு யாரும் திருத்து

பவர்களை அணுகா வண்ணம் ஏற்பாடுகள் செய்தார். தேர்வாளர்களை அமைப்பது சம்பந்தமான கடிதப் போக்குவரத்துக்களை மிகக் குறைந்த அளவே பயன்படுத்தி, தேர்வுக்கு மிகச் சமீபத்தில்தான் ஆய்வாளர்களை அமைப்பார். தேர்வு முடிவுகளை வகைப்படுத்த கம்ப்யூட்டரையும் உபயோகித்துச் சரிபார்ப்பார். கம்ப்யூட்டர் மூலமாக மாணவர்களின் மார்க்குகளை அச்சிட்டு வழங்கச் செய்வார்.

1962ம் வருடம் நடந்த ஒரு நிகழ்ச்சி அவரது எளிமைக்கும் இரக்க உணர்ச்சிக்கும் எடுத்துக்காட்டாக விளங்குகிறது.

பொறியியல் கல்லூரியில் சேரும் இண்டர்வ்யூ நடந்து கொண்டிருக்கும் காலம். ஒரு நாள் வெளியூரிலிருந்து வந்த ஒரு பையன் முத்தையன் வீட்டு வாசல்புறம் சத்தமிட்டு அழுத வண்ணம் அவரைப் பார்க்க வேண்டும் என்று நின்றான். விழிப்படைந்த முத்தையன் வெளியே வந்து பையனிடம் விஷயம் என்னவென்று கேட்டார். வந்திருந்த பையன் அன்று காலையில் தனக்குப் பொறியியல் கல்லூரியில் இண்டர்வ்யூ இருந்ததென்றும், தன் தாயார் இறந்து விடவே, சென்னைக்குக் குறித்த நேரத்தில் வரமுடியாமல் போய்விட்டதென்றும், அப்படி வராமல் போய்விட்டதால் தான் ஓர் சந்தர்ப்பத்தை இழந்து விட்டதாகவும் கூறி வருந்தி நின்றான். முத்தையன் அவனுக்கு ஆறுதல் கூறி மற்றொரு நாள் அவனுக்கு இண்டர்வ்யூ சந்தர்ப்பம் தருவதாகச் சொன்னார்! அதோடு நிற்காமல் தூங்கிக் கொண்டிருந்த தம் மகன் குணசேகரனை எழுப்பி வந்திருந்த பையனுக்கு உணவு தந்து இரவு தங்க ஏற்பாடும் செய்து தரச் சொன்னார். பின்னர் நடந்த இண்டர்வ்யூவில் அந்தப் பையன் கல்லூரியில் சேரத் தேர்ந்தெடுக்கப்பட்டான்!

ஒரு முறை சென்னையில் வேலை பார்க்கும் போர்ட்டர் ஒருவரின் மகனுக்கும், கார்ப்பரேஷனில் வேலை பார்க்கும் பியூன் ஒருவரின் மகனுக்கும், பொறியியற் கல்லூரியில் சேரச் சேலம், கோயம்புத்தூர் கல்லூரிகளில் இடம் தரப்பட்டது. முதல் வகுப்பு, இரண்டாம் வகுப்புப் பெற்றவர்களை எல்லாக் கல்லூரிகளுக்கும் சமமாகப் பங்கிட்டுக் கொடுக்கும் வழக்கத்தால் மேற்கண்ட ஊர்களில் அவர்களைப் போடும்படியாகி விட்டது. மேற்கண்ட ஏழைப் பணியாளர்களின் பையன்கள் இருவரும் தாங்கள் வெளியூரில் தொடர்ந்து கல்வி கற்க இயலாதென்றும், கல்வியை விட்டுவிட நேரிடும் என்றும், சென்னையிலேயே கொடுத்தால் தொடரலாம் என்றும் கோரிக்கை விடுத்தனர். இதனைக் கேள்வியுற்ற திரு முத்தையன் அவர்கள் மிகவும் வருந்தி, தம் கீழ் பணிபுரிந்த உதவியாளர்களிடம் ''விண்ணப்பத் தாள்களில் தந்தையின் தொழில் விவரம் பியூன், போர்ட்டர் என்று குறிக்கப்பட்டிருந்தும் எப்படி அவர்களை வெளியூரில் போட்டீர்கள்? அவர்கள் உணவுக்கே கஷ்டப்படும் நிலையில் உள்ளவர்கள்; வெளியூரில் போய் உணவுக்கும், விடுதி வாடகைக்கும் எவ்வாறு பணம் தர முடியும்?'' என்று கடிந்து கொண்டார். பிறகு அந்த மாணவர்கள் இரண்டாம் ஆண்டுப் படிப்பைச் சென்னையிலேயே தொடர அனுமதி அளித்தார்.

அதேபோல் செல்வந்தர்களின் பிள்ளைகள் படிக்க வேண்டுமென்றால் ''பணவசதி உள்ளவர்கள், வெளியூரில் போய்ப் படித்தால் என்ன?'' என்று கூறிவிட்டு, வெளியூர் செல்ல இயலாத ஏழை மாணவனுக்கே உள்ளூரில் படிக்க முதலிடம் தந்து உதவுவார்.

ஏழைக்கு இரங்கும் இவரது சுபாவத்தைக் காரணமாக வைத்துக் கொண்டு, மதுராந்தகத்தைச் சேர்ந்த குடியானவரின் மகன், தான் ஏழை என்றும் கோயமுத்தூருக்குச் சென்று படிக்க இயலவில்லை என்றும், கிண்டி பொறியியற் கல்லூரியிலேயே இடம் மாற்றித் தந்தால், சைதாப்பேட்டையிலுள்ள தன் சொந்தக்காரர் வீட்டில் தங்கிப் படித்துவிட முடியும், விடுதிச் செலவும் மீதியாகும் என்றும் வேண்டிக் கொண்டான். அதற்கு வழக்கம் போல் முத்தையன் சம்மதித்து விட்டார். ஆனால் சில நாட்களில் பொறியியற் கல்லூரியின் முதல்வருக்கு மேற்படி பையன் விடுதியில் சேர மனுப் போட்டான். இப்படி இடமாற்றம் வேண்டிப் பெறும் மாணவர்களுக்கு விடுதியில் சேர அனுமதியில்லையாதலால், கல்லூரி முதல்வர், முத்தையனிடம் இது பற்றித் தெரியப் படுத்தினார். கோபமே இன்னதென்று அறியாத முத்தையன் கொதித்தெழுந்து அந்த மாணவனை அழைத்து வரச் செய்தார். ''வெளியூரில் சென்று ஹாஸ்டலில் சேரப் பணம் இல்லை என்று சொல்லி விட்டு, சைதாப்பேட்டையிலிருக்கும் உறவினருடன் தங்கிப் படிக்கப் போவதாகக் கூறி, மாற்றம் கேட்டு வந்த உனக்கு, கிண்டி காலேஜ் ஹாஸ்டலில் சேர மட்டும் திடீரென்று பணம் எப்படி வந்தது? இப்படிப் பொய் கூறிய உனக்குக் கல்லூரியில் இடமே கிடையாது. போ!'' என்று மிகவும் கோபித்துக் கொண்டார்.

அந்தப் பையன் தடாலென்று அவர் காலடியில் விழுந்து விட்டான். ''என்னை மன்னித்து விடுங்கள்! தெரியாமல் செய்து விட்டேன்!'' என்று அவன் கூறியும் அவர் மன்னிக்க மறுத்து விட்டார். அந்த மாணவனும், காலையிலிருந்து, மாலை வரை அவர் அறைக்கு வெளியிலேயே உட்கார்ந்திருந்தான். முத்தையன் தம் உதவியாளருடன் வெளியே வந்த சமயம் அவன் எழுந்து பரிதாபமாக நின்று, ''இனி இப்படிச் செய்ய மாட்டேன்'' என்று மீண்டும் வேண்டிக் கொண்டான். முத்தையனின் உதவியாளர் இரக்கப்பட்டு, ''மன்னித்து விடுவோம்'' என்றதின் பேரில்தான் முத்தையனின் கோபமும் சற்றுத் தணிந்தது. ''உன் வாழ்வில் பொய் பேசுவது இதுவே கடைசித் தடவையாக இருக்கட்டும்'' என்று அறிவுறுத்தி அவனை அனுப்பி வைத்தார்.

சேப்பாக்கத்தில் பொதுப் பணித் துறை அலுவலகத்திலிருந்த போது, அவரிடம் ஒரு வயதான பியூன் இருந்தான். ஒரு நாள் அவன் அவரிடம் வந்து நெடுஞ்சாண்கிடையாகக் காலில் விழுந்தான். ''எழுந்திருப்பா!

நீ என்னை விடப் பெரியவன், என் காலில் விழுவதாவது ?'' என்று பதறி விட்டார் முத்தையன்.

''நம்ப பி. டபிள்யூ. டி. காம்பவுண்டிலே நாங்கள் கும்பிடுகிற பிள்ளையார் கோயிலே எடுக்கச் சொல்றாங்க ஐயா ! எப்படியாவது கோயிலே எடுக்காமப் பார்த்துக்கணும் !'' என்று முறையிட்டான்.

உண்மையான ஒரு பக்தி உள்ளத்தின் புலம்பலுக்குச் செவிசாய்த்த திரு முத்தையன் அந்தக் கோயிலே நிலைபெறச் செய்தார். அது மட்டுமல்ல, ஒவ்வொரு விநாயகர் சதுர்த்தி யன்றும் அந்தக் கோயிலுக்கு அவர் விஜயம் செய்யத் தவறுவதேயில்லை.

தொழில் துறையில் இவர் ஆற்றியுள்ள சாதனைகளை மெச்சி 1969ம் ஆண்டு குடியரசு தினத்தன்று இவருக்குப் பாரத அரசாங்கம் பத்மஸ்ரீ என்ற விருது கொடுத்துக் கௌர வித்தது. அப்போது தம்மைப் பாராட்டிய வர்களிடம் அவர், ''நான் இன்னும் அதிக வேலை செய்ய வேண்டும் என்று ஞாபகப் படுத்திக் கொண்டே யிருக்க எனக்கு இந்த விருதைத் தந்திருக்கிறார்கள் !'' என்று சொன்னார்.

அவர் கடைசியாகக் கலந்துகொண்ட செனட் மண்டபக் கூட்டத்தில் தமிழகத்தின் கல்வி, அதன் தரம் சம்பந்தமான உணர்ச்சி கரமான பேச்சில் ஈடுபட்டார். சிறிது நேரத்தில் நெஞ்சு வலி ஏற்பட்டு, உடனே ஆஸ்பத்திரியில் சிகித்சைக்கு அநுமதிக்கப் பட்டார். அப்போதுகூட அவர் தம் கீழ் உள்ள அதிகாரிகளுடனும், சிப்பந்திகளுட னும் உத்தியோக ரீதியில் முக்கிய பிரச்னைகள் குறித்துப் பேச விரும்பினார்.

உழைப்பு, உழைப்பு என்று துடித்த அவரது இதயம் ஓய்ந்து விட்டது. அயராது திட்டங்களைத் தீட்டிக் கொண்டிருந்த நெஞ்சம் நின்று போயிற்று. அவர் பிரிவு குறித்து வாடாத மனமில்லை.

நீண்ட வாழ்வு நிறைந்த வாழ்வாகி விடாது. நிறைந்த வாழ்வோ நீண்ட வாழ்வைவிட மேலானது. இந்த வகையில் திரு முத்தையன் பாக்கியசாலி !

# உருவத்தில் எளியவர்; உள்ளத்தால் உயர்ந்தவர்

டாக்டர் ஜாகிர் ஹுஸைன் பெர்லினில் படிப்பை முடித்துக் கொண்டு இந்தியா வுக்கு வந்ததும் உஸ்மானியா சர்வகலா சாலை மாதம் அறுநூறு ரூபாய் சம்பளத்தில் வேலையளிக்க முன்வந்தது. ஆனால் டாக்டர் ஜாகிர் ஹுஸைன் மாதம் முந்நூறு ரூபாய் சம்பளத்தில் ஜமியா மிலியா கல்வி ஸ்தாப னத்தில் வேலை ஒப்புக் கொண்டார். ஜமியா மிலியாவின் நிதி நிலைமை மோசமாகி வந்த போது அதை விட்டுப் போகாமல் அவர் மாதம் எழுபத்தைந்து ரூபாய் சம்பளத்தில் வேலை செய்ய ஒப்புக் கொண்டார். பின்னர், 1940ம் வருட இறுதியில்தான் ஜவாஹர் லால் நேருவின் வற்புறுத்தலின் மீது அலிகார் சர்வகலாசாலையின் உப அத்தியட்ச கர் பதவியை மேற்கொண்டார்.

□ □ □

பொதுவாகவே டாக்டர் ஜாகிர் ஹுஸை னுக்குப் பிரசங்கம் செய்யப் பிடிக்காது. 1962ல் அவர் உதவி ஜனாதிபதியாக இருந்தபோது, புத்த ஜயந்தியை ஒட்டி நடக்கவிருந்த வன மகோத்சவ விழாவை ஆரம்பித்து வைக்கத் தில்லி நிர்வாகத்தினர் அவரை அழைத்திருந்தனர். அவ்வழைப்பை டாக்டர் ஜாகிர் ஹுஸைன் ஒரு நிபந்தனை யின் மீது ஒப்புக் கொள்வதாகக் கூறியிருந் தார் — அதாவது விழாவில் அவர் பேசமாட் டார் ! நிர்வாகிகள் ஒப்புக் கொண்டனர். ஆனால் நேரே விழாவுக்குப் போனதும், நிர்வாகிகள் அவரை இரண்டு வார்த்தைக ளேனும் பேசுமாறு வற்புறுத்தினர். என்ன செய்வார், பாவம்? எழுந்திருந்தார். பின் வருமாறு கூறினார் :

''மரம் எல்லாருக்கும் நிழலைத் தந்து உதவுகிறது. ஆனால் அது தன்னைப் பற்றி ஒரு வார்த்தைகூடப் பேசுவதில்லை. இதுதான் மரம் நமக்கு அளிக்கும் படிப்பினை'' என்று சொல்லி விட்டு உட்கார்ந்து விட்டார்.

□ □ □

1923ல் டாக்டர் ஜாகிர் ஹுஸைன் மேல் படிப்புக்காக இங்கிலாந்து போகத் திட்டமிட்டிருந்தார். பாஸ்போர்ட் முதலியன வாங்கிப் புறப்பட்டும் விட்டார். வழியில் அவர் சிந்தனை வேகமாக வேலை செய்தது. 'பிரிட்டிஷ் அரசாங்கத்துடன் எவ்விதத்தி லும் ஒத்துழைக்கக் கூடாது என்று பிரதிக்ஞை எடுத்துக் கொண்டு விட்டு இப் போது இங்கிலாந்துக்குப் படிக்கப் போவது தமது பிரதிக்ஞையைக் காற்றில் விட்ட தாகும்; ஆகவே, இங்கிலாந்துக்குப் போகக் கூடாது' என்று முடிவு செய்து விட்டார். அவர் கப்பல் இத்தாலியை அடைந்தபோது, அங்கிருந்து அவர் நேரே ஜெர்மனியிலுள்ள பெர்லின் சர்வகலாசாலைக்குச் சென்று மூன்று ஆண்டுகள் படித்து டாக்டர் பட்டம் பெற்று இந்தியாவுக்குத் திரும்பினார்.

□ □ □

1946ல் காங்கிரஸும் முஸ்லிம் லீக்கும் சேர்ந்து அமைத்த மந்திரி சபையில் கல்வி மந்திரி பதவிக்கு, மகாத்மா காந்தி, முகமதலி ஜின்னா, ஜவாஹர்லால் நேரு, லியாகத் அலிகான் ஆகிய நால்வரும் ஒருமனதாக டாக்டர் ஜாகிர் ஹுஸைனைத் தேர்ந்தெடுத் தனர். ஆனால் அவர் காங்கிரசும் முஸ்லிம் லீக்கும் சண்டை போட்டுக் கொண்டிருக் கும் சூழ்நிலையில் கல்வித் துறையில் உருப்படி யான ஒரு சேவை செய்ய முடியாது என்று மந்திரி பதவியை மறுத்து விட்டார்.

— தொகுப்பு : எஸ். வி. எஸ்.

அஹிம்ஸைக்கு ஒரு சோதனை வைத்தது அந்தப் புத்தகம்! போலீசாருக்கும் தொண்டருக்கும் இடையே போராட்டம். மகாத்மா காந்தியின் முடிவை இருவருமே எதிர்நோக்கினர். அஹிம்ஸைக்கு நல்லதொரு விளக்கம் கிடைத்தது!

# புத்தகம் பெற்ற பெருமை!

**ப**ண்டித சுந்தர்லால் அவர்கள் 'பாரதத்தில் ஆங்கிலேயர் ஆட்சி' என்று ஒரு நூல் இயற்றியிருந்தார். பல பிரமுகர்களுக்கும் ஸ்தாபனங்களுக்கும் அதில் ஒவ்வொரு பிரதி அனுப்பியும் வைத்தார். ஆங்கிலேய அரசாங்கத்துக்குச் சந்தேகம் தட்டியது. அலகாபாத்தில் நூல் அச்சான அச்சகத்தில் கிடைத்த அத்தனை பிரதிகளையும் பறிமுதல் செய்து விட்டது. யார் யாருக்குப் பிரதிகள் அனுப்பப்பட்டிருந்தனவோ, அவர்களிடமிருந்தும் பறிமுதல் செய்ய உத்தரவு போட்டது. நாகபுரியில் யார் யாருக்கெல்லாம் புஸ்தகம் வந்திருந்ததோ, அவர்கள் பெயருக்கு வாரண்ட் பிறப்பிக்கப்பட்டது. புஸ்தகம் எரிந்து விட்டதாகச் சொன்னார் ஒருவர். காணாமற் போய்விட்டதாகச் சொன்னார் இன்னொருவர். புஸ்தகம் எங்கு இருக்கிறது என்று தெரியவில்லை என்றார் மற்றொருவர். ஆனால் நாங்களோ, ''புஸ்தகம் இருக்கிறது. இருந்தாலும் நாங்கள் தர மாட்டோம். நீங்கள் என்ன வேண்டுமானாலும் செய்து கொள்ளுங்கள்!'' என்று தெளிவாகச் சொல்லி விட்டோம்.

திலகர் வித்தியாலயத்தைச் சேர்ந்த 'சமர்த்த மேலா' என்னும் குழு அப்பொழுது மாகாணம் முழுவதிலும் சுற்றுப் பிரயாணம் செய்து கொண்டிருந்தது. அத்துடன் புத்தகமும் சுற்றிக் கொண்டிருந்தது. அதனால் எத்தனை தேடினாலும் புத்தகம் போலீசாருக்கு வீட்டில் கிடைக்காது என்பது தெளிவான விஷயம். எங்கள் நண்பர் தாதா தர்மாதிகாரி நூலைப் போலீசாரிடம் ஒப்படைத்துவிட வேண்டும் என்று கருத்துக் கொண்டிருந்தார். ''நாங்கள் இந்த நூல் சம்பந்தமாக மகாத்மாவுக்கு எழுதிக் கேட்கிறோம். அவரிடமிருந்து பதில் வந்ததும், அவர் சொல்வது போலச் செய்யச் சித்தமாயிருக்கிறோம்'' என்று போலீசாரிடம் சொன்னார். போலீசாரிடம் புத்தகத்தை ஒப்படைத்து விடுமாறு காந்தியடிகள் சொல்லி விடுவார் என்றே எனக்குத் தோன்றியது. ஆனால் எனக்கோ அது பிடிக்காத விஷயம். காந்திஜியின் பதில் வந்து விட்டதா என்பதை அறிந்து போகப் போலீசார் தினந்தோறும் வந்து போகலாயினர். 'இன்னும் பதில் வரவில்லை' என்று நாங்கள் சொல்லி வந்தோம்.

நூல் எங்களிடம் இருக்கிறது என்ற உண்மையைச் சொல்லி நாம் சத்தியத்தைக் காத்தோம். புத்தகத்தைத் தர முடியாது என்று கூறி அஹிம்ஸையைக் காப்பாற்றுகிறோம் என்றே எனக்குத் தோன்றியது.

புத்தகத்தைத் தந்து விடுகிறோம் என்று கூறுவதில் அஹிம்ஸை இருக்கலாம். ஆனால் அதோடு கூடவே பயங்கொள்ளித்தனமும் இருப்பதாக எனக்குப்பட்டது. புத்தகத்தைக் கொடுப்பதனால், அதில் உள்ள அரும்பெரும் உண்மைகளைத் திரையிட்டு மறைப்பதாக முடியும். அதனால் புத்தகத்தைக் கொடுத்து அதன் மூலம் கையாளப்படும் அஹிம்ஸையினால் அநீதிக்குப் பரிகாரம் தேடியதாகாது. அநீதிக்குத் தலை வணங்குவது துளிக்கூட உசிதம் இல்லை. அதனால் அறிவின் கடமை, அறிவுள்ளவனின் கடமை அதுவல்ல என்றே நான் அபிப்பிராயப்பட்டேன்.

சில நாட்களுக்கெல்லாம் மகாத்மா காந்தி கடிதத்துக்குப் பதில் அனுப்பினார். புத்தகத்தைக் கொடுக்க வேண்டாம் என்றும் அதில் தெளிவாகக் குறிப்பிட்டிருந்தார். புத்தகத்தைப் பற்றி ஸ்ரீ கிஜாரேயின் கருத்துத்தான் சரியானது என்றும் எழுதியிருந்தார். அதனால் எனக்கும் பண்டித சுந்தர்லால் அவர்களுக்கும் மிக்க மகிழ்ச்சி ஏற்பட்டது. ஏனெனில், பறிமுதலான நூலுக்கு இப்படி ஒரு பெருமை கிட்டியதல்லவா?

ஸ்ரீ தாதா தர்மாதிகாரி மகாத்மாஜியின் கடிதத்தைப் போலீசாருக்குக் காட்டினார். அதைப் படித்துப் போலீசார் நிராசை அடைந்தனர். மகாத்மா அஹிம்ஸையைக் கடைப்பிடிப்பவர். ஆதலால் புத்தகத்தைக் கொடுக்கச் சொல்லி விடுவார் என்றே போலீசாரும் நம்பியிருந்தனர். ஆனால் தாதா தர்மாதிகாரியைப் போலவே, போலீசாரும் நம்பிக்கை இழக்கும்படியாகி விட்டது. போலீசார் முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டு போய் விட்டனர். நாங்களோ புத்தகத்தைக் கொடுப்பதில்லை என்று தீர்மானமாக உறுதி பூண்டிருந்தோம். இச்சம்பவத்தின் மூலம் மகாத்மா காந்தி அஹிம்ஸையைப் பின்பற்றுவதிலே அதிதீவிரவாதியாயிருந்தார், ஆனால் அவருடைய அஹிம்ஸைக் கொள்கை சிக்கலானது அல்ல என்பதும் தெளிவாகியது.

[மராட்டி மூலம்: ஸ்ரீ அப்பாஜி ராமச்சந்திர கிஜாரே : தமிழாக்கம்: அக்ஷயம்]

## உலோகம் கனமானது...



## ஆனால் பிரைட் பிளாஸ்டிக் சாமான்கள் இலேசானவை





உலோகத்தின் உறுதி, கண்ணாடியின் எழில், ஆனால் இவற்றின் குறைபாடுகளற்றது—அதுதான் உங்களுக்கான பிளாஸ்டிக். இலேசு, நீடித்த உழைப்பு, வண்ணங்கள், சுத்தம், வசதி. இவையனைத்தையும் உங்களுக்கென அற்புதமாக இணைத்து வழங்குகிறது பிரைட் பிளாஸ்டிக்.

பிரைட் பிளாஸ்டிக்கில் விதவிதமான வகைகள், வகை வகையான பொருட்கள். அளவிலாப் பயனளிக்கும் ஏராளமான சாமான்கள். சீப்புகள், தட்டுகள், சோப்புப் பெட்டிகள், குவளைகள், ஜாடிகள், சாமான் கூடைகள், வாளிகள், பேஸின்கள், டிரேக்கள் இன்னும் பலப்பல.



**பிரைட்**

பிரைட் பிரதர்ஸ் பிரைவேட் லிட்.,
156—ஏ, தார்தேவ் ரோடு,
பம்பாய்-34.



# பொன்னியின் செல்வன்

## அமரர் கல்கி

### முன்கதைச் சுருக்கம்

சோழ சாம்ராஜ்யத்தைச் சுந்தர சோழ சக்கரவர்த்தி அரசு புரிந்து வந்த காலத்தில் இரண்டு பெண்மணிகள் மிகவும் செல்வாக்குப் பெற்றிருந்தனர். ஒருவர் சுந்தர சோழரின் செல்வப் புதல்வியான குந்தவை தேவி. இன்னொரு பெண்மணி, சோழ நாட்டின் தனாதிகாரி பெரிய பழுவேட்டரையரின் பத்தினியான நந்தினி. இருவரும் இராஜரீக காரியங்களில் சிரத்தை கொண்டவர்கள். ஒருவருக்கொருவர் மாறுபட்டு நின்று தத்தம் நோக்கத்தை நிறைவேற்ற முயன்று வந்தார்கள்.

சுந்தர சோழரின் மூத்த புதல்வன் ஆதித்த கரிகாலன் காஞ்சியில் பொன் மாளிகை கட்டினான். தந்தையை அம்மாளிகையில் வந்திருக்கும்படி வேண்டி வந்தியத்தேவன் என்னும் வீரனிடம் ஓலை அனுப்பினான். வந்தியத்தேவன் சுந்தர சோழரிடம் ஓலையைச் சேர்ப்பித்துவிட்டுப் பழையாறைக்குச் சென்று குந்தவை தேவியைச் சந்தித்தான். சுந்தர சோழருக்குப் பிறகு அவருடைய இரு புதல்வர்களுக்கும் பட்டமில்லாமல் செய்து மதுராந்தக சோழனுக்குப் பட்டம் கட்டுவதென்று பழுவேட்டரையர் முதலிய பெருந்தரத்து அதிகாரிகள் சதி செய்து கொண்டிருந்தார்கள். வந்தியத்தேவன் தான் வரும் வழியில் கடம்பூர் சம்புவரையரின் மாளிகையில் அந்தச் சதியைப் பற்றித் தெரிந்து கொண்டிருந்தான். குந்தவையிடம் அதைத் தெரிவித்தான். குந்தவை வந்தியத்தேவனை இலங்கைக்குச் சென்று அங்கே போரில் ஈடுபட்டிருந்த தன் தம்பி அருள்மொழிவர்மனை அழைத்து வரும்படி அனுப்பினாள். வந்தியத்தேவன் கோடிக்கரை சென்று, தன்னைப் பிடிக்க வந்த பழுவூர் ஆட்களிடம் அகப்படாமல் தப்பி, பூங்குழலி என்னும் பெண்ணின் உதவியால் படகேறி இலங்கையை அடைந்தான்.

அந்தக் காலத்தில் இலங்கையில் மாதோட்டம் என்னும் கடற் துறை நகரம் பிரசித்தி பெற்றிருந்தது. இராமேசுவரத்திலிருந்து அத்துறைமுகத்துக்குக் கப்பல் போக்குவரவு இடைவிடாமல் நடந்து வந்தது. மாதோட்டத்தில் சோழ சேனாதிபதி பூதிவிக்கிரமகேசரியைப் பார்ப்பதற்கு வந்தியத்தேவன் விரும்பினான். சோழ வீரர்கள் அவன் மீது ஐயுற்றுப் பாதுகாப்பில் வைத்தார்கள்.

வந்தியத்தேவன் காஞ்சியிலிருந்து தஞ்சைக்கு வரும் வழியில் ஆழ்வார்க்கடியான் என்னும் வீர வைஷ்ணவனைத் தெரிந்து கொண்டிருந்தான்.

இப்போது வந்தியத்தேவன் சிறைப்பட்டிருந்த அறையின் சுவர்மேல் ஏறி ஆழ்வார்க்கடியான் வந்து திடீரெனக் குதித்தான்.

### இருபத்தாறாம் அத்தியாயம்

## இரத்தம் கேட்ட கத்தி!

அந்த வீர வைஷ்ணவர் எப்படி அங்கு வந்து சேர்ந்தார், எதற்காக வந்திருக்கிறார் என்பதைப் பற்றி வந்தியத்தேவனுடைய உள்ளம் கலக்கமடைந்திருந்தது. ஆயினும் அதை அவன் வெளியில் காட்டிக் கொள்ளவில்லை.

"என்ன வேடிக்கையைச் சொல்வது? சற்று முன்னால் தான் உங்களைப்பற்றி நினைத்துக் கொண்டேன். நிமிர்ந்து பார்த்தால் தாங்கள் சுவரேறிக் குதித்து வருகிறீர்கள்.



'கொடுக்கிற தெய்வம் கூரையைப் பொத்துக் கொண்டு கொடுக்கும்' என்று சொல்கிறார்களே, அது சரி தான்!'' என்றான்.

''அப்பனே! சற்று முன்னால் என்னைப் பற்றி நினைத்தாயா? எதற்காக? இந்த நர மனுஷனைப் பற்றி நீ ஏன் நினைக்க வேண்டும்? சாக்ஷாத் இராம பிரானைப் பற்றி நினைத்தாலும் பயன் உண்டு....''

''தங்கள் வாய்க்குச் சர்க்கரை தான் போட வேண்டும். முதலில் நான் இராம பிரானைப் பற்றித்தான் நினைத்தேன். இங்கு வரும்போது கடலின் அக்கரையில் இராமேசுவரக் கோபுரம் தெரிந்தது. இராமர் அங்கேதானே சிவனைப் பூஜை செய்து இராவணனைக் கொன்ற பாவத்தைப் போக்கிக் கொண்டார் என்று எண்ணினேன்...''

''நில்லு தம்பி நில்லு!''

''நிற்க முடியாது சுவாமிகளே! என்னால் நிற்க முடியாது. நடந்து நடந்து, நின்று நின்று என் கால்கள் கெஞ்சுகின்றன. தாங்களும் கருணை கூர்ந்து உட்காருங்கள். அப்புறம், இராமரைப் பற்றி நினைத்தேனா! உடனே இராம பக்தனாகிய அனுமாரைப் பற்றி நினைவு வந்தது. அனுமாரைப் பற்றி எண்ணியதும் தங்கள் நினைவு வந்தது. உடனே பார்த்தால், தாங்களே வந்து விட்டீர்கள். கவரேறிக் குதித்து மட்டும் வந்தீர்களா! அல்லது அனுமாரைப் போல் கடலையே தாண்டிக் குதித்து வந்தீர்களா?''



''தம்பி! மகா பக்த சிரோமணி யான அனுமார் எங்கே? அடியேன் எங்கே? அனுமார் இந்த இலங்கைக்கு வந்து அக்ஷய குமாரன் முதலிய ராட்சதர்களை அதாஹதம் செய்தார். என்னால் கேவலம் ஒரு பூனைக்கு வழி சொல்ல முடியவில்லை. இதோ பார்! எப்படி ஒரு பூனை என் கால்களைப் பிறாண்டி இரத்தக் காயம் செய்து விட்டது?'' என்று ஆழ்வார்க்கடியான் தன் கால்களில் ஏற்பட்டிருந்த காயங்களைச் சுட்டிக் காட்டினான்.

''அடடா! அப்படியா நேர்ந்துவிட்டது? ஆனால் கேவலம் ஒரு பூனையோடு தாங்கள் சண்டைக்குப் போன காரணம் என்ன?...''

''நான் சண்டைக்குப் போகவில்லை. அதுவேதான் என்னுடன் வலுச் சண்டைக்கு வந்தது....''

''அது எப்படி, சுவாமிகளே!''

''உன்னைத் தேடிக் கொண்டு நான் வந்தேன். வாசற் காவலர்களுக்கு டிமிக்கி கொடுத்து விட்டுக் கொல்லைப் புறச் சுவர் வழியாக ஏறிக் குதித்தேன். கீழே நான் கால் வைக்கிற இடத்தில் வேண்டுமென்றே அந்தப் பூனை தன் வாலை நீட்டிக் கொண்டிருந்தது. என் கால் அதன் வாலை அப்படி இலேசாகத் தான் தொட்டது. இருந்தாலும் அந்தப் பொல்லாத பூனை தன் கால் நகங்களினால் என்னைத் தாக்கத் தொடங்கி விட்டது. தம்பி! நான் சொல்வதைக் கேள்! புலியோடு சண்டை போட்டாலும் போடலாம்; ஆனையோடு சண்டை போட்டாலும் போடலாம்; பூனையோடு மட்டும் சண்டை போடக் கூடாது!''

''சுவாமிகளே! அந்த இரகசியம் எனக்கு இப்போது தெரிந்து போய் விட்டது....''

''எந்த இரகசியம்?''

''அந்தப் பூனை இங்கே என் அறைக்கும் வந்தது. என் நெற்றியை வாலினால் தடவிக் கொடுத்தது. என்னோடு கொஞ்சி விளையாடியது. என்னை நகத்தினால் பிறாண்டவில்லை. உம்மை மட்டும் தாக்கிப் பிறாண்டியது. அதற்குக் காரணம் என்ன? வைஷ்ணவர்களைக் கண்டால் பிடிக்காத வீர சைவப் பூனை அது!....''

''ஓகோ! அப்படியோ ? இந்த யோசனை எனக்குத் தோன்றாமல் போயிற்றே? வீர சைவப் பூனை என்று தெரிந்திருந்தால் தடியினால் நாலு திருச் சாத்துச் சாத்தி யிருப்பேனே?''

''உம் கையில் தடி இல்லாததே நல்லது. ஏனென்றால் இந்த க்ஷேத்திரத்துக்கு வந்ததிலிருந்து என் உடம்பிலே கூட வீர சைவ இரத்தம் கொதிக்கத் தொடங்கி யிருக்கிறது. என் உறையிலுள்ள கத்தி 'வீர வைஷ்ணவ இரத்தம் வேண்டும்' என்று அழுகிறது. நீர் எனக்குச் செய்த பெருதவியை நினைத்து அதை அடக்கி வைத்திருக்கிறேன்!''

''அப்பனே! நான் உனக்கு ஓர் உதவியும் செய்யவில்லையே!''

''வைஷ்ணவரே! தங்கள் சகோதரியாகிய பழுவூர் இளைய ராணியைப் பற்றி எனக்கு நீர் சொல்லவில்லையா?''

''ஆமாம்; சொன்னேன்.''

''பழுவூர் இளைய ராணி கடம்பூருக்கு அருகில் மூடு பல்லக்கில் போன போது திரை விலகியதே, அப்போது அந்தத் தேவியை நீர் எனக்குச் சுட்டிக் காட்டவில்லையா?''

''ஆம், ஆம். அதனால் என்ன?''

''சொல்லுகிறேன். அதே பல்லக்கு தஞ்சைக் கோட்டைக்கருகில் சென்று கொண்டிருந்த போது நான் பார்த்தேன். பல்லக்குச் சுமப்பவர்கள், வேண்டுமென்று வந்து என் குதிரையின் மேல் இடித்தார்கள். நான் நியாயம் கோருவதற்காகப் பல்லக்கின் திரையை விலக்கினேன்...''

''உள்ளே இருந்தது யார்?''

''பழுவூர் இளைய ராணி சாக்ஷாத் நந்தினி தேவிதான்!''

''ஓஹோ! நீ அதிர்ஷ்டசாலி! நான் ஆனமட்டும் முயன்றும் நந்தினியைப் பார்க்க முடியவில்லை. உனக்கு அது கைகூடி விட்டதே!''

''அதிர்ஷ்டம் வரும்போது அப்படித்தான் தானாகவே வரும்!''

''அப்புறம்?''

''நான் தங்கள் பெயரைச் சொன்னேன். தேவிக்கு முக்கியமான செய்தி தாங்கள் சொல்லி அனுப்பி யிருப்பதாகக் கூறினேன்...''

''நானும் பார்த்தாலும் பார்த்தேன், உன்னைப் போல் கூசாமல் பொய் சொல்லுகிறவனை இந்தப் பிரபஞ்சத்தில் பார்த்ததே கிடையாது...''

''வைஷ்ணவரே ! என் மூதாதைகளுக்குக் கவிஞர்களின் பேரில் மிக்க பிரியம். அவர்களே கவிதைகளும் பாடியிருக்கிறார்கள்....''

''அதனால் என்ன?''

''கவி பரம்பரை இரத்தம் என் உடம்பிலும் ஓடுகிறது. அதனால் சில சமயம் கற்பனை பொங்கி வருகிறது. உம்மைப் போன்ற பாமரர்கள் அதைப் பொய் என்று சொல்வார்கள்....''

'' நல்லது ; அப்புறம் என்ன நடந்தது ?''

''என் கற்பனையைக் கேட்டு வியந்து நந்தினிதேவி பழுவூர் முத்திரை மோதி

ரத்தைக் கொடுத்தார். அரண்மனையில் வந்து பார்க்கச் சொன்னார்....''

''போய்ப் பார்த்தாயா ?''

'' பின்னே, பார்க்காமலிருப்பேனா ? உடனே போய்ப் பார்த்தேன். என் வீர தீர பராக்கிரமங்களைப் பற்றி நானே சொல்லித் தெரிந்து கொண்ட நந்தினி தேவி எனக்கு ஒரு முக்கியமான வேலை கொடுத்தார்.''

''அது என்ன வேலை?''

'' இந்த இலங்கையில் மதுரைப் பாண்டிய வம்சத்து மணிமகுடமும் இந்திர மாலையும் இருக்கின்றனவாம். இலங்கை அரச குடும்பத்தார் மலை நாட்டில் ஒளித்து வைத்திருக்கிறார்களாம். 'அந்த நகைகளை எப்படியாவது தேடிக் கொண்டு வந்துவிடு !' என்று சொல்லி அனுப்பினார். அது இவ்வளவு கஷ்டமான வேலை என்று எனக்குத் தெரியாமல் போயிற்று....''

''பெரிய பழுவேட்டரையரின் பொக்கிஷத்தில் உள்ள ஆபரணங்கள் ஆயிரம் கழுதைப் பொதி கனமிருக்கும் என்கிறார்கள். அவ்வளவும் இளைய ராணிக்குப் போதவில்லையாக்கும். சரி, கொண்டு வந்தால் உனக்கு என்ன தருவதாகச் சொன்னாள் ?''

''தஞ்சைக் கோட்டைக் காவலைச் சின்னப் பழுவேட்டரையரிடமிருந்து பிடுங்கி எனக்குத் தந்து விடுவதாகச் சொன்னார்.....''

''தம்பி! தம்பி! தஞ்சைக் கோட்டைக் காவல் உனக்குக் கிடைத்தால், தட்டுத் தடங்கலில்லாமல் நான் கோட்டைக்குள் வரலாம் அல்லவா ?''

''அழகாய்த் தானிருக்கிறது. எனக்குத் தஞ்சைக் கோட்டைக் காவல் கிடைக்கிற வழி என்ன? நான்தான் இந்த ஊரில் வந்து இப்படி அகப்பட்டுக் கொண்டேனே ?'' என்று வந்தியத்தேவன் மிகவும் சோகமான குரலில் கூறினான்.

''ஏன் அகப்பட்டுக் கொண்டாய் ? எதற்காக உன்னைச் சிறைப்படுத்தியிருக்கிறார்கள், தெரியுமா?'' என்று ஆழ்வார்க்கடியான் கேட்டான்.

''பழுவூர் ராணி கொடுத்த முத்திரை மோதிரத்தை என்னுடன் கொண்டு வந்தேன். இங்கேயும் அதற்குச் செல்வாக்கு இருக்கும் என்று எண்ணினேன். அதுதான் தவறாய்ப் போயிற்று.''

'' அது தவறுதான், தம்பி, பெரிய தவறு! இங்கே சேநாதிபதி கொடும்பாளூர்ப் பெரிய வேளார் அல்லவா? பழுவூர் வம்சத்துக்கும் கொடும்பாளூர் வம்சத்துக்கும் பெரும் பகை என்பது உனக்குத் தெரியாதா ?''

''தெரியாமல் வந்துதான் அகப்பட்டுக் கொண்டேன். என்ன செய்கிறதென்று தெரியவில்லை....''

''தம்பி! நீ கவலைப்பட வேண்டாம்!''

''கவலைப்படாமல்....?''

''உன்னை விடுதலை செய்வதற்காகவே நான் இங்கு வந்திருக்கிறேன்.''

''ஓகோ !''

''உன்னை ஒரு சமயம் ஓர் உதவி கேட்டேன். நீ மறுத்துவிட்டாய். ஆயினும் நான் உனக்கு உதவி செய்ய வந்தேன். என்னுடன் எழுந்து வா! இந்தக் கணமே இச்சிறையிலிருந்து தப்பி விடலாம்!''

''வைஷ்ணவரே ! தாங்கள் சீக்கிரமே இங்கிருந்து போய் விடுங்கள்!''

''ஏன், அப்பனே....!''

''என் உறையிலுள்ள கத்தி அதிகமாகப் புலம்பத் தொடங்கியிருக்கிறது. 'ஒரு வீர வைஷ்ணவனுடைய இரத்தம் வேண்டும்' என்று கேட்கிறது.''

''கேட்டால் கேட்கட்டுமே ! என் உடம்பில் வேண்டிய இரத்தம் இருக்கிறது. உன் கத்திக்குத் தேவையானால் கொஞ்சம் சாப்பிட்டு விட்டுப் போகட்டும். நீ எழுந்து என்னுடன் வா !''

''இல்லை, நான் வர முடியாது !''

''காரணம் என்ன?''

'' கண்ணைச் சுற்றிக் கொண்டு எனக்குத் தூக்கம் வருகிறது. எத்தனையோ நாளாக இரவில் நான் தூங்கவில்லை. இன்றைக்கு நன்றாய்த் தூங்குவது என்று தீர்மானித்திருக்கிறேன். அதனால்தான் பூனையைக் கூடத் தூக்கி எறிந்தேன்.''

''தம்பி ! இது என்ன இப்படிச் சொல்லுகிறாய் ? இளையபிராட்டி குந்தவை தேவியிடம் நீ ஒப்புக் கொண்ட காரியத்தை இப்படித்தானா நிறைவேற்றப் போகிறாய்? இந்த ஓலையைப் 'பொன்னியின் செல்வன்' கையில் சேர்ப்பிக்கும் வரையில் இரவென்றும் பகலென்றும் பார்க்காமல் பிரயாணம் செய்வேனென்று நீ ஒப்புக் கொள்ளவில்லையா !....'' இவ்விதம் சொல்லி ஆழ்வார்க்கடியான் தன்னுடைய மடியிலிருந்த ஓலையை எடுத்து வந்தியத்தேவனிடம் கொடுத்தான்.

அதை ஆர்வத்துடன் வந்தியத்தேவன் வாங்கிக் கொண்டான். இது வரையில் ஆழ்வார்க்கடியான் தன் வாயைப் பிடுங்கி வஞ்சித்து ஏமாற்றப் பார்க்கிறான் என்றே அவன் எண்ணியிருந்தான். இப்போது அந்த எண்ணம் மாறியது.

'' இந்த ஓலை தங்களிடம் எப்படி வந்தது ?'' என்று கேட்டான்.

'' சேநாதிபதி விக்கிரமகேசரிதான் கொடுத்தார். இதோ இந்தப் பழுவூர்

பனே இலச்சினையையும் திருப்பிக் கொடுக்கச் சொன்னார். உனக்கு எப்போது இஷ்டமோ அப்போது பிரயாணம் புறப்படலாம் என்றும் சொன்னார்....''

''வைஷ்ணவரே! தங்களுக்கு என் மனமார்ந்த நன்றி.''

''நன்றியை யெல்லாம் சேர்த்து வைத்துக் கொள். சமயம் வரும்போது கொடுக்கலாம்.''

''ஐயா! இளவரசர் தற்சமயம் எங்கே இருக்கிறார் என்று தெரியுமா?''

''அது யாருக்கும் தெரியாது. அநுராதபுரத்திலிருந்து மலை நாட்டுக்குச் சென்றிருக்கிறார். தேடிக் கண்டு பிடித்தேயாக வேண்டும். உன்னோடு வழிகாட்டிப் போகும்படி சேநாதிபதி எனக்கும் கட்டளை யிட்டிருக்கிறார். நீ விரும்பினால் வருகிறேன்.''

வந்தியத்தேவனுக்கு மீண்டும் சிறிது சந்தேகம் உண்டாயிற்று.

''சுவாமிகளே! புறப்படுவதற்கு முன்பு சேநாதிபதியை நான் பார்க்கலாமா?'' என்று கேட்டான்.

''அவசியம் பார்க்கலாம். பார்த்து விட்டுத்தான் பிரயாணம் கிளம்ப வேண்டும். வானதி தேவியைப் பற்றிச் சேநாதிபதியிடம் தெரிவியாமல் போகலாமா!'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

இதைக் கேட்ட வந்தியத்தேவன் இந்த வீர வைஷ்ணவனுக்கு உண்மையிலேயே மந்திர வித்தை கைவந்திருக்குமோ என்று வியப்படைந்தான்.

## இருபத்தேழாம் அத்தியாயம்

# காட்டுப் பாதை

கொடும்பாளூர்ப் பெரிய வேளாராகிய சேநாதிபதி பூதி விக்கிரமகேசரி வயதுமுதிர்ந்த அநுபவசாலி; பல போர்க்களங்களில் பழந் தின்று கொட்டையும் போட்டவர். சோழ குலத்தாருடன் நெருங்கிய நட்பும் உறவும் பூண்டவர்.

அவருடைய சகோதரராகிய கொடும்பாளூர்ச் சிறிய வேளார் சில ஆண்டுகளுக்கு முன்னால் இலங்கைப் போர்க்களத்தில் வீர சொர்க்கம் அடைந்தார். அவருடன் சென்ற சைன்யமும் தோல்வியடைந்து திரும்ப நேர்ந்தது. அந்தப் பழியைத் துடைத்துக் கொடும்பாளூரின் வீரப் பிரதாபத்தை மீண்டும் நிலைநாட்டுவதில் அவர் பெரிதும் ஆத்திரம் கொண்டிருந்தார். ஆகையாலேயே சற்று வயதானவராயிருந்தும் இலங்கைப் படைக்குத் தலைமை வகித்து அங்கு வந்திருந்தார்.

இலங்கைப் போரை நன்கு நடத்த முடியாமல் பழுவேட்டரையர்களால் விளைந்த இடையூறுகளைப் பற்றி முன்னமே பார்த்தோமல்லவா? நெடுங்காலமாக அந்த இரண்டு சிற்றரசர் குலத்துக்கும் ஏற்பட்டிருந்த போட்டியும் பகைமையும் இதனால் இப்போது அதிகமாய் வளர்ந்திருந்தன.

எனவே, பழுவூர் முத்திரையிட்ட இலச்சினையுடன் அகப்பட்டுக் கொண்ட வந்தியத் தேவன் பாடு சேநாதிபதி பெரிய வேளாரிடம் கஷ்டமாகத்தான் போயிருக்கும். அதிர்ஷ்டவசமாக அநிருத்தப் பிரம்மராயரிடம் இதைப் பற்றி அவர் பிரஸ்தாபிக்க நேர்ந்தது. வந்தியத்தேவனைப் பற்றிய உண்மையை ஆழ்வார்க்கடியானிடமிருந்து தெரிந்து கொண்ட அநிருத்தர் அவனையே சேநாதிபதி பூதி விக்கிரமகேசரியிடம் சென்று உண்மையைத் தெரியப்படுத்தும்படி அவசரமாக அனுப்பி வைத்திருந்தார்.

வாணர் குலத்து வீர குமாரனை மேலும் கீழும் உற்றுப் பார்த்த சேநாதிபதி பூதி விக்கிரமகேசரிக்கு அவனிடம் நல்ல அபிப்பிராயம் உண்டாகியிருக்க வேண்டும். அன்பான குரலில், ''தம்பி! உன்னை இங்கே சரியாகக் கவனித்துக் கொண்டார்களா? தங்குவதற்கு இடம், உணவு எல்லாம் சரிவரக் கிடைத்ததா?'' என்று கேட்டார்.

''ஆம், சேநாதிபதி! ஒரு குறைவும் இல்லாமல் பார்த்துக் கொண்டார்கள். கூறிய ஏவலைச் செய்வதற்கு வாசலில் ஐந்தாறு சேவகர்கள் எப்போதும் காத்திருந்தார்கள். தங்குவதற்கு இடம் தாராளமாய்க் கிடைத்தது. இராப் போஜனத்துக்கு ஒரு பூனையை அனுப்பி வைத்தார்கள். அதை நான் சாப்பிட எண்ணியிருக்கையில் இந்த வீர வைஷ்ணவர் வந்து கெடுத்துவிட்டார்! அந்த வீர சைவப் பூனைக்கு இந்த வீர வைஷ்ணவரைக் கண்டதும் கோபம் வந்து விட்டது. இவரை நகத்தினால் பிறாண்டிவிட்டு அது ஓடிவிட்டது!'' என்றான்.

சேநாதிபதி, ''ஓகோ! இந்தப் பிள்ளை ரொம்ப வேடிக்கைக்காரப் பையனாயிருக்கிறான்! திருமலை! இவன் சொல்வது உண்மையா?'' என்று கேட்டார்.

''சேநாதிபதி! இவன் முன்னோர்கள் கவிஞர்களாம். ஆகையால் இவனிட

மும் கற்பனா சக்தி அதிகம் இருக்கிறது. மற்றபடி இவன் சொல்வது உண்மை தான். இவனை நான் பார்க்கப் போன இடத்தில் ஒரு பூனை என் கை கால் களைப் பிறாண்டி விட்டது!'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

அவருடைய உடம்பில் ஏற்பட்டிருந்த இரத்தக் காயங்களைப் பார்த்துச் சேநாதிபதி பூதி விக்கிரமகேசரி விழுந்து விழுந்து சிரித்தார்.

''ஒரு பூனையா உன்னை இந்தப் பாடு படுத்தி விட்டது? நல்ல வேளை! காட்டுப் பாதையில் போவதற்கு இந்த வீரன் உனக்கு வழித்துணையாகக் கிடைத்திருக்கிறான்....''

''சேநாதிபதி! எனக்கு வழித்துணை தேவையில்லை. என்னுடைய கைத்தடியே போதுமானது. அதை எடுத்துக் கொள்ளாமல் நான் இவனைப் பார்க்கப் போனது தான் பிசகாய்ப் போய் விட்டது....''

'' அப்படியானால் இவனுக்கு நீ வழித்துணையாக இரு! புறப்படுவதற்கு முன்னால் இவனுக்குச் சரியாகச் சாப்பாடு பண்ணி வைத்துவிட்டு அப்புறம் கிளம்பு. தம்பி! இப்போது இலங்கையில் சாப்பாட்டு வசதி கொஞ்சம் குறைவு. இங்கேயுள்ள ஏரி குளங்களை யெல்லாம் மகிந்தனுடைய சேனை வீரர்கள் கரையை உடைத்துவிட்டுப் போய் விட்டார்கள். அதனால் விவசாயம் சரியாக நடப்பதில்லை. விவசாயம் செய்வதற்கு ஆட்களும் இல்லை. இந்த நாட்டு மக்களே பட்டினி கிடக்கிறார்கள். நம் வீரர்களுக்கு எப்படி உணவு கிடைக்கும்? நம்முடைய நாட்டிலிருந்தும் அரிசி போதிய அளவு அனுப்பி வைப்பதில்லை....''

''சேநாபதி! அது எனக்குத் தெரிந்த விஷயந்தான். பழையாறை வீரப்படை வீடுகளின் வழியாக இளையபிராட்டி சென்றபோது பெண்டுகள் அவரிடம் முறையிட்டதைக் கேட்டுக் கொண்டிருந்தேன். 'இலங்கையில் எங்கள் கணவன்மார்களும் பிள்ளைகளும் பட்டினி கிடக்கிறார்களாமே!' என்று முறையிட்டார்கள்....''

''ஓகோ! இது அங்கேயும் தெரிந்து முறையிட்டார்களா? நல்லது, நல்லது! அதற்கு இளைய பிராட்டி என்ன மறுமொழி சொன்னார்கள்?''

''சேநாதிபதி பெரிய வேளார் இலங்கையில் இருக்கும் வரையில் நம் வீரர்களைப் பட்டினியால் சாக விடமாட்டார்; நீங்கள் கவலைப்பட வேண்டாம் என்று ஆறுதல் சொன்னார்....''

''ஆகா! இளைய பிராட்டி அவ்விதம் சொன்னாரா? உலகத்தில் எத்தனையோ இராஜ குலங்களில் எவ்வளவோ புகழ் பெற்ற கன்னிகைகள் பிறந்ததுண்டு. ஆனால் எங்கள் இளைய பிராட்டிக்கு இணையானவர் வேறு யாருமில்லை....''

''அடுத்தபடியாகச் சொல்லக்கூடிய இளவரசி ஒருவர் உண்டு, சேநாபதி!''

''அது யார், தம்பி!''

''கொடும்பாளூர் இளவரசி வானதி தேவிதான்!''

''ஆகா! இந்தப் பிள்ளை ரொம்பப் பொல்லாதவன். இவனுடைய கற்பனா சக்தி என்னையே மயக்கி விடும் போலிருக்கிறது. தம்பி! பழையாறையில் எங்கள் குலவிளக்கை நீ பார்த்தாயா?''

'' பார்த்தேன், ஐயா! இளைய பிராட்டியுடன் இணை பிரியாமல் இருந்து வருகிறவரை எப்படிப் பார்க்காமல் இருக்க முடியும்? வைத்தியர் வீட்டிலிருந்து வழி அனுப்ப இரண்டு பேருமாகத்தான் யானை மீது ஏறி வந்தார்கள். தீபத்தை ஒளியும், மலரை மணமும், உடம்பை நிழலும் பிரியாதது போல் வானதிதேவியும் இளையபிராட்டியைப் பிரிவது கிடையாது....''

''அடேடே! இந்தப் பிள்ளை வெகு புத்திசாலி! திருமலை! இவனை நம் பொக்கிஷ சாலைக்கு அழைத்துச் சென்று வேண்டிய ஆடை ஆபரணங்களைக் கொடுத்து அழைத்துப் போ!''

''ஐயா! எல்லாம் தற்சமயம் பொக்கிஷத்திலேயே இருக்கட்டும். திரும்பிப் போகும்போது நான் வாங்கிக் கொண்டு போகிறேன்.''

''தம்பி! எங்கள் வீட்டுப் பெண்ணைப் பற்றி, வானதியைப் பற்றி, — இளையபிராட்டி எனக்குச் செய்தி ஒன்றும் அனுப்பவில்லையா?....''

'' சேநாதிபதி! தங்களிடம் நான் பொய் சொல்ல விரும்பவில்லை.''

''யாரிடமும் எப்பொழுதும் பொய் சொல்ல வேண்டாம், தம்பி!''

''இந்த வீர வைஷ்ணவர் விஷயத்தில் மட்டும் தயவுசெய்து விலக்கு அளிக்க வேண்டும், சேநாதிபதி! இவரிடம் உண்மை சொன்னால் என் தலை வெடித்துப் போய்விடும்....''

''வேண்டாம், வேண்டாம்!...இளைய பிராட்டி எனக்கு ஒன்றும் செய்தி அனுப்பவில்லையாக்கும்!''

''தங்களுக்குச் செய்தி அனுப்பவில்லை. ஆனால்....''

''ஆனால், என்ன?''

'' யாருக்கு அனுப்ப வேண்டுமோ அவருக்கு அனுப்பியிருக்கிறார்கள். வானதி தேவியைப் பற்றி இளவரசரிடம் நேரில் சில செய்திகளைச் சொல்லும்படி பணித்திருக்கிறார்கள்....''

''உன்னைப் போன்ற புத்திசாலிப் பிள்ளையை நான் பார்த்ததேயில்லை!''

என்று கூறிச் சேநாதிபதி பெரிய வேளார் வந்தியத்தேவனை மார்போடு அணைத்துக் கொண்டார். பின்னர்,

''சரி; இனி வீண் பொழுது போக்க வேண்டாம்; புறப்படுங்கள்!'' என்று சொன்னார்.

''ஐயா! இந்த வீர வைஷ்ணவர் என்னோடு அவசியம் வரத்தான் வேணுமா? இவர் இல்லாமல் நான் தனியே போகக் கூடாதா?''

''இவர் வருவதில் உனக்கு என்ன ஆட்சேபம்?''

''எனக்கு ஆட்சேபம் இல்லை. என் இடையில் செருகியுள்ள கத்தி சுத்த வீர சைவக் கத்தி. அது 'வீர வைஷ்ணவ இரத்தம் வேண்டும்' என்று வெகு நாளாகக் கேட்டுக் கொண்டிருக்கிறது. என்னை மீறி அது வெளிக் கிளம்பி விட்டால் இவர்பாடு ஆபத்தாய்ப் போய்விடுமே என்று பார்க்கிறேன்.''

''அப்படியானால் அந்தக் கத்தியை இங்கே விட்டு விட்டு வேறு கத்தி எடுத்துக் கொண்டு போ! திருமலை உன்னோடு வராவிட்டால் நீ இளவரசரைக் கண்டு பிடிக்க முடியாது. அவர் இருக்குமிடமே யாருக்கும் தெரியாது. மேலும் இளவரசரிடம் கொடுப்பதற்கு இவனும் ஒரு முக்கியமான ஓலை கொண்டு வருகிறான். ஆகையால் இரண்டு பேருமாகச் சேர்ந்து போவதே நல்லது! வழியில் ஒருவரோடொருவர் சண்டை பிடித்துக் கொண்டு காரியத்தைக் கெடுத்து விடாதீர்கள்!''

இவ்விதம் சொல்லி விட்டுப் பெரிய வேளார் மறுபடியும் வந்தியத்தேவனை அருகில் அழைத்து அவன் காதோடு ரகசியமாகச் சொன்னார்:

''தம்பி! இவனால் உன் காரியத்துக்கு இடைஞ்சல் ஒன்றும் நேராது. ஆனாலும் ஜாக்கிரதையாகவே இரு! இளவரசரிடம் இவன் என்ன செய்தி சொல்லுகிறான் என்பதைத் தெரிந்து வந்து என்னிடம் சொல்லு!''

ஆழ்வார்க்கடியானைத் தனக்கு ஒற்றனாகப் பின்னோடு அனுப்புகிறார்கள் என்று முதலில் வந்தியத்தேவன் எண்ணியிருந்தான். இப்போது அவனுக்குத் தான் ஒற்றன் என்று ஏற்பட்டது. இந்த நிலைமை வந்தியத்தேவனுக்கு மிகவும் பிடித்திருந்தது.

**வ**ந்தியத்தேவனும் ஆழ்வார்க்கடியானும் இரண்டு வீரர்கள் துணையுடன் அன்றிரவே புறப்பட்டார்கள்.

பிரயாணம் தொடங்கி இரண்டு நாள் கிழக்கு நோக்கிச் சென்றார்கள். முதலில் கொஞ்ச தூரம் ஊர்ப்புறங்களாக இருந்தன. ஓரளவு ஜன நடமாட்டமும் இருந்தது. வர வரக் காட்டுப் பிரதேசமாக மாறி வந்தது. முதலில் குட்டை மரங்கள் நிறைந்த காடாயிருந்தது. பின்னர் வானை அளாவிய பெரிய மரங்கள் அடர்ந்த அரண்யங்களாக மாறின. இடையிடையே ஏரிகள் தென்பட்டன. ஆனால் அவற்றின் கரைகள் பல இடங்களில் இடிந்து கிடந்தன. தண்ணீர் நாலாபுறமும் ஓடிப் போய் ஏரிகள் வறண்டு கிடந்தன. கழனிகள் பயிர் செய்யப்படாமல் கிடந்தன. இன்னும் ஓரிடத்தில் விசாலமான பிரதேசத்தில் தண்ணீர் தேங்கியிருந்தது. பாலாவி நதியின் கரை வெட்டப்பட்டபடியால் அதன் தண்ணீர் நதியோடு போகாமல் வெளியில் கண்டபடி சிதறிச் சென்று அப்படித் தண்ணீர்த் தேக்கம் உண்டானதாகத் தெரிந்தது.

இந்தக் காட்சிகளையெல்லாம் பார்த்துக் கொண்டு அவர்கள் சென்றார்கள். நீடித்த யுத்தத்தினால் அந்தப் பிரதேசத்தில் ஏற்பட்டிருந்த அழிவுகளைப் பற்றி ஆழ்வார்க்கடியான் வந்தியத்தேவனுக்கு எடுத்துச் சொல்லிக்கொண்டு போனான். யுத்தம் எவ்வளவு கொடுமையானது என்று அடிக்கடி அவன் கூறினான். அதைப் பற்றி இருவருக்கும் விவாதம் பலமாக நடந்தது.

இரண்டு தினங்களுக்குப் பிறகு பிரயாண திசை மாறியது. கிழக்கு திசையில் சென்றவர்கள் இப்போது தெற்கு நோக்கித் திரும்பினார்கள். வர வர வனப் பிரதேசங்கள் அடர்த்தியாகிக் கொண்டு வந்தன. சம வெளிப் பிரதேசம் மாறிப் பாறைகளும் சிறிய குன்றுகளும் எதிர்ப்பட்டன. இன்னும் தூரத்தில் பெரிய மலைத் தொடர்கள் வானை அளாவிய சிகரங்களுடன் தென்பட்டன. காடுகளின் தோற்றம் பயங்கரமாகிக் கொண்டு வந்தது. பட்சிகளின் இனிய குரல்களோடு ஏதேதோ இனந் தெரியாத கோரமான சத்தங்கள் கலந்து எழுந்தன.

அத்தகைய காட்டு வழிகளில் கொடிய மிருகங்களினால் ஏற்படக் கூடிய அபாயங்களைப் பற்றிப் பேச்சு எழுந்தது. நரிகள், சிறுத்தைப் புலிகள், கரடிகள், யானைகள் ஆகிய மிருகங்கள் அக்காடுகளில் உண்டு என்று ஆழ்வார்க்கடியான் கூறினான்.

''நரிகள் கூட்டமாக வந்தால் அபாயம் அல்லவா?'' என்று வந்தியத்தேவன் கேட்டான். கடம்பூர் மாளிகையில் அவன் கண்ட பயங்கரக் கனவு அவனுக்கு நினைவு வந்தது.

''நரிக் கூட்டத்தைக் காட்டிலும் ஒற்றை நரியின் ஊளையினால் அபாயம்


கோ-கே டால்க்
நாளும் கமழும் நறுமணம்-இதயம் துளைக்கும் புது மணம்


Helene Curtis
Go Gay
TALC
கமழும் மென் மணம், 'கம்' மென்ற புதுமை
கோ-கே வாங்குவீர், பட்டென்ற மென்மை.
தொட்டு உறவாடும் உன்னத இன்பம்,
தூய்ய மேனியில் புத்துணர்வு பொங்கும்.
குடும்பம் முழுமைக்கும் உகந்தது, சிக்கனம்,
கொண்டு செல்வீர் வீடு, கோ-கே டால்கம்.
ஹெலன் கர்டிஸ்
—லண்டன் . பாரிஸ் . நியூயார்க்
ஜே. கே. ஹெலன் கர்டிஸ் தயாரிப்பு.
CMJKT-13-172 TAM

நொடிப் பொழுதில் பளிச்சிடும் தூய்மைக்கே...




நுரைவளமோங்கும் விம்

கடுமை வாய்ந்த, மலிவான தேய்ப்புச் சாதனங்களை நம்பியிருக்க முடியுமா? கண்டிப்புடன் பெற்றிடுவீர் நுரைவளமோங்கும் விம். பேசின், தொட்டி, பீங்கான் பாண்டங்கள், பாத்திரங்கள், எதுவாயினும் சரி—விம் பட்ட இடமெல்லாம் ஒளிப் பிழம்பே. துப்புரவாக்குவதில் அதிக ஆற்றல் வாய்ந்த விம், விடாப்பிடியான பிசுக்குக்கும் விடைகொடுக்கும். துப்புரவான இல்லங்களுக்கு அடையாளம் ஒப்பிலாத விம் ஒளி.
ஓங்கிய ஒளிபெறவே—வாங்குவீர் விம்,

**பாங்கான இல்லங்களிலே..விம், பளிச்சிடும் இல்லங்களிலே விம்**

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

அதிகம்!'' என்று ஆழ்வார்க்கடியான் கூறினான்.

''அது எப்படி, சுவாமிகளே!''

''இந்தக் காடுகளில் நரியும் சிறுத்தையும் சேர்ந்து வேட்டைக்குப் போகும். சிறுத்தை அங்கங்கே பதுங்கிக் கொண்டிருக்கும். நரி அங்குமிங்கும் ஓடி இரை தேடும். மனிதனையோ மான் முதலிய சாது மிருகத்தையோ கண்டால் ஒற்றைக் குரலில் ஊளையிடும். உடனே சிறுத்தை பாய்ந்து வந்து விழுந்து கொல்லும். இப்படிச் சிறுத்தைக்கு ஒற்றன் வேலை செய்யும் நரிக்கு 'ஓரி' என்று பெயர்....''

இப்படி இவர்கள் பேசிக் கொண்டு போனபோது சற்றுத் தூரத்தில் கடல் குமுறுவது போன்ற சத்தம் கேட்டது. ''கடற்கரையிலிருந்து வெகு தூரம் வந்து விட்டோமே? இது என்ன சத்தம்?'' என்று வந்தியத்தேவன் கேட்டான்.

''பக்கத்தில் எங்கேயோ ஏரி அல்லது குளம் இருக்க வேண்டும். அதில் தண்ணீர் குடிப்பதற்கு யானை மந்தை வருகிறது போல் தோன்றுகிறது!'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

''ஐயையோ! யானை மந்தையில் நாம் அகப்பட்டுக் கொண்டால்....?''

''அதைப் பற்றிக் கொஞ்சமும் பயமில்லை. மந்தையில் வரும் யானைகள் நம்மை ஒன்றும் செய்துவிட மாட்டா. நாம் ஒதுங்கி நின்றால் அவை நம்மைத் திரும்பிக்கூடப் பார்க்காமல் வழியோடு போய் விடும்!''

இதற்குள் அவர்களுடன் வந்த வீரர்களில் ஒருவன் ஒரு மரத்தின் மேல் ஏறி நாலு பக்கமும் பார்த்தான்.

''ஐயா! ஐயா! ஒற்றை யானை வருகிறது! மத யானை! மரங்களை முறித்து அதம் செய்து கொண்டு வருகிறது!'' என்று கூவினான்.

''ஐயோ! இது என்ன சங்கடம்! எப்படித் தப்புகிறது!'' என்று ஆழ்வார்க்கடியான் பீதியுடன் கூறி அங்குமிங்கும் பார்த்தான்.

''மந்தை யானைகளுக்குப் பயமில்லை என்றீர். ஒற்றை யானைக்கு ஏன் இவ்வளவு பயம்?'' என்று வந்தியத்தேவன் கேட்டான்.

''அப்பனே! மதங்கொண்ட ஒற்றை யானை சாதாரண ஆயிரம் யானைகளுக்குச் சமமானது. அதன் மூர்க்கத்தனத்துக்கு முன்னால் யாரும் எதிர்த்து நிற்க முடியாது....''

''எங்கள் மூன்று பேர் கையில் வேல் இருக்கிறது. உம்முடைய கையில் ஒரு தடி இருக்கிறதே!''

''ஒரு மத யானையை ஆயிரம் வேல்களாலும் எதிர்க்க முடியாது. அதோ ஒரு செங்குத்தான குன்று தெரிகிறதே! அதில் நாம் ஏறிக் கொண்டால் ஒரு வேளை தப்பித்துக் கொள்ளலாம். ஓடிப் பாருங்கள்!''

இவ்வாறு சொல்லி ஆழ்வார்க்கடியான் குன்றை நோக்கி ஓடினான். மற்றவர்களும் பின்தொடர்ந்தார்கள். ஆனால் கொஞ்ச தூரம் ஓடியதும் எதிரில் ஓர் ஆழமான செங்குத்தான பள்ளத்தாக்கு இருப்பதைப் பார்த்தார்கள். அவர்கள் நின்ற இடத்துக்கும் சற்றுத் தூரத்தில் இருந்த குன்றுக்கும் மத்தியில் அந்தப் பள்ளத்தாக்கு இருந்தது. பள்ளத்தாக்கின் விளிம்பில் வந்து அவர்கள் நின்றார்கள். யானையோ அதிவேகமாக அவர்களை நெருங்கி வந்து கொண்டிருந்தது. மனிதர்களைப் பார்த்ததும் அதன் வெறி அதிகமாகி யிருக்க வேண்டும். துதிக்கையைத் தூக்கிக் கொண்டு அந்த மத யானை பிளிறிய போது அதன் சத்தத்தில் அண்டகடாகங்கள் வெடிக்காமல் இருந்தது அதிசயந்தான். அதைக் கேட்ட மனிதர்கள் நாலு பேரும் காதைப் பொத்திக் கொண்டார்கள். தலைக்கு ஒரு பக்கம் சிதறி ஓடினார்கள்.

யானை மேலும் நெருங்கி வந்தது: மேலும் மேலும் நெருங்கி வந்தது. ஆழ்வார்க்கடியானைக் குறி வைத்துக் கொண்டு, அவன் நின்ற இடத்தை நோக்கி அது வருவது போலத் தோன்றியது. இன்னும் இரண்டு அடி அப்பால் எடுத்து வைத்தால் ஆழ்வார்க்கடியான் அதல பாதாளத்தில் விழும்படி நேரிடும். பக்கவாட்டில் ஓடுவதற்கும் வசதியாக இல்லை. செடி கொடிகள் அடர்ந்திருந்தன. ஓடித் தப்பிக்கத்தான் முடியுமா?

வந்தியத்தேவன் கையில் வேலை எடுத்தான். ஆனால் அந்த மதயானையின் வேகத்தை இந்திரனுடைய வஜ்ராயுதத்தினால்கூட அச்சமயம் தடுக்க முடியாது என்று அவனுக்குத் தோன்றியது. வேலைப் பிடித்த கை பலவீனமுற்றுத் தளர்ந்து சோர்ந்தது.

அந்நேரத்தில் ஆழ்வார்க்கடியானுடைய செய்கை வந்தியத்தேவனுக்கு ஒரு பக்கத்தில் சிரிப்பை உண்டாக்கிற்று. கையில் தடியை ஓங்கியவண்ணம், ''நில், நில்! அப்படியே நில்! மேலே வந்தாயோ தொலைந்தாய்! உன்னைக் கொன்று குழி வெட்டி மூடி விடுவேன்! ஜாக்கிரதை!'' என்று ஆழ்வார்க்கடியான் மத யானையைப் பார்த்து இரைந்தான்! (தொடரும்)

நண்பர்கள் புடை சூழ பருகி மகிழுங்கள் கோகா கோலா. விறுவிறுப்பான அதன் சுவையே தனி. அதன் ஒவ்வொரு துளியிலும் உற்சாகம் துள்ளுவதை உணர்ந்து இன்புறுங்கள். எப்போதும் கேட்டு அருந்துங்கள் கோகா கோலா, ஐஸ்-குளிர் கோகா கோலா!

புத்துணர்வூட்டிடும் அருமை, கோகா கோலாவின் பெருமை!

கோகா கோலா, கோகா கோலா கம்பெனியின் ரெஜிஸ்டர்டு டிரேடு மார்க்

**எத்தருணத்திலும் இனிமை, கோகா-கோலாவின் மகிமை!**




CHCC-5-162-TAM

## செய்திப் படங்கள்!



அந்தமான் தீவுக்குத் தனியே இருவர் படகு செலுத்தும் போட்டியில் வெற்றி கண்ட கோஷ்டியின் தலைவர் லெப்டினண்ட் ஜார்ஜ் டியூக் நாபாவில் உள்ள ஹார்லிக்ஸ் தொழிற்சாலைக்கு விஜயம் செய்தார். அவரை ஹார்லிக்ஸ் தொழிற்சாலையைச் சேர்ந்த லால் வரவேற்று உபசரித்தார்.





ப்ருக் பாண்ட் ஸ்தாபனத்தினர் சிக்கரி கலந்த தமது புதிய காப்பி தயாரிப்பான 'ப்ரு'வைத் தாஸப்பிரகாஷில் பத்திரிகை நிருபர்களுக்கு அறிமுகப்படுத்தி வைத்தனர்.



தென் பிராந்தியத்தைச் சேர்ந்த சுமார் 200 டி. ஐ. சைக்கிள் விற்பனையாளர்களின் மகாநாடு டி. ஐ. கம்பெனிகளின் ஆதரவில் ஏப்ரல் 18–20ல் அம்பத்தூர் தொழிற்சாலை மத்தியிலேயே கூடிற்று. டி. ஐ. ஸ்தாபனத்தின் மானேஜிங் டைரக்டர் திரு ஏ. எம். எம். அருணாசலமும், துணை மானேஜிங் டைரக்டர் திரு எம். வி. அருணாசலமும் மகாநாட்டுக்கு வந்திருந்த விற்பனையாளர்களை அன்புடன் வரவேற்றார்கள்.

ஜயப்பூரில் இந்தியாவில் உள்ள மாக்ஸ்முல்லர் பவனங்கள் சேர்ந்து நடத்திய அகில இந்திய கர்நாடக இசைப் போட்டிகளில் வீணை இசைக்கு குமாரி கே. முத்துலக்ஷ்மி முதல் பரிசு ரூபாய் இரண்டாயிரம் பெற்றார். இவர் வீணை வித்வான் எம். ஏ. கல்யாணகிருஷ்ண பாகவதரின் புதல்வி.



சமீபத்தில் ஜயப்பூரில் ராம்பாக் அரண்மனையில் திரு வி. கே. சுப்பிரமணியன் அவர்களின் வர்ண ஓவியக் கண்காட்சியை மகாராணி காயத்ரி தேவி தொடங்கி வைத்தார்.



# ராமாயணம்

## ராஜாஜி

## 10. கொழுமுகத்துக் குழந்தை

**வி**தேஹ மன்னரான ஜனகர் மிகவும் நல்ல முறையில் தம் தேசத்தை ஆண்டு வந்தார். தசரதச் சக்கரவர்த்திக்குப் பழைய மித்திரர். தசரதன் புத்திரப் பேற்றுக்காகச் செய்த பெரிய யாகத்துக்கு அரசர்களை அழைத்த போது ஜனகரிடம் தூதர்களை அனுப்ப வேண்டாம். மந்திரிகளே நேரில் போய் அழைக்க வேண்டும் என்று தனி உத்தரவிட்டான். ஜனகர் ஒரு ராஜ ரிஷி; சூரர்; எல்லா சாஸ்திரங்களையும் நன்றாகக் கற்றவர்; வேத வேதாந்தங்களில் நிபுணர்; நியமம் காத்தவர்; பிரம்ம ஞானி; கடமைகளைச் செய்தே சித்தியடைவதைப் பற்றி அர்ச்சுனனுக்கு எடுத்துச் சொல்லும்போது கண்ணன் ஜனகரைச் சிறந்த உதாரணமாக எடுத்துச் சொன்னான். அவதார தேவி சீதையை மகளாகப் பெறத் தகுதி கொண்ட மகான்.

ஒரு காலத்தில் ஜனக மகாராஜா யாகம் செய்வதற்கென்று இடம் கண்டு அதைத் தாமே கலப்பை பிடித்து உழுதார். உழுது புதரும் பூண்டுமாக இருந்த பூமியைத் திருத்தி ஒழுங்குபடுத்திக் கொண்டிருக்கும்போது மண்ணில் ஒரு திவ்ய ரூபமான பெண் குழந்தையைக் கண்டார். ஜனகருக்குக் குழந்தை இல்லை. தரையில் புரண்டு உடலெல்லாம் மண் பூசிக் கிடந்த அக் குழந்தையைப் பூதேவியே நமக்குத் தந்த வரம் என்ற மகிழ்ச்சி பரவசமாகக் கையில் எடுத்துக் கொண்டு தம் பிரிய பாரியையிடம் சென்று "இதோ நமக்குக் கிடைத்த பெருந் தனம்! யாக பூமியில் இவளை அடைந்தேன். இவளே நம்முடைய சந்தானம்" என்று குழந்தையைப் பட்டமகிஷியிடம் தந்தார். அவளும் அக்குழந்தையைத் தான் பெற்ற குழந்தையாகவே வளர்த்தாள். கம்பர் பாடியிருக்கும் மிக அழகிய பாட்டை இவ்விடம் சொல்லலாம்.

பூதேவியை நாம் நேரில் பார்க்க முடியாது. உழுகின்ற கொழுமுகத்தில் தன் அபார சௌந்தரியத்தை அழகிய பச்சைப் பயிர்களின் வாயிலாகக் காட்டுகிறாள். உதிக்கும் சூரியனுடைய கிரணங்களுக்குச் சமமான பொலிவுடன் முளைக்கும் பயிர்களில் விளங்குகிறாள் பூமாதேவி. உள்ளே மறைந்து நிற்கும் தேவியின் முழு அழகு நமக்குத் தெரியாது. அந்தப் பூதேவியே சீதாதேவியாக வெளிப்பட்டு ஜனகருடைய கலப்பைக் கொழுமுகத்தில் தோன்றினாள். கடலைக் கடைந்தபோது அமுதத்தோடு எழுந்த ஸ்ரீதேவியும் சீதையின் அழகைக் கண்டு வியந்து தொழுவாள் என்று கம்பர் பாடுகிறார்.

> **உழுகின்ற கொழுமுகத்தின்**
> **உதிக்கின்ற கதிரின் ஒளி**
> **பொழிகின்ற புவிமடந்தை**
> **உருவெளிப்பட் டெனப்புணரி †**
> **எழுகின்ற தெள்ளமுதோ(டு)**
> **எழுந்தவளும் இழிந்(து) ஒதுங்கத்**
> **தொழுகின்ற நன்னலத்துப்**
> **பெண்ணரசி தோன்றினள்**

பாட்டில் மொழிச் சிக்கனம் அதிகம். பொருளோ மிக அடர்த்தி. இது கம்பர் பாடல்களின் தனிப் பண்பு.

தெய்விகக் குழந்தையான சீதையை மிகவும் அன்போடு ஜனகரும் அவர் பிரிய பத்தினியும் வளர்த்தார்கள்.

விவாகத்துக்குரிய காலம் வந்தது. இவளை விட்டுப் பிரிய வேண்டுமே என்று ஜனகர் துக்கப்பட்டார். தெய்விகப் பெண்ணாகிய இவளை மனைவியாகப்

---

† புணரி - பாற்கடல்.

பெறக்கூடிய அரச குமாரன் யார் என்று யோசித்து, ஒருவரையும் காணாமல் வெகு காலம் ஜனகர் வருத்தப்பட்டார். அரசர்கள் பலர் வந்து கேட்டார்கள். ஆனால் அவர்களில் யாரும் சீதையைப் பெறும் தகுதி வாய்ந்தவராக ஜனகர் மதிக்கவில்லை. இந்த நிலையில் ஒரு நாள் ஜனகர் நிச்சயித்தார். முன்னொரு சமயம் மகா யாகம் செய்த காலத்தில் வருணன் ஜனகருடைய யாகத்தைப் போற்றி ருத்ர வில்லையும் இரண்டு அம்பறாத் தூணிகளையும் ஜனகருக்குத் தந்திருந்தான். அந்த வில்லானது மிகப் புராதன தெய்விகமான வில். அதைச் சாமானிய ஜனங்கள் கையால் அசைக்கக் கூட முடியாது. எடுத்து, வளைத்து, நாண் ஏற்றுவதைப் பற்றிச் சொல்லவே வேண்டாம்! முடியாத காரியம். ஜனகர் அரச சமூகத்துக்குத் தெரியப்படுத்தினார்.

''என்னிடமிருக்கும் வருணதேவப் பிரசாதமான இந்த வில்லை எந்த அரசகுமாரன் வளைத்து நாண் பூட்டுகிறானோ அவனுக்கு என் மகள் சீதையைத் தருவேன். இதுவே என் மகளுடைய சுயம்வர நிபந்தனை.''

சீதையின் அழகைப் பற்றிக் கேள்விப்பட்டு, பல அரசகுமாரர்கள் வந்து வில்லைப் பார்த்துவிட்டு ஒன்றும் செய்ய முடியாமல் திரும்பினார்கள்.

## 11. சகரன்

**வி**சுவாமித்திரர் தலைமையில் புறப்பட்ட ரிஷிகள் மாட்டு வண்டிகளில் மிதிலை நோக்கி வடக்கே சென்றார்கள். ஆசிரம வனத்திலிருந்து பட்சிகள், மான்கள் எல்லாம் கூடவே சென்றதைப் பார்த்து விசுவாமித்திரர் அவற்றை அன்புடன் அங்கேயே நிறுத்தினார்.

சோண நதிக் கரை சேர்ந்ததும் மாலையாயிற்று. அங்கே அந்த இரவு தங்கினார்கள். அந்த இடத்தில் பூர்வ கதைகளை ராஜ குமாரர்களுக்கு முனிவர் சொல்ல இரவு சந்தோஷமாகக்



கழிந்தது. அடுத்த நாள் காலை எழுந்து ஒரு நதியைத் தாண்டினார்கள். ஜலம் ஆழமில்லாதிருந்தபடியால் நடந்தே தாண்டினார்கள். பின்பு நடுப் பகலில் கங்கைக்கரையை அடைந்தார்கள். எல்லாரும் கங்கையில் ஸ்நானம் செய்து தேவர்களுக்கும் ரிஷிகளுக்கும் முன்னோர்களுக்கும் தர்ப்பணம் செய்தார்கள். அங்கேயே ஆகாரம் சமைத்துப் பூஜை செய்து, போஜனம் செய்தார்கள்.



எல்லோரும் விசுவாமித்திரரைச் சுற்றி உட்கார்ந்தார்கள்.

''முனிவரே! கங்கையின் வரலாற்றைச் சொல்ல வேண்டும்'' என்று ராஜகுமாரர்கள் ஆவலுடன் கேட்க, முனிவரும் சொல்லப் புகுந்தார்.

பர்வத ராஜனை ஹிமவானுக்கும் மனைவி மனோரமைக்கும் அபூர்வ லட்சணம் பொருந்திய இரண்டு புதல்விகள் இருந்தார்கள். மூத்தவளான கங்காதேவியைத் தேவர்களின் பிரார்த்தனையின் பேரில் ஹிமவான் தேவலோகத்துக்கு அனுப்பிக் கொடுத்தான். இளைய குமாரி உமை சங்கரனை விரும்பிப் பெரும் தவம் புரிந்தாள். பரமசிவன் திருப்தியடைந்து உமாதேவியைத் தன் பத்தினியாகப் பெற்றான். ஹிமவானுடைய இரு பெண்களும் இவ்வாறு மிகப் புண்ணிய நிலையை அடைந்தார்கள். எல்லாப் பாவங்களையும் போக்கும் கங்காதேவி தேவலோகத்திலேயே இருந்து வந்தாள்.

அயோத்தியாதிபதி சகரன் என்ற மகாராஜன் வெகு நாள் சந்தானமில்லாமல் வருந்தினான். கேசினி, சுமதி என்ற தன் இரு பத்தினிகளையும் அழைத்துக் கொண்டு இமயமலையில் தவம் செய்தான்.

பிறகு முனிவர் அவன் தவத்தைக் கண்டு மகிழ்ந்து, 'சந்தானம் பெறுவாய்' என்று வரம் தந்தார்.

''வீரனே! நீ மகத்தான சந்தானம் பெறுவாய். அபார கீர்த்தியும் பெறுவாய். உன் பத்தினிகளில் ஒருத்தி ஒரு புத்திரனைப் பெறுவாள். உன்னுடைய வம்சம் அவன் வழியாகப் பெருகும். இன்னொரு பத்தினி பலவான்களான அறுபதினாயிரம் புத்திரர்களைப் பெறுவாள்'' என்று ஆசீர்வதித்தார்.

ராஜ பத்தினிகள் முனிவரைப் பணிந்து, ''சுவாமி! யாருக்கு ஒரே மகனும் யாருக்குப் பல குமாரர்களையும் தந்தீர்?'' என்று கேட்டார்கள்.

''ஒருத்தி பெறும் ஒரே மகன் வழியாகத்தான் வம்சம் பெருகும். மற்றவள் பெறும் அநேக புத்திரர்கள் பலவான்களாக வளர்ந்து பெரும் புகழ் பெறுவார்கள். உங்களில் யாவருக்கு எது இஷ்டம்?'' என்று முனிவர் கேட்டார்.

மக்களின் ஆசை பலவிதம். கேசினியானவள் வம்சம் வளர்க்கும் ஒரு மகன் தனக்குப் போதும் என்றாள். சுமதியோ பலமும் கீர்த்தியும் அடையப் போகும் அநேக மக்களைப் பெற விரும்பினாள். ''அப்படியே யாகட்டும்''- என்று முனிவர் சொன்னார். வரம் தந்த முனிவரை வலம் வந்து வணங்கி இரு மனைவிமாருடன் அரசன் மிக்க திருப்தியோடு நகரத்துக்குத் திரும்பிப் போனான்.

கொஞ்ச காலம் கழிந்த பின் கேசினியானவள் அசமஞ்சன் என்ற மகனைப் பெற்றாள். சுமதி வடிவமற்ற ஒரு பிண்டத்தைப் பிரசவித்தாள். அந்தப் பிண்டம் பொரிந்து அதனின்று முனிவர் சொன்னபடி அறுபதினாயிரம் குழந்தைகள் உண்டானார்கள். குழந்தைக் கூட்டத்தைத் தாத்திரிமார்கள் நன்றாகப் பாதுகாத்து வந்தார்கள்.

காலக்கிரமத்தில் குழந்தைகள் யௌவன நிலையடைந்து மிக்க அழகும் வீரமும் கொண்ட ராஜ குமாரர்களாக வளர்ந்தார்கள். மூத்த மனைவியின் குமாரன் அசமஞ்சன் வளர வளரக் குரூர குணத்தை யடைந்தான். ஊரில் உள்ள குழந்தைகளைப் பிடித்து ஆற்றின் மடுவில் போட்டு, அவை தத்தளித்துச் சாவதைக் கண்டு சிரித்துச் சந்தோஷப் படுவான்.

இவ்வாறு பைத்தியம் பிடித்துப் போன அசமஞ்சனை ஜனங்கள் மிகவும் வெறுத்தார்கள். அரசனுடைய அனுமதியுடன் அவனை ராஜ்யத்தை விட்டே துரத்தி விட்டார்கள். ஆனால், அவனுக்குப் பிறந்த மகன் அம்சுமான் என்ற ராஜகுமாரன் மிகவும் குணசாலி. எல்லாருடைய அன்பையும் நன்மதிப்பையும் சம்பாதித்தான். சீலமும் அறிவும் பொருந்தியவனாக வளர்ந்தான்.

சகரன் ஒரு பெரும் அசுவமேத யாகம் செய்ய நிச்சயித்ததன் பேரில் அதற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளும் செய்யப்பட்டன. அசுவமேத யாகத்துக்குரிய குதிரையை ராஜ குமாரன் அம்சு

மான் காத்து வந்தான். ஆனால் இந்திரன் ராக்ஷஸ வேஷம் பூண்டு குதிரையைக் கொண்டு போய்விட்டான்.

அசுவமேத யாகங்களைத் தடை செய்வது தேவர்களுடைய வழக்கம். இந்திரனுடைய பதவிக்குப் போட்டி ஏற்படும் என்கிற பயம். ஆயினும் தடைகளைத் தாண்டி யாகம் நடைபெற்று விட்டால் யாகத்தில் தரப்படும் அவிசுகளைத் தேவர்கள் பெற்றுத்தான் போக வேண்டும். அதன் மேல் யாகத்தைச் செய்தவன் யாகத்தின் பலனை அடைவான்.

குதிரை காணாமற் போயிற்று என்று அரசனுக்குத் தெரிந்ததும் மிக வருத்தப்பட்டு எப்படியாவது கண்டுபிடித்துக் குதிரையைக் கொண்டு வர வேண்டுமென்று சுமதி புத்திரர்களான அறுபதினாயிரம் ராஜகுமாரர்களையும் பூமண்டலம் முழுவதும் தேடி வரும்படி அரசன் அனுப்பினான். ''யாகக் குதிரையை இழந்தால் யாகம் கெடுவது மல்லாமல் சம்பந்தப்பட்ட எல்லாரையும் பாவம் சுற்றிக் கொள்ளும். ஆகையால், திருடிப் போனவன் எங்கே மறைத்து வைத்திருந்தாலும் போய்க் கண்டுபிடித்துக் குதிரையைக் கொண்டு வர வேண்டும்'' என்று சகரன் வீரமும் சௌரியமும் கொண்ட தன் புத்திரப் பெருங் கூட்டத்துக்கு உத்தரவிட்டான்.

சகர புத்திரர்களும் மிக உற்சாகமாக உலகமெங்கும் சுற்றி அட்டகாசம் செய்தார்கள். எங்கும் கிடைக்கவில்லை.

பூமியை வெட்டித் தோண்டினார்கள். எங்கும் வெட்டித் தள்ளி வெட்டித் தள்ளிப் பெரும் அதிர்ச்சியை உண்டாக்கினார்கள். ''நீதான் திருடினாய்! நீதான் திருடினாய்!'' என்று எங்கேயும் எல்லோரையும் குற்றம் சாட்டி, அதட்டி இம்சை செய்து வந்தார்கள். எங்கு தேடியும் அகப்படவில்லை. இதை அரசனிடம் சொன்னார்கள். துயரப்பட்ட அரசன் ''நீங்கள் பூமியைப் பிளந்து பாதாளம் புகுந்து பாருங்கள்!'' என்று உத்தரவிட்டான்.

தந்தை சொற்படி சகர குமாரர்கள் பூமியைத் தோண்டி, பாதாளம் புகுந்து பூமியைத் தாங்கி நின்ற யானைகளை நமஸ்கரித்து விட்டு யாகக் குதிரையைத் தேடிச் சென்றார்கள். அங்கே வடகிழக்கு மூலையில் ஓரிடத்தில் தங்கள் குதிரையைக் கண்டார்கள்.

மகாவிஷ்ணுவாகிய கபிலர் அங்கே யோகத்தில் இருந்தார். பக்கத்தில் யாகக் குதிரை தன்பாட்டுக்குப் புல் மேய்ந்து கொண்டிருந்தது. இதைக் கண்டதும் சகர புத்திரர்கள், ''இதோ திருடன், குதிரையைத் திருடிவிட்டு, தவவேஷம் போட்டுக் கொண்டு உட்கார்ந்திருக்கிறான்'' என்று கோபாவேசமாகக் கபிலர் மேல் பாய்ந்தார்கள்.

யோகத்திலிருந்த கபில முனிவர் கண்களைத் திறந்து, ''ஹும்'' என்று பெருமூச்செறிந்தார். ராஜபுத்திரர்கள் அறுபதினாயிரம் பேரும் அங்கேயே சாம்பற் குவியலாகப் போனார்கள். இந்திரன் குதிரையைக் கொண்டு போய்ப் பாதாளத்தில் ஒளித்து வைத்திருந்தான். அதனால் இவ்விதம் சகர புத்திரர்கள் சாபமடைந்து மாண்டார்கள்.

(தொடரும்)

# நைஜர் பாயும் நைஜீரியா

**வ**டக்கே பிரும்மாண்டமாக விரிந்து பரந்து கிடக்கும் சஹாரா பாலைவனம்; தெற்கே அட்லாண்டிக் பெருங் கடல். இடையே ஏறக்குறையச் சாய்ந்த சதுர வடிவில் அமைந்துள்ளது நைஜீரியா. நைஜர் நதி பாயும் நைஜீரியாவில் சுமார் பத்தாயிரம் இந்தியக் குடும்பங்கள் வாழ்ந்து வருகின்றன. இந்நாட்டுக்கும் பாரதத்துக்கும் பல விதங்களில் ஒற்றுமையுண்டு. இரு நாடுகளும் நீண்ட காலம் ஆங்கிலேயரின் ஆதிக்கத்தில் இருந்து, விடுதலையடைந்துள்ள நாடுகள் என்பது இவற்றுள் ஒன்று.





வாஞ்சீசுவரன் தம்பதியினர்

நைஜீரியாவில் கல்வித் துறையில் பல ஆண்டுகளாகப் பணியாற்றி வரும் தமிழ் நாட்டைச் சேர்ந்த வாஞ்சீசுவரனும் அவரது மனைவி ஸ்ரீமதி ராஜாமணியும் அந்தத் தேசத்தைப் பற்றிக் கூறும் சுவையான தகவல்களைக் கேட்போமே :

''முன்பு கிழக்கு, மேற்கு, வடக்கு, மத்திய மேற்கு என்று நான்கு பிரிவுகளாக இருந்த நைஜீரியா இன்று பன்னிரண்டு ராஜ்யங்களாகப் பிரிக்கப் பெற்றுள்ளது. ஜனத் தொகையில் 50 சதவிகிதம் முஸ்லிம்கள். மீதம் உள்ளவர்கள் கிறிஸ்தவர்களும், பழங்குடி மக்களும் ஆவர். பல்வேறு மொழிகள் வழக்கிலுள்ள போதிலும், கனூரி, ஹௌஸா, யோருபா, ஈபோ, ஆங்கிலம் இவையே பெருமளவு மக்களால் பேசப்படும் மொழிகள். மிகுதியான மக்களால் பேசப்படும் மொழி ஹௌஸா. இவற்றில் இரு மொழிகள் அராபிய எழுத்துக்களிலும், இரு மொழிகள் ஆங்கில எழுத்துக்களிலும் எழுதப்படுகின்றன. நாட்டின் அரசாங்க மொழி ஆங்கிலமே. வேறு பல இனத்தவர் பேசும் மொழிகளுக்கெல்லாம் எழுத்துக்கள் இல்லை.

''நைஜீரியாவின் வட பகுதியில் வசிப்பவர்கள் பெரும்பாலோர் முஸ்லிம்கள். கிறிஸ்தவர்கள் தென் பகுதியில்தான் மிகுதி. பாரதத்திலிருந்து வந்தவர்கள் அநேகமாகத் தென் நைஜீரியாவில்தான் வசிக்கின்றனர். பாகிஸ்தானியர் பலர் வட பகுதியில் வசிக்கின்றனர்.''

''இந்தியாவிலிருந்து சென்றுள்ளவர் எந்த எந்தத் துறைகளில் பணியாற்றுகின்றனர்? அவர்கள் வாழ்க்கைத்தரம் எப்படி உள்ளது?''

''பொறியியல், மருத்துவம், கல்வி, ரயில்வே ஆகிய பல்வேறு துறைகளில் இந்தியர்கள் பணியாற்றுகின்றனர். பட்டதாரிகள் மாதம் எழுநூறு ரூபாய்க்குக் குறையாமல் சம்பளம் பெறுகிறார்கள். அங்கு எஞ்சின் டிரைவர்களாகப் பணியாற்றுபவர்களில் முக்கால்வாசிக்கு மேல் இந்தியர்களே. தூரம் குறைவான இடங்களுக்குச் செல்லுபவர்கள் ரயிலேறுவதில்லை. பஸ்ஸில்தான் போவார்கள். பஸ் என்றால் இங்கு உள்ளது போன்ற வசதியான வண்டிகளை நைஜீரியக் கிராமப் பகுதிகளில் காண்பதற்கில்லை. லாரிகளில் பெஞ்சுகள் போடப்பட்டிருக்கும். விவசாயிகள் பெரும்பாலும் அதில்தான் பிரயாணம் செய்வார்கள். நைஜீரியாவின் பொருளாதாரம் விவசாயத்தை அடிப்படையாகக் கொண்டதுதான். மக்களில் பெரும்பகுதியினர் விவசாயிகளே.''

''அங்கு அரிசி விளைகிறதா?''

''ஓரளவு விளைகிறது. தென் பகுதியில் மக்களின் முக்கிய உணவுப் பொருள் ஒரு வகைக் கிழங்கு. வட பகுதியில் சோளம்

முதலிய தானிய வகைகள். பாரதத்தி லுள்ள விளைபொருள்கள் அநேகமாக எல்லாம் அங்கும் விளைகின்றன. வாழை, மாமரங்கள், வெண்டை, பறங்கி, கீரை, பலா, முருங்கை — ஏன், மணத் தக்காளிகூட விளைகிறது. அல்ஃபான்சோ என்ற உயர்ந்த வகை மாம்பழம் பவுண்டு இருபத்தைந்து பைசாவுக்குக் கிடைக்கும்.''

''பால், நெய் எல்லாம் கிடைக்குமா?''

''கிடைக்குமா என்று கேட்கிறீர்களே? பால் கொள்ளை மலிவு. சுத்தமான பசும் பால் ஒரு லிட்டர் ஐந்து ஆறு அணாவுக்குக் கிடைக்கும். நெய்யும் அப்படித்தான். நாலு காலன் டின் நெய் சுமார் எழுபத்து நான்கு ரூபாய்க்குக் கிடைக்கிறது. பசு நெய். அங்கு எருமை நெய்களே இல்லை. அங்குள்ள இந்தியர்கள் எல்லாம் சமையலுக்கு நெய் தான் உபயோகிப்பது வழக்கம். ஆனால், நைஜீரியர்கள் பனை எண்ணெய் உபயோகிக் கிறார்கள். ஒரு வகைப் பனை அங்கு மிகுதியாக உள்ளது. பனை நுங்கைவிடக் கெட்டியாக இருக்கும். சோப்பு தயாரிக்கவும் சமையலுக் கும் அந்த எண்ணெய் நிறைய பயன்படு கிறது. நல்லெண்ணெயை விடச் சிவந்த பழுப்பு நிறமாக இருக்கும்'' என்கிறார் ஸ்ரீமதி ராஜாமணி.

நைஜீரியப் பெண்களைப் பற்றி ஸ்ரீமதி ராஜாமணி கூறுவதைக் கேளுங்கள்: ''வரதட்சிணை கொடுக்கும் வழக்கம் நைஜீரியாவிலும் உள்ளது. ஆனால், இந்தியா வில் உள்ளதற்கு நேர்மாறான பழக்கம். அங்கே மணப் பெண்ணுக்குத்தான் மண மகன் வீட்டார் வரதட்சிணை கொடுக்க வேண்டும்! குறைந்த பட்சம் ரூ. 600 முதல் அவரவர் சக்திக்கு ஏற்பக் கொடுப் பார்கள். ஷேஹு, எமிர்கள் முதலிய கிராமப் பெருந்தனக்காரர்கள் பல மனைவி களை மணந்து கொள்வார்கள். மனைவிகளின் எண்ணிக்கை உயர உயர, அவர்களை மணக் கும் ஆண் மகனின் சமூக அந்தஸ்தும் உயரு கிறது என்று அர்த்தம். பெண்களை படிக்கும் பழக்கம் இப்போது பெருகி வருகிறது.

''முஸ்லிம் பெண்கள் மூக்கு குத்திக் கொள்கிறார்கள். நிறைய நகைகள் அணி வார்கள். ஆனால் நவீன மோஸ்தர்களில் நகைகள் செய்யும் திறமை உள்ளவர்கள் அங்கு இல்லை. மெக்கா சென்று திரும்பும் யாத்திரிகர்கள் வெளி நாடுகளிலிருந்து நகைகள் வாங்கி வருவதுண்டு. முஸ்லிம் பெண்டிர் சினிமாவுக்குச் செல்லுவதே இல்லை. ஆண்கள்தாம் போவார்கள். ஏராள மான சினிமாத் தியேட்டர்கள் உள்ளன. ஹிந்தி, தமிழ்ப் படங்களும் வருகின்றன. நைஜீரிய மக்கள் சண்டைப் படங்களையும், 'டிரிக் ஷாட்'கள் மலிந்துள்ள படங்களையும் மிகவும் ரசிக்கிறார்கள். மந்திரக் காட்சிகள் என்றால் அவர்களுக்கு அளவுகடந்த உற்சாகம். தாராசிங்தான் அங்கு 'ஹீரோ!'

''நைஜீரியப் பெண்கள் மிக்க வலிமை யுள்ளவர்கள். குழந்தைகளிடம் மிக்க ஆசை உள்ளவர்கள். 'எனக்கு ஒன்பது குழந்தைகள் தான் பிறந்திருக்கின்றன' என்று குறைப் பட்டுக் கொள்ளும் பெண்டிர் ஏராளம்.''



''நமக்குப் புதுமையாகத் தோன்றக் கூடிய அபூர்வமான பழக்க வழக்கங்கள் அவர்களிடையே என்ன இருக்கின்றன?''

''யொருபா வகுப்பினர் குழந்தை பிறந்த வுடன் அதன் கன்னத்தில் சூடு போடுவது வழக்கம். வரி வரியாக மூன்று கோடுகள். அநேகமாகக் குழந்தை பிறந்து ஒரு மாதத்தி லேயே இது நடக்கும். கனூரி இனப் பெண் மணிகளுக்குக் கூந்தல் அலங்காரத்தில் பிரியம் அதிகம். தமிழ் நாட்டில் பெண்கள் ஒற்றைப் பின்னல் அல்லது இரட்டைப் பின்னல் போட்டுக் கொள்வார்களல்லவா? ஆனால், இவர்கள் பத்துப் பதினைந்து பின் னல்கள் போட்டுக் கொள்வார்கள். இவர் களின் கேசம் கருட்டையாகவும் ஆனால் குட்டையாகவும் வளர்கிறது. இந்தியப் பெண்களின் நீண்ட கூந்தலை அவர்கள் ஏக்கத்துடன் பார்ப்பார்கள்! கேசம் குட்டையாக இருப்பதால் தனித் தனியே பத்துப் பதினைந்து பின்னல்கள் போட்டுத் தலையை அலங்காரம் செய்து கொள்ள அவர் களுக்கு மூன்று, நான்கு மணி அவகாசம் பிடிக்கும். தலையைப் பார்த்தால் கட்டம் கட்டமாகக் கோலம் போட்டாற் போல் பல பின்னல்கள் காட்சியளிக்கும். பார்ப்பதற்கு அழகாக இருக்கும். சிலருக்கு நெற்றி நடுவில் மூக்குவரை ஒரு பின்னல் தொங்கும். நடு நெற்றியில் பின்னல் தொங்கினால் அவளுக் குத் திருமணமாகிவிட்டது என்று அர்த்தம்.

''மருதோன்றி இட்டுக்கொள்ளும் பழக்கம் நைஜீரியப் பெண்களிடையே பரவலாக உள் ளது. மார்க்கெட்டில் குவியல், குவியலாக மருதோன்றிப்பொடி விற்பனைக்கு எப்போதும் தயாராக இருக்கும். பற்களைச் சிவப்பாக்கிக் கொள்ளுவதும் அவர்களுடைய பழக்கங் களில் ஒன்று. பாரதப் பெண்டிரைப்போல் அவர்கள் வெற்றிலை போடுவதில்லை. ஆனால் புகையிலையின் பூவைப் பற்களில் தடவித் தடவியே பற்களைச் சிவப்பாக்கிக் கொள்ளு வார்கள். நைஜீரியாவின் வட பகுதியில் ஒரு விசித்திரமான பழக்கம் உண்டு. யார் வீட்டிலாவது குழந்தை பிறந்தால் அந்த மகிழ்ச்சியான செய்தியை அக்கம் பக்கத்தி லுள்ளவர்களுக்குத் தெரிவிக்கும் வகையில் வாயில் கட்டை விரலைச் செருகி 'கூ' என்று உரக்கக் கூவுவார்கள் பெண்கள்.

''திருமணத்துக்குச் சீதனம் கொடுப்பது பற்றி என் கணவர் குறிப்பிட்டாரல்லவா? அது பற்றிய ஒரு சுவையான செய்தி! பிள்ளை வீட்டார் பெண்ணுக்குக் கொடுக்கும் சீதனப் பொருள்களை (மெத்தை கட்டில் முதலியன) ஒரு கை வண்டியில் வைத்து மேளதாளம் முழங்க ஊர்வலமாக எடுத்துச் செல்வார்கள். ஷெனாய் மாதிரி ஒருவித வாத்தியம் அது'' என்கிறார் ஸ்ரீமதி ராஜாமணி.

''ஆண்களின் பொழுது போக்கு என்ன?'' என்று கேட்டதற்கு திரு வாஞ்சீசுவரன் கூறினார். கால்பந்து விளையாட்டிலும் குதிரைச் சவாரியிலும் நைஜீரிய ஆண்களுக்கு விருப்பம் அதிகம். மக்கள் நல்ல உழைப்பாளிகள். வகுப்பில் பாடங்கள் விளங்காவிட்டால் கேட்டுத் தெளிவு பெறக் கூச்சப் படுவதில்லை மாணவர்கள். கல்வித் தரம் உயர்வாகவே உள்ளது. பெண்களுக்குத் தனிப் பள்ளிகள் உள்ளன. அங்கு அஞ்சல் பட்டுவாடாவில் ஒரு விசேஷம் என்னவென்றால், விலாசதாருக்கு நேரிடையாகக் கடிதம் பட்டுவாடா செய்யப்படுவதில்லை. கடிதங்கள், கிராமத்தின் பெரியதனக்காரரிடம் சேர்ப்பிக்கப்படும். அவர் பார்த்து உரியவர்களிடம் கடிதங்களைச் சேர்ப்பார். கிராமங்கள் பெரும்பாலும் மிகச் சிறியவை. தெருப் பெயரோ, வீட்டு எண்ணோ இல்லாததால் இந்த ஏற்பாடு. பல கிராமங்களில் மின் வசதி இல்லை.

''நைஜீரியாவில் நிலக்கரி, இரும்பு, தகரச் சுரங்கங்கள் உள்ளன. தொழில் துறையில் இப்போதுதான் முன்னேற்றம் கண்டு வருகிறது. எனினும் ஒன்று குறிப்பிட வேண்டும். நைஜீரியப் பவுன் ஒன்றின் மதிப்பு ரூ. 21. பிரிட்டிஷ் பவுனின் விலையை விட அதிகம். நைஜீரியப் பவுன் நாணய மதிப்பு குறைக்கப்படவில்லை. நைஜீரியாவின் அதிபர் மேஜர் ஜெனரல் யகுபு கோவான் அவர்களின் வயது 34தான். ஆனால் அவரது நிர்வாகத் திறமை பாராட்டுக்குரியது. நைஜீரியாவின் பொருளாதாரம் மிகவும் திருப்திகரமாக உள்ளது'' என்கிறார் திரு வாஞ்சீசுவரன்.

— 'பாணன்'

## தேவை ஒரு தங்கை

தன் பெண்ணுக்கு அளவுக்குமேல் செல்லம் கொடுத்து வளர்த்துவிட்டு அந்த இளகிய தன்மையை 'வாபஸ்' பெறத் தெரியாமல் விழிக்கும் தந்தை; தங்கையைக் கண்டிக்க வேண்டும் என்று நினைக்கும்போதெல்லாம் தந்தையையும் பக்கபலமாகத் துணைக்கு அழைக்க விரும்பும் அண்ணன்; புதுப் புது ஆடைகளில் தோன்றுவதும் 'புதுமைப் பெண்'ணின் லட்சணங்களில் ஒன்று என்று நிரூபித்து எப்போதுமே படபடப்புடன் பேசி முகம் வெக்கும் தங்கை; எம். ஏ. படித்துவிட்டு அத்தனை நற்சாட்சிகளையும் தென்படுவோரிடமெல்லாம் காண்பிக்கத் தயாராக இருக்கும் ஒரு வேலை வேட்டை இளைஞன்; இந்த இளைஞனுக்கு ஓர் இரவல் தங்கையாக வழிமொழிவோர் இல்லாமலேயே பதவி ஏற்கத் தயங்காத அப்பாவி யுவதி ஒருத்தி; எப்படி உருட்டி விட்டாலும் உடனே தலை நிமிர்ந்து நிற்கும் தஞ்சாவூர்ப் பொம்மை போல் யார் கண்டித்தாலும் சட்டை செய்யாமல் குறுக்கே புகுந்து கூத்தடித்துப் பொன்மொழிகளைப் புயலாய் வீசும் வேலைக்காரன்.



இவர்களை ஒருங்கே நாம் சந்திக்கும் இடம்: ''தேவை ஒரு தங்கை'' நாடகம். கல்கி ஃபைன் ஆர்ட்ஸ் குழுவினரின் தயாரிப்பு.

ஸ்ரீரங்கம் நரசிம்மனால் எழுதப்பட்ட சிறுகதை ஒன்றைக் கூத்தபிரான் மேடைக்காக விளாவி நீட்டி நாடகமாக்கி டைரக்ட் செய்யும் பொறுப்பையும் ஏற்றிருக்கிறார்.

கலகலப்பைத் தோற்றுவிக்கக் கதாநாயகன் பார்த்தன் எம். ஏ.வாக வரும் திரைப்பட நடிகர் ஜெயசங்கரும், பளபளப்பைக் காண்பிக்கக் கதாநாயகி பத்மாவாக வரும் திரைப்பட நடிகை ராதிகாவும் உதவுகின்றனர். நாடகக் கதையில் இல்லாத வலு இந்த இரு பாத்திரங்களிடமும் இருக்கிறது.

ஆம்' கதாநாயகன் வில்லனை வலுவாகவே அடிக்கிறான். கதாநாயகி கதாநாயகன் கரத்தை வலுவாகவே பிடித்து இழுத்துக் கொண்டு ஓடுகிறாள்.

தன் இரவல் தங்கை ஸ்ரீலலிதாவுக்கு ஜெயசங்கர் வேலை கேட்கும் நடிப்புச் சொல்லிக் கொடுக்கும் இடம், அப்பா மணக்கால் மணி மகனுக்குச் சாதகமாக 'ஆமாம்'போட ஒப்புக் கொள்ளும் கட்டம், எம். கே. மூர்த்தி இரண்டு வகை 'தங்கச்சி'களுக்குப் பாடபேதம் விளக்கும் சந்தர்ப்பம் போன்றவை சற்றுச் சுவையான காட்சிகள்.

வேலைக்கார கோமஸ்வரக் கூத்தபிரானுக்கு அந்த வெள்ளைக் குல்லாய் அவசியமா?

அமெச்சூர் நாடகமேடை அனுபவத்தைத் திரை உலகுக்கு ஏற்றுமதி செய்து நட்சத்திரமான ஜெயசங்கர் இப்போது திரைப்பட அனுபவத்தை நாடக மேடைக்கு இறக்குமதி செய்து கொண்டிருக்கிறார் என்று கூடச் சொல்லலாம்!

—கோ. க.

# ஞானஒளி

கே. சுந்தரம்

### காட்சி 8

(ஓராண்டுக் காலத்துக்குப் பிறகு....

திருக்காட்டுப்பள்ளியில் டாக்டர் சரவணன் டிஸ்பென்சரி.

மேஜையின் மீது அமர்ந்தபடி அன்றையத் தினப் பேப்பரைப் புரட்டிய டாக்டரின் கண்களில் ஒரு செய்தி தென்படுகிறது. உரக்கப் படிக்கிறார் :)

**டாக்டர் :** பிரபல கம்பவுண்டர் வழக்கில் குற்றம் சாட்டப்பட்ட அந்தோணிக்கு ஆயுள் தண்டனை விதித்து செஷன்ஸ் தீர்ப்பு! (பேப்பரைப் பிடித்துள்ள கரங்களைத் தாழ்த்தியபடி.) கம்பவுண்டர் ரொம்பப் பிரபலமாயிட்டான்! இன்னமும் டாக்டராகிய நான் அட்ரஸில்லாமல்தான் இருக்கேன்! வேண்டாம், வேண்டாம்! பிரபலமாகிறதுக்காகக் கழுத்தைக் காட்டுவதா? மேரி....! மே...ரி!

(அவர் அழைத்ததும் உள்ளேயிருந்து வெண்ணிற உடை அணிந்துள்ள மேரி வருகிறாள்.)

**டாக்டர்:** மேரி! உன் அப்பா வழக்கிலே தீர்ப்பாயிடுச்சு. (மேரி பதற்றமடைவது கண்டு) பயப்படாதேம்மா! ஆயுள் தண்டனைதான் கிடைச்சிருக்கு!

**மேரி (விரக்தியுடன்):** அது எனக்குத் தரப்பட வேண்டிய தண்டனைங்க! என்னை ஏன் காப்பாற்றினீங்க? இந்தச் செய்தியைக் கேட்கவா? காவிரியோடே போயிருக்க வேண்டிய பாவி நான்!

**டாக்டர்:** காவிரித்தாய் ரொம்பப் புனிதமானவள் அம்மா. வீணு பெண் பாவத்துக்கு ஆளாக மாட்டா. அதனுல்தான் என் மூலமா உன்னைக் கரையேத்திக் காப்பாத்திட்டா..... மேரி! எழுதின எழுத்தை எவனுலேயும் அழிக்க முடியாது. நீ பாவியா இருக்கலாம். உன்னை நீ அழிச்சுக்க விரும்பலாம். ஆனுல் உன் பாவத்தாலே உருவான அந்த அப்பாவிக் குழந்தை ஒரு பாவமும் அறியாதது! அதைக் கொல்வதற்கு உனக்கு உரிமை கிடையாதே! குழந்தைக்காகவாவது நீ வாழத்தான் வேண்டும்! இதைத்தான் நாங்க விதின்னு சொல்றோம். விதிச்சதுதான் விதி! அந்த விதி சிரிச்சா நாம அழத்தான் வேணும்!

**மேரி:** என்ன சொல்றீங்க?

**டாக்டர் :** உயிரைக் கொல்றது பாவம். இதை மதம் மட்டுமில்லே; சட்டமும் சொல்கிறது. மன்னிப்போ, தண்டனையோ அதை, மகிழ்ச்சியோடே மனசு ஒப்பி ஏற்றுக் கொள்ளத்தானே வேண்டும்? ஓர் உயிரைக் கொன்றதற்காகத்தானே உன் அப்பாவுக்குத் தண்டனை கிடைச்சுது. அந்தத் தண்டனைக்கோ, பழிக்கோ அவன் மாதிரி நீயும் ஆளாகாமல் தற்கொலை முயற்சியிலிருந்து தப்பினயே.... அதற்காகச் சந்தோஷப்படணும்மா!

**மேரி:** டாக்டர்!

**டாக்டர் :** முருகன் உன்னை எங்கிட்ட ஒப்படைச்சு ஒரு வருஷம் ஓடிப் போயிடுச்சு!

**மேரி:** ஓடிப் போன மேரி உலகத்துக்குச் செத்தவள்தான். அப்படிச் செத்தவளா உலகம் நினைக்கணும்னுதானே என் புடவையை நனைத்து ஆற்றங் கரையில் போட்டது.

**டாக்டர்:** மேரி! நான் ஒரு தகப்பன் ஸ்தானத்திலே உனக்குச் சொல்கிற ஒரே உபதேசம் என்னன்னு மனசிலே உறுதி வேணும்! நீ ஒரு கிறிஸ்துவப் பெண். நான் ஒரு ஹிந்து. கும்பிடப் போற இடந்தான் வேறே. பெயர் வேணுமானால் மாறுமே தவிர கும்பிடுகிற தெய்வம் ஒண்ணுதாம்மா.

சத்து, சித்து, ஆனந்தம், சச்சிதானந்தம். ''சமய கோடிகளெல்லாம் என் தெய்வம், உன் தெய்வம் என்று வழக்கிடவும், அங்ஙனே பெரு வழக்காய் யாதெனும் சித்தாகி நின்றது எது?'' என்று கேட்டார் தாயுமான சுவாமிகள். அதுதான் ஆண்டவன். அறிவின் சொரூபம். கிறிஸ்துவாகவும் இருக்கலாம். கிருஷ்ணனாகவும் இருக்கலாம். மேரியானாலும் சரி! மாரியம்மனானாலும் சரி! பாரதமும் பைபிளும் ஒண்ணுதான். வாசகங்கள் வித்தியாசப்படலாம். கதைகள் வேறேயாக இருக்கலாம். ஆனால் சொல்லப்படுகிற கருத்து ஒன்றுதான். எங்க ஹிந்து மதக் கோட்பாட்டுப்படி பார்த்தால் வாழ்க்கையைத் தாமரை இலைத் தண்ணீருக்கு ஒப்பிடலாம். ஒட்டாமல் ஒட்டியபடி பட்டும் படாமலும் வாழ்க்கையை நடத்தணும்.

**மேரி:** உனக்குள்ளேயே கிறிஸ்து இருக்கிறார் என்ற கருத்தை நீ மதிக்கணும் என்கிறதுதான் எங்கள் வேத வாக்கே!

**டாக்டர்:** இதையேதான் எங்க பாரதத்திலே ஒரு கதையா சொல்லிக் காட்டியா வர்ணிச்சிருக்கா. பாஞ்சாலி என்கிற பெண்ணைப் பல பேர் முன்னாடி மானபங்கப்படுத்த நினைச்சான் ஒரு பாவி! அவனை வஸ்த்ராபஹரணம் பண்ணினான். அந்தக் காலத்திலே அவனைப் பாவி.... கொடியவன்னு சொன்னா. இந்தக் காலத்திலேயும் வஸ்த்ராபஹரணம் பண்ணுறான்; அவன் ஹீரோவாம்!... அது கிடக்கட்டும். கதைக்கு வருவோம். அந்த மாதிரி அவமானப்படுத்தப் பட்ட நேரத்திலே நிர்க்கதியா நின்ற அந்தப் பாஞ்சாலி தன் மானம் பறி போகாமே காப்பாற்றப் படணுமேன்னு கடவுளையே கூப்பிட்டா!

கிருஷ்ணான்னு! முகுந்தான்னு! பகவானின் நாமாக்களை யெல்லாம் சொல்லிக் கதறினாள். கடவுள் வரலே.... கடைசியா, ''ஏ, ஹிருதய கமலவாசா!'' என்றாள். இருதயத்தில் குடிகொண்டிருப்பவனே என்று கூப்பிட்டதும் உடனே ஓடோடி வந்து ஆண்டவன் அவளைக் காப்பாற்றினார். இதிலே அடங்கியிருக்கிற தாத்பரியம் என்னன்னா..... உன் மனசுதான் தெய்வம். எப்போ உன் மனச்சாட்சி தவற்றை உணர வைக்கடுச்சோ அப்புறம் நீ அழுவதை நிறுத்திவிட்டு ஆக வேண்டியதைக் கவனிக்கலாமே! வாழ ஆசைப்படு, மேரி!

**மேரி:** நான் பெண்ணாகப் பிறந்ததே குற்றம்தான். அதுக்காக நான் அழுதே தீரணும்.

**டாக்டர்:** பெண்கள் எதுக்காக உலகத்தில் பிறக்கிறார்கள் தெரியுமா? மனைவியாக உத்தியோகம் ஏற்று, தாயாராகப் பதவி உயர்வு அடைந்து, பாட்டியாக ஓய்வு பெறத்தான்! உலகத்திலே பெண்ணாகப் பிறக்கிறதே, தாயாக மாறத்தான் அம்மா!

இப்போ நீ ஒரு தாய்! வண்டி வண்டியா நான் உபதேசம் பண்ணலாம். ஆனால் தாய்மைக்கு அதைவிடச் சக்தி அதிகம். இதை நீ புரிஞ்சுண்டு இருக்கணுமே!

**மேரி** (வெறுப்புடன்): தாய்மை வேண்டாத ஒரு பந்தம்!

**டக்டர்:** வேண்டாத தெய்வமில்லையே. வேணும் என்று தவங்கிடந்தேனே. எனக்குக் கிடைக்கலையே அம்மா, குழந்தை? குழந்தைச் செல்வம் இருக்கே, அது இருக்கிறவா வேண்டாம்னு வெறுத்தாலும் விடாது. இல்லாதவா வேணும் வேணும்னு கேட்டாலும் கிடைக்காது!

**மேரி:** அப்ப ஒண்ணு செய்யுங்க! என் குழந்தை உங்க கிட்டேயே வளரட்டும். என்னைப் போல் இல்லாமல் என் பெண்ணாவது நல்லா இருக்கட்டும்.

**டாக்டர்:** அப்போ நீ....?

**மேரி:** நான் எங்கேயாவது சர்ச்சிலே சேவை செய்து என் பாவத்தைத் துடைக்கறேன்.

**டாக்டர்:** உங்க சர்ச்சிலே 'ஆல்டர்'லே இருக்காளே மேரி மாதா! அவள் கையிலேயும் ஒரு குழந்தைதான் இருக்கு! அதைப் பார்த்தாயானால் உன் குழந்தை ஞாபகம் உனக்கு வராமலா போயிடும்? அங்கே பாடப்படுகிற பிரார்த்தனை கீதத்தைவிட உன் குழந்தையின் அழுகை உனக்கு இனிமையான பாட்டு! மனத்துக்கு இதமான இசை!

**மேரி:** என்னைப் பொறுத்த வரைக்கும் என்னுடைய அவல உணர்ச்சிக்குப் பரிசாகக் கிடைச்ச அவமானச் சின்னம் அந்தக் குழந்தை!

**டாக்டர்:** மனித இனமே உணர்ச்சிகளின் எதிரொலிதான் அம்மா! உணர்ச்சியில் லேன்னா நாம் மரக் கட்டைதான். ஆனால் பக்குவப் படணும். மனசை அடக்க ஆண்டவனாலேயே முடியலையே! ஒவ்வொரு மனிதனுக்குள்ளேயும் மிருகமும் இருக்கு; கடவுளும் குடிகொண்டிருக்கிறார்!

எங்க பிரகலாத சரித்திரத்திலே ஆண்டவனே கெட்டதை அழிக்க மனுஷன் பாதி, மிருகம் பாதியாகத்தான் நரசிம்மாவதாரம் எடுத்தார். அப்படி எடுத்ததாலேதான் கடவுளுக்கு — நிர்குணமான ஆண்டவனுக்கு— மனித குணமான ரௌத்திரம் ஏற்பட்டது. அப்படி இருக்கிற போது நீயோ, உன் அப்பாவோ தப்புச் செய்ததிலே ஆச்சரியப் படுவதற்கு ஒண்ணுமில்லே.

இப்படி யெல்லாம் பேசினாலோ, எழுதினாலோ இந்தக் காலத்திலே யாருக்கும் பிடிக்

"பாஞ்சாலி என்கிற பெண்ணைப் பலபேர் முன்னடி மானபங்கம் படுத்த நினைச்சான் ஒரு பாவி..!"



காது. 'போர்' அடிக்கிறது என்பார்கள். அதனுலேதான் என்கிட்டே வருகிற நோயாளி களும் ரொம்பக் குறைஞ்சு போயிட் டாங்க.

(சிரிக்கிறார்)

**மேரி:** டாக்டர்! எனக்கொரு உதவி செய்வீங்களா? என்னே டீச்சர் டிரெயினிங் கிலே சேர்த்துடுங்க!

**டாக்டர்:** நோ... நோ! நான் இருக்கிற போது நீ ஏன் வேலைக்குப் போகணும்?

**மேரி:** பக்குவப்பட்ட தத்துவவாதியே பாசத்துக்கு அடிமைப்படலாமா? நானேக்கு நானும் உலகத்திலே ஒரு பெண் குழந் தையை வைத்துக் கொண்டு வயிறு வளர்த் தாகணுமே! அதோடு மனத்துக்கும் ஆறுத லாக இருக்கும்!

**டாக்டர்** (யோசித்து ஒரு முடிவுக்கு வந்தவ ராக): சரிம்மா! ம்... மேரி... நீ உயி ரோடு இருக்கிறய் என்கிறதையும், இப்போ நீ ஒரு பெண் குழந்தைக்குத் தாயார் என் கிறதையும் உன் அப்பாவுக்குத் தெரிவிக்க லாம்னு பார்க்கிறேன்.

**மேரி:** வேண்டாங்க. அவர் வாழ்க்கையை நான் இவ்வளவு உருக் குலேச்சது போதும். அவரைப் பொறுத்தமட்டிலே மேரி செத் துட்டா! சிறையிலேயாவது அமைதியா காலங் கழிக்கட்டும்.

**டாக்டர்:** தப்பும்மா! நீ வேதனையிலேயும், விரக்தியிலேயும் பேசறே! ஆறு ஒண்ணு!

பெத்தவன் நிழலே நிலைக்கலையே! நான் தானா சாகவதும்? எத்தனை நாள் காப்பாற்றி விடப் போகிறேன்? நீ அனாதையில்லை. அனாதையா ஆகிவிடவும் கூடாது. அதனாலே தான் சொல்கிறேன். இதை உடனே தெரிவிச்சாகணும். எப்பவோ நான் தெரிவிச்சு இருக்க வேண்டியது. ஆனால் நீ தாய்மை நிலையிலே மன அதிர்ச்சிக்கு உள்ளாகி இருந்தே....அதனாலேதான் உன் விருப்பத்துக்கு விரோதமா நடக்க முடியலே. ஆனால் இப்போ நீ உயிரோடு நல்லபடியா இருக்கே, இங்கே என் பாதுகாப்பிலே ஒரு பெண்ணுக்குத் தாயா வாழ்ந்துக்கிட்டு இருக்கே என்கிற விவரத்தைத் தெரிவிச்சே தீரணும். அட, உங்கப்பாவுக்குத் தெரிவிக்காவிட்டால் கூட, நீ அடிக்கடி சொல்லுவியே... பாதிரியார்...... அடைக்கலம் சாமியார்.... அவருக்காவது தெரிவிச்சா நல்லது.

மேரி: அப்போ ஒன்னு செய்யுங்க. நான் உயிரோடு இருக்கிறதை மட்டும் தெரிவிச்சுடுங்க. ஆனால் எங்கே இருக்கேன் என்கிறதைச் சொல்ல வேண்டாம். என் அப்பா குணம் தெரிஞ்சதாலே இதைச் சொல்றேன்.....

டாக்டர் (யோசித்து): சரி, உன் விருப்பப்படி அப்படியே செய்யறேன். பாதிரியாருக்கு ஒரு கடிதம் மூலமா எல்லா விவரங்களையும் தெரியப்படுத்தி விடறேன்.

(மேரியின் குழந்தை அழும் சத்தம் கேட்கிறது.)

டாக்டர்: என் பேத்தி அழுறா! போய்ப் பாரும்மா!

(மேரி புன்னகையுடன் உள்ளே போகிறாள். டாக்டர் சுவரில் மாட்டப்பட்டுள்ள முருகன் படத்தை நெருங்கி நின்று பேசுகிறார்.)

டாக்டர்: முருகா! அந்தக் கம்பவுண்டர் பாஸ்கர் பயல் என்னடான்னா தன்னை என் பிள்ளைன்னு சொல்லிக்கிட்டுக் கெட்ட காரியத்துக்காக என்னை அப்பனாக்கினான். நீ என்னடான்னா தாத்தாவா இருந்து நல்லது செய்யுடா என்று எனக்கு உத்தரவு போட்டுட்டே! எப்படியோ முருகா! என் பிள்ளையில்லாக் குறையைத் தீர்த்துட்டே!

(மேஜைக்குத் திரும்பி வந்து கடிதம் எழுத ஆரம்பிக்கிறார்.)

டாக்டர்: மதிப்புக்குரியவரும் பூஜ்யருமான பாதிரி அடைக்கலம் அவர்களுக்கு, முருகன் உங்களுக்கு அருள் புரிவாராக.....

(கடிதம் எழுதுகிறார்) (தொடரும்)

## அன்பும் ஆயுதமும்

ஒரு சமயம் ஜோகன்னஸ்பர்க் நகரத்திலுள்ள ஸொனிக் ஹாலில் இந்தியர்கள், இந்தியர்களுடைய போராட்டத்தின் அனுதாபிகள் ஆகியோர் நிறைந்த கூட்டத்தில் காந்திஜி உரையாற்றினார். கூட்டம் முடிந்ததும், காந்திஜி மேடையிலிருந்து இறங்கி வந்து சில நண்பர்களுடன் உரையாடி விட்டு, திருவாட்டி போலக்கும், மற்றவர்களும் உடன் வர, வெளியே வந்தார். அப்போது வெளிக் கதவுக்கருகில் நிழலோரத்தில் ஒருவன் நின்று கொண்டிருப்பதை காந்திஜியும் திருவாட்டி போலக்கும் கவனித்தார்கள். காந்திஜி அவன் அருகில் சென்று கைகோத்துக் கொண்டு அவனை அழைத்து வந்தார். இருவரும் மெதுவான குரலில் வாக்குவாதம் செய்தார்கள். பிறகு அவனையும் அழைத்துக் கொண்டு, காந்திஜி தெருவில் இறங்கியதும், அவன் தன்னுடைய கையிலிருந்த ஒரு பொருளைக் காந்திஜியிடம் கொடுத்து விட்டு விடை பெற்றுக் கொண்டான். அவனுடைய நடத்தையையும் போக்கையும் கண்டு வியப்படைந்த திருவாட்டி போலக், "அந்த மனிதன் யார்? ஏதாவது விசேஷம் உண்டா?" என்று காந்திஜியிடம் கேட்டாள்.

"உண்டு. அவன் என்னைக் கொல்ல விரும்பினான்" என்று காந்தி அமைதியாகக் கூறினார்.

"என்ன? உங்களையா கொல்ல விரும்பினான்?" என்று திகைப்புடன் கேட்டாள் திருவாட்டிபோலக்; "அவன் பைத்தியக்காரனா?"



"பைத்தியக்காரன் இல்லை. இந்திய மக்களுக்கு நான் துரோகம் செய்வதாக அவன் நினைக்கிறான். இந்தியர்களுடைய நண்பனாகவும் தலைவனாகவும் நடித்துக் கொண்டே அவர்களுக்கு விரோதமாக அரசாங்கத்துடன் சேர்ந்து வேலை செய்வதாக அவன் கருதுகிறான்."

"இது என்ன அக்கிரமம்! இம்மாதிரி மனிதர்களால் உங்களுக்கு ஆபத்து ஏற்படும். அவனைக் கைது செய்ய வேண்டும். அவனை ஏன் அனுப்பிவிட்டீர்கள்? அவன் பைத்தியக்காரனாகத்தான் இருக்க வேண்டும்" என்று திருவாட்டி போலக் படபடப்புடன் கூறினாள்.

"அவன் பைத்தியக்காரனல்ல. தவறான தகவலைக் கேட்டு ஆத்திரமடைந்திருக்கிறான். நான் அவனுடன் உரையாடியதை நீ பார்த்துக் கொண்டிருந்தாயே! என்னுடைய வார்த்தையை நம்பிய அவன், என்னைக் கொல்வதற்காகக் கொண்டு வந்திருந்த கத்தியை என்னிடமே கொடுத்து விட்டுச் சென்றான்" என்று கூறி, தம்முடைய கையிலிருந்த குத்துவாளையும் காந்திஜி காட்டினார்.

அதைப் பார்த்ததும் திருவாட்டி போலக் பயந்து விட்டாள். "இருட்டில் அவன் உங்களைக் குத்தியிருந்தால்...?" என்று பேசத் தொடங்கியதும் காந்திஜி இடைமறித்துப் பின்வருமாறு கூறினார்: "நீ வீணாக அலட்டிக்கொள்ளாதே. என்னைக் குத்திக் கொல்ல வேண்டும் என்ற கருத்துடன்தான் அவன் ஆத்திரத்துடன் வந்திருந்தான். ஆனால் தைரியமில்லை. அவன் கருதியதைப் போல மோசக்காரனாக இருந்தால் நான் மடிய வேண்டியதுதான் நியாயம். அவனைச் சமாதானப்படுத்தி அனுப்பி விட்டேன். அவன் மீண்டும் என்னைக் கொல்ல முயல மாட்டான். கைது செய்ய நான் முயன்றிருந்தால் அவன் என்னுடைய பகைவனாக மாறிவிடுவான். ஆனால் இப்போது என்னை நண்பனாகக் கருதி மகிழ்ச்சியுடன் திரும்பி விட்டான்."

— கே. எஸ். ஜே.

சந்தன மண்டலத்துள்
அந்தரங்க வரவேற்பு !

தூய சந்தனத்தின்
**புது** மணங் கமழ்

# மகாராணி




**மகாராணி** : பேரரசி போன்ற மென்மை யழகுற உங்கள் மேனியைப் பேணும் சோப்

லின்டாஸ்-MHR.4.140 TM

இந்துஸ்தான் லீவர் லிமிட்டெடின் தரமான தயாரிப்பு

# அம்புலிக்கு அப்பால்...

இன்ஸ்பெக்டரும் மரணியும் பேராசிரியர் இருந்த வீட்டை நெருங்கிக் கொண்டிருந்த அதே சமயத்தில்... அந்தப் பாழடைந்த பங்களாவில்.....

கதை: புஷ்பா  படம்: விஜயா  7










ஆனால், பேராசிரியர் பேசத் தொடங்குவதற்குள் போலீஸ் வந்து விட்டது.




மர்ம மனிதனின் கையாள் ஒருவன் அப்போது மெயின் ஸ்விட்சை அணைக்க எங்கும் இருள் சூழ்ந்தது! இன்ஸ்பெக்டரும் மற்றவர்களும் திகைக்க இருட்டில் மர்ம மனிதனின் குரல் கேட்டது.

# சொல்லுங்கள், பார்ப்போம், நான் அணியப்போவது என்ன?




## லக்மே டால்கம்

இலேசு, இணைபிரியாதது, எழில்மிக்கது, லக்மே டால்கம். அணைந்திடும் நறுமணங்கள் ஐவகை: லேவெண்டர், வெட்டிவேர், நிர்வாண், சந்தனம்; மீடியம் மற்றும் எகானமி சைஸ்களிலே வருபவை. தவிர, பூரிக்கவைக்கும் மற்றுமொரு புதுமணம்—ஃப்ளோரல் மிஸ்ட்—பெரிய ஃபேமிலிசைஸில் வருகிறது. எல்லாமே உங்கள் கைக்கெட்டிய விலையம் உடையவை.

Lakmé




## சிறப்புச் சிறுகதைகள்

தமிழில் சிறுகதை இலக்கியம் இன்று விருத்தியடைந்திருப்பதற்கு மூலகாரணமாயிருந்தவர்களுள் பேராசிரியர் கல்கி சிறப்பிடம் பெறுபவர் என்பதை எவரும் மறுக்க முடியாது. பல சிறுகதைச் சிற்பிகள் தோன்றவும், வாசகர் இனம் லட்சக் கணக்கில் பெருகவும் காரணமா யிருந்து உழைத்தவர் கல்கி அவர்கள். அந்தப் பெருமன்னர் தாமே எழுதியும், மற்றவர்களை எழுதச் செய்தும் பெருகிய பெருக்கத்தில் எழுந்த ஒருவிதப் போட்டிதான் தமிழ் இலக்கியத்துக்கு இணையற்ற கலைத்தன்மை மிக்க சிறுகதைகளைத் தேடித் தந்தது.

கல்கி அவர்கள் நினைவாகவும் கல்கிப் பத்திரிகையின் வெள்ளி விழாவைச் சிறப்பிக்கும் முகமாகவும் சிறுகதைப் போட்டி யொன்றினை மூன்றாண்டுகளுக்கு முன்னர் கல்கி ஸ்தாபனம் நடத்தியது. அதில் பரிசு பெற்ற சில கதைகளையும் கல்கிப் பத்திரிகையில் வெளிவந்த வேறு சில கதைகளையும் தொகுத்து, பதினைந்து சிறுகதைகள் அடங்கிய புத்தகம் 'சிறப்புச் சிறுகதைகள்' என்ற பெயரில் வெளியிடப்பட்டிருக்கிறது.

சிறுகதை என்ற இலக்கிய வடிவம் காலத்துக்குக் காலம் வளர்ந்து வந்து, ''இலக்கியம் கண்டு அதற்கு இலக்கணம் இயம்பு'' என்ற வரைவிலக்கணப்படி, இப்போது இலக்கிய விமர்சகர்கள் சில குண விசேஷங்களைக் கண்டுபிடித்து, அவற்றுக்குத் தக்க திறனாய்வு அளவுகோல்களையும் வகைப்படுத்தி வைத்துக் கொண்டனர். நாவல்களைப் போலவே சிறுகதைகளையும் இலக்கிய விமர்சகர்கள் இரு வகையாகப் பிரித்துப் பேசுவர்: வெகுஜன ரஞ்சகம், கலா ரஞ்சகம் என்று. அதாவது, கதைப் போக்குக்காகவே வாசகர்களைத் திருப்திப்படுத்தும், அவர்களுக்கு உணர்ச்சியின்பம் அளிக்கும் தரத்திலுள்ளது ஒரு வகை; மற்றது, இலக்கியக் கலை நுட்பம் விரும்பும், ரஸாநுபவத்தை நாடும் கலைஞருக்கு வேண்டிய கலையின்பத்தைக் கொடுக்கும் தரத்திலுள்ளது. இதிலே இரண்டாவது வகையைச் சேர்ந்த சிறுகதைகள்தாம் இலக்கிய விமர்சகர்களின் கவனத்தைப் பெறுவன. பெரும்பான்மையான கதைகளும் முதல் வகையைச் சேர்ந்தவைகளாயிருந்தாலும், இரண்டாவது வகையில் நூற்றுக்கு ஒன்று அல்லது இரண்டுதான் இருந்த போதிலும் விமர்சகர்களின் கவனத்தையும் ஆராய்ச்சியையும் கவரும் கதைகளே இலக்கணங்களை வரையறுத்து இலக்கியத் தரத்தை நிதானப்படுத்துவன.

''சிறப்புச் சிறுகதைகள்'' என்ற தொகுதியில் சேர்க்கப்பட்டிருக்கும் பெரும்பாலான கதைகளும் நாம் மேலே சொன்ன பிரிவுகளை மனத்தில் கொள்ளாமல் சேர்க்கப்பட்டுள்ளன. குறிப்பாக இரண்டு மூன்று கதைகள் — அழகிரிசாமியின் ''விட்ட குறையைத் தொட்ட குறை'', லட்சுமி சுப்பிரமணியத்தின் ''அக்கினிப் பிரவேசம்'', மகரிஷியின் ''இருள்'' போன்ற கதைகள் லக்ஷணக் கட்டுக்கோப்புகள். தமிழ் வாசகர்களிடையே புகழையும் நிறைந்த அபிமானத்தையும் பெற்றுள்ள அகிலனும், பி. எஸ். ராமையாவும் மணி மணியான இலக்கிய அந்தஸ்துள்ள சிறுகதைகளைக் கல்கியிலேயே எழுதியிருக்கவும் அவற்றை விடுத்து வேறு கதைகளை இத் தொகுதியில் சேர்த்திருப்பது அந்த எழுத்துச் சிற்பிகளுக்குச் சரியான பெருமையாகாது. ராமையாவின் ''பொசிப்பு'' ஒரு குறுநாவல் போன்றது; ஆரம்ப காலத்தில் பேராசிரியர் கல்கி அவர்களுக்குச் சவால் விட்டுக் கொண்டே இலக்கியச் சிறுகதைகள் எழுதிப் பெருமை பெற்ற ராமையாவின் அத்தகைய கதைகளிலொன்றைப் பொறுக்கி யெடுத்திருக்கலாம்.

தனிப்பட்ட எழுத்தாளர்களது கதைகளாகவும், பலருடைய கதைத் தொகுப்புகளாகவும், சிறுகதைத் தொகுதிகள் வெளிவந்து கொண்டே இருக்கின்றன. சிறப்புச் சிறுகதைகள் என்ற வகையில், பொதுச் சிறப்பு என்ற இலக்கியப் பாகுபாட்டு அடிப்படையில் இலக்கிய அந்தஸ்துக்கான சிறுகதைகள் அவ்வப்போது தொகுக்கப்பட்டு வெளியிடப்படின், அந்த அந்தஸ்தை நாடும் எழுத்தாளர்களுக்கு ஒரு வழித்துணையாக இருக்கும்.

தொகுப்பு: மணவை முஸ்தபா; வானதி பதிப்பகம், சென்னை—17; விலை ரூ. 2.90.

— சோ. சிவபாதசுந்தரம்

## ஸமர்ப்பணம்

இறைவன் உறையும் திருத்தலங்களைப் பாடல்களாகப் பாடி இறைவனுக்கே சமர்ப்பிக்கும் திவ்விய கைங்கரியக் காணிக்கையாக இந்நூல் வெளிவந்திருக்கிறது. பக்தி உணர்வையே ஜீவநாடியாகக் கொண்ட பக்திப் பாடல்களைப் பற்றி விமரிசனம் செய்வதில் பொருளில்லை. பக்தி மேலிட்டால், இறைவனோடு ஒன்றிய உணர்வோடு, கட்டுப்பாடுகளை யெல்லாம் கடந்து மழலை மொழியில் மாதவனைப் பாடித் துதித்திருக்கிறார் இந்நூலாசிரியை. நாமும் அதே நிலையை அடைந்து பக்திப் பெருக்கின் விம்மிதத்தில் பாடிப் பார்த்தால் இந்நூலை அநுபவிக்கலாம். உதாரணத்துக்கு ஒரு பாடல் பார்ப்போம்:

அணுவாய் ஒளிர்பவன் நீயன்றோ
அண்டமானவன் நீயன்றோ
அணுகுதற்கெளியவன் நீயன்றோ
அணுகுதற்குரியவன் நீயன்றோ !

(இந்நூலின் விற்பனைத் தொகை மகாபலிபுரத்தில் உள்ள ஸ்ரீரங்கநாதர் ஆலயத்துக்குச் சமர்ப்பணமாக்கப்படுகிறது.)

எழுதியவர்: ஸ்ரீமதி ஆர். சாவித்ரிமணி (''வைஷ்ணவி''), 60, ஸெயின்ட் மேரீஸ் ரோடு, சென்னை—18; விலை: ரூ. 1.00.

அவன் மதுரைக்குத் திரும்பி வருவானா மாட்டானா என்பது தெரியாது. அவன் பெயர் கூடத் தனக்குத் தெரியாது. கல்யாணமாகி அவனுக்கு ஒரு குழந்தை இருப்பது போலவும் தெரிகிறது. இந்த நிலையில் அவனை நினைத்து ஏங்கத் தனக்கு என்ன உரிமை இருக்கிறது? அவன் திரும்பி வந்து விட்டால், தனக்குக் கனகாபிஷேகமா செய்யப் போகிறான்? அவன் வந்த பிறகு ஒரு நாள் அவன் வீட்டுக்கு வலியப் போனாலும் அந்த வீட்டார் தன்னை வரவேற்கப் போகிறார்களா? அவள் ஒருத்தியே போதும், விரட்டியடிப்பதற்கு.

விஜயாவின் உள்ளம் இவ்வாறு நினைத்தது. ஆனாலும் உள்ளத்தின் நினைப்பு வேறாகவும் அவளுடைய செயல் வேறாகவும்தான் இருந்தன. அவனை எண்ணி ஏங்குவதை அவளால் நிறுத்தவே முடியவில்லை. அவளுக்கு அவனோ ஒரு புதிராக இருந்தான்.

ஐந்து நாட்களுக்குப் பிறகு ரங்கராஜன் சாத்தூரிலிருந்து திரும்பி வந்தான். பஸ்ஸிலிருந்து இறங்கி ஒரு சைக்



கின் ரிக்ஷாவில் ஏறிக்கொண்டு வீடு நோக்கி வரும்போது மாலை ஐந்து மணிக்கு மேல் ஆகிவிட்டது. அரசடி விநாயகர் கோவில் தெருவில் நுழைந்ததுமே, அவன் கண்கள் விஜயாவைத் தான் தேடின. உயிருக்குயிராக நேசித்துப் பழகிய ஒரு ஜீவனை நீண்ட காலம் கழித்துச் சந்திக்கப் போவது போன்ற ஒரு பரபரப்பு ஏற்பட்டது அவனுக்கு. அவளை அப்போது பார்த்தால், பார்த்ததுமே புன்னகை செய்து விடுவது என்ற உத்தேசம் கூட இருந்தது.

பேசி வைத்தாற்போல் அவள் அப்போது வீட்டு வாசலிலேயே நின்று கொண்டிருந்தாள். ஆனால் அவள் மட்டும் அங்கே தனியாக நிற்கவில்லை. கலாவும் பக்கத்தில் நின்றாள்.

இருவரையும் பார்த்தான் ரங்கராஜன். அந்தக் கணத்திலேயே, அவர்கள் தன்னோடு பழகியிராத வேற்றுப் பெண்கள் என்ற உண்மை மனசில் வேகமாகப் பாய்ந்தது. சன்னுசிப்புதூர் சினிமாப் போஸ்டரைப் பார்த்ததிலிருந்து அவளை அந்நியோன்யமானவளாகப் பாவித்துக் கொண்டு வந்த மனப் பிரமையும், அவன் செய்த மானச சல்லாபங்களும் மாயமாய் மறைந்து விட்டன. அவனுக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை.

இரண்டு பெண்களுமே அவன் முகத்தைப் பார்த்தார்கள்.

ரங்கராஜன் தன்னை மறந்து அவர்களை நோக்கிப் புன்னகை செய்துவிட்டான்.

ரிக்ஷா அவர்களை நோக்கி இன்னும் நெருங்கிச் சென்றது.



# தீராத விளையாட்டு

கு. அழகிரிசாமி

இருமலும் ஜலதோஷமும் உங்களை பலவீனப் படுத்தும்—இதர நோய்கள் பாதிக்கவும் இடமளிக்கும்.

# வாடர்பரீஸ் காம்பவுண்ட் அருந்தி ஆரோக்கியமாகவும் சக்தியுடனும் திகழுங்கள்




இருமலும் ஜலதோஷமும் உங்களை பலவீனப்படுத்தி,
நோய்களை எதிர்க்கும் சக்தியைக் குறைப்பதால், இதர
நோய்கள் உங்களைப்பாதிக்கக்கூடும். எனவே தவறாது
வாடர்பரீஸ் காம்பவுண்ட் சாப்பிட்டு வாருங்கள்.
பசியைத் தூண்டி, இழந்த சக்தியை மீட்டு, உடலுக்கு
நோய்த்தடுப்புச்சக்தியை அளிக்கும் ஊட்டப்பொருள்கள்
அடங்கியது வாடர்பரீஸ் காம்பவுண்ட். அதிலுள்ள
க்ரியோஸாட் மற்றும் க்வயாகால் இருமலிலிருந்தும்
ஜலதோஷத்திலிருந்தும் நிவாரணம் அளிக்கின்றன.

**வாடர்பரீஸ் காம்பவுண்ட்—மிகவும் நம்பகமான டானிக்**

வார்னர்-ஹிந்துஸ்தான் லிமிடெட்

WH 8075 TM

விஜயா முகத்தில் சலனமில்லாமல் கற்சிலையாக நின்று கொண்டிருந்தாள். அவன் குழம்பிப் போய்க் கலாவைப் பார்த்தான். அவள் வெட்கத்தால் தலை கவிழ்ந்து கடைக்கண்களால் அவனை நோக்கினாள். அவளுடைய குவிந்த இதழ்களில் புன்னகை நெளிந்தது. அதேபோல் விஜயாவும் அவனுடைய புன்னகைக்குப் பதிலுபசாரம் செய்யாமல் போனது அவனை மிகவும் குழப்பி விட்டது. அந்தக் குழப்பத்திலிருந்து விடுபட ''நமஸ்காரம்'' என்று சிரித்துக்கொண்டே சொல்லி இருவரையும் நோக்கிக் கைகூப்பி விட்டான்.

ரிக்ஷா வாசலைத் தாண்டிச் சென்று விட்டது.

## அத்தியாயம் 11

ஊரிலிருந்து திரும்பிய ரங்கராஜனின் நிறம் சற்றுக் கறுத்திருந்ததுதான், அந்த ஐந்து நாள் பிரயாணத்தில் அவனிடம் ஏற்பட்ட ஒரே மாறுதலைப்போல் அனைவருக்கும் தோன்றியது.

''அதுக்குள்ளே இவ்வளவு கறுத்துப் போயிட்டயே!'' என்று ஆச்சரியத்தோடு கேட்டாள் தங்கம்.

''இதிலிருந்தே தெரிஞ்சிக்கோ, உன் சாத்தூரிலே அப்படி ஒண்ணும் பனிமழை பெய்யலே, மதுரையைக் காட்டிலும் அங்கே வெய்யில் ஜாஸ்தி என்கிறதை!'' என்று வழக்கம்போல் அவளிடம் அவன் வேடிக்கையாகப் பேசினான்.

தங்கம் அவன் சொன்னதை ஒப்புக்கொண்டு விடவில்லை.

''ராஜா! நீ பட்டிக்காட்டுக்கும் போயிட்டு வந்திருக்கிறே. அதுனாலே தான் உன் உடம்பு இப்படிக் கறுத்துப் போயிட்டது'' என்று அவள் மறுதலித்துப் பேசினாள்.

''அதுதான் இல்லே. பட்டிக்காட்டிலே உன்னையும் என்னையும் விடச் சிவப்பானவங்களெல்லாம் இருக்கிறாங்க.. நானே கண்ணாரப் பார்த்தேன். தங்கம் நான் கறுத்தால் கறுத்துட்டுப்போறேன். என்னை ஒருத்தியும் கல்யாணம் பண்ணிக்க மாட்டாளேன்னு சொல்லே. அவ்வளவுதானே. வேண்டாம். கல்யாணம் பண்ணிக்கவே வேண்டாம். அது இருக்கட்டும், அப்புறம் அந்தக் கோடி வீட்டு 'சிஸ்டர்'ஸை நீ பார்த்தியோ?''

''எந்தக் கோடி வீட்டு 'சிஸ்டர்ஸ்?'' என்று கேட்டாள் தங்கம்.

''தெரியாதவளைப் போலக் கேட்கிறயே?''

''தெரியாமல்தான் கேட்கிறேன். யாருன்னு சொல்லேன். ஏன் தயங்கறே?''

''நான் ஒண்ணும் தயங்கல்லே.''

''தயங்கல்லேன்னு சொல்லலாமே! உன் முகம் இந்தப் போக்கு போக வேண்டாமே!''

''நீ வேணும்னே துரும்பைத் தூணாக்குறே! சாதாரண விஷயத்தைப் பிரமாதப்படுத்தறே!''

''நான் அப்படிச் செய்யல்லே. நீதான் பிரமாதமா நினைக்கிற விஷயத்தைச் சாதாரணம் மாதிரி காட்டிக்கிட்டுக் கேட்கிறே. அடேயப்பா, எவ்வளவு அக்கறையாக் கேட்கிறான்! ராஜா நீ சாத்தூரிலிருந்து இவ்வளவு சீக்கிரம் அஞ்சே நாளிலே விழுந்தடிச்சிக்கிட்டு ஓடி வந்தது எதுக்குன்னு இப்பவில்லே தெரியுது! நீயா வந்தியா? அவங்க கூட்டாக போட்டு வந்தியா?''

''நீ ஒரேயடியாக் கதையைக் கொண்டு போறே. அன்னிக்குக் கோயிலிலே பார்த்துப் பேசினதாச் சொன்னியே, அப்புறம் அவங்களைச் சந்திச்சயான்னு கேட்டேன். அதுக்கு இந்த அமர்க்களமா? நான் இனி இதைப் பத்திக் கேட்கல்லே; நீயும் சொல்ல வேண்டியதில்லே'' என்று தமாஷ் பாதியும் சலிப்பு பாதியுமாகச் சொன்னான் ரங்கராஜன்.

''அடபாவமே! நீ இப்படிப் பைத்தியமாயிட்டயே ராஜா! இந்த அநியாயத்தை எங்கே போய்ச் சொல்லறது? அழகழகா தங்கச் சிலைகளா உள்ள பெண்களையெல்லாம் கட்டிக்காம விட்டுட்டு, இப்போ இந்த நெட்டைக் கொக்கைப் பார்த்து மயங்கிட்டயே!''

ரங்கராஜன் குரலைக் கொஞ்சம் கடுமையாக்கிக் கொண்டு, ''நீ என்னை என்ன வேணும்னாலும் சொல்லு, அநாவசியமா அந்தப் பெண்ணைப் பத்திப் பேசாதே. நான் அவளுக்காகச் சொல்லல்லே. உனக்காகத்தான் சொல்றேன். வேடிக்கையும் விளையாட்டுமாப் பேசுற உன் அருமையான சுபாவத்துக்கு இப்படிப் பழிச்சுப் பேசுற குணம் ஆகவே ஆகாது. உலகத்திலே தமாஷ்காரங்க மத்தவங்களைப் புண்படுத்தறாப் போலே பேசுற வழக்கமே கிடையாது'' என்று சொன்னான்.

தங்கத்தின் குரலும் கடுமை கொண்டது. ''அவளைப் பழிச்சுப் பேசணும்னு நான் எவ்வளவோ பேசலாம். நீ அன்னிக்குத் தடுத்துச் சொன்னதினாலே பேசாமல் இருக்கிறேனே.

அவளும் அவள் சிங்காரமும், அவ ளோட அண்டப் புளுகும்...''

''உனக்கு மனுஷ சுபாவமே தெரி யல்லே, தங்கம். அம்மாவைப் போல நீ இருக்கிறேன்னு அவள் சொன்ன தைப் பெரிய அண்டப் புளுகுன்னு திரும்பத் திரும்பச் சொல்லாதே. ஒரு பிரியத்திலே அப்படிச் சொல்லத் தோணும். நான் கூட உன்கிட்டே சொன்னேன், அவள் உன்னைப் போல் இருக்கிறதாக. இதைப் பார்த்துட்டு, பெரிய புரட்டுக்காரி, திருடி, ஏமாற் றுக்காரின்னு பேசறது ரொம்பத் தப்பு. நீ அலங்காரம் பண்ணிக்காமல் கோயி லுக்குப் போயிட்டே. அவள் அலங்காரம் பண்ணிக்கிட்டு வந்துட்டா. அதுதானே உன் வயத்தெரிச்சல்? நீ எவ்வளவு சாதாரணப் பெண்ணா இருக்கிறேன்னு இப்பத்தான் தெரியுது.''

தங்கத்துக்கு அவன் பேசப் பேச ஆத் திரமாக இருந்தது. விஜயாவை ஒரு பொருட்டாக அவன் மதித்துப் பேசு வதை அவள் அடியோடு வெறுத்தாள்.

ரங்கராஜன் சிறிது மௌனமாக இருந்து விட்டு, ''பார்க்கப் போனால், உன்னைச் சாதாரணப் பெண்ணுன்னு சொல்றதே சரியில்லே. உங்க அப் பாவை ஊரிலே பார்த்துட்டு வந் தப்புறம்தான் மத்தவங்களை மதிக் காத உன் சுபாவமும் எனக்குப் புரியுது. உன்னைப் போல் அவரும் நம்ப வீட் டுக்குள்ளே இருக்கிறப்ப வேடிக்கை பண்ணுறார்; விளையாட்டாப் பேசுறார். ஆனா, வெளியாட்களிடத்திலே, வேலைக் காரங்களிடத்திலே பேசறபோது தேவை யில்லாமலே சிடுசிடுக்கிறார். 'சித்தப்பா! இப்படியும் நீங்க பேசுறதுண்டா'ன்னு நான் ஆச்சரியப்பட்டு, அவரையே கேட் டும் போட்டேன். அதுக்கு அவர் என்ன சொன்னார் தெரியுமா? 'இப்படிப் பேசி னாத்தான் மதிப்பாங்க. இவங்களோடே விளையாடினா மச்சான் முறை கொண் டாட ஆரம்பிச்சுடுவாங்க'னு சொன் னார். அதைப் போலத்தான் நீயும் வீட்டுக்குள்ளே ஓர் ஆளா இருக்கிறே; வெளியிலே இன்னொரு ஆளா இருக் கிறே! பணக்காரங்க வீட்டுப் பிள்ளை களுக்கு இருக்கிற சுபாவம்! நீ என்ன செய்வே?'' என்று சொல்லி முடித்தான்.

அவன் எப்போதும் விளையாட்டா கவே பேசும் சுபாவத்திலிருந்து மாறி இப்படிப் பேசுவது தங்கத்துக்குத் திகைப்பையே உண்டுபண்ணியது. அவள் ஒன்றும் பேசாமல் அவன் முகத் தையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

'ஒரே மனிதன் எத்தனை விதமான மனிதர்களாகக் காட்சி தருகிறான்' என்று தனக்குள் நினைத்துக் கொண்டு புன்னகை செய்தான் ரங்கராஜன்.

''என்னோடே பேசி ஜெயிச்சுட்ட யேன்னு சிரிக்கிறே! இல்லே?'' என்று கேட்டு அவனை மீண்டும் தமாஷ் பேச்சுக்காரனாக்க முயன்றாள் தங்கம்.

அப்போது ஜானகியம்மாளும் சுந்தரி யும் அங்கே வந்து சேர்ந்தார்கள். வரும்போதே ஜானகியம்மாள், ''உன் கிட்டே பேசி ராஜா ஜெயிச்சுட் டானா?'' என்று கேட்டுக் கொண்டே வந்தாள்.

தாயும் தங்கையும் அங்கே வந்தது ரங்கராஜனுக்குச் சிறிது ஆசுவாசமாக இருந்தது. ரூபியையும் சுந்தரியின் கையிலிருந்து வாங்கிக் கொண்டு, ''உங்க அப்பா நாளைக்கு வர்றாரா மேடி! உனக்குக் கடிதாசு போட்டாரா? நீ திருச்சிக்குப் போகப் போறயா? ஏன், இங்கேயே இரேன்'' என்றெல் லாம் குழந்தையைப் பார்த்துப் பேசினான்.

உடனே தங்கம், ''ரூபி! நீ திருச் சிக்குப் போடி! உங்க மாமாவுக்கு இனி மேல் உங்கிட்டப் பேசப் பிடிக்காது. அவர் பழைய மாமா இல்லே'' என்றாள். உடனே சுந்தரியை ஒருமுறை பார்த்து விட்டு, ''மாமாவுக்குத்தான் பைத் தியம் பிடிச்சுட்டதுன்னா, உங்க அம் மாவுக்குமா சேர்ந்து பிடிக்கணும்?'' என்று, பொருள் தொனிக்கப் பேசினாள்.

''வரிசையா அத்தனை பேரையும் பைத்தியமாக்கறயே தங்கம்! ஏன் என்ன நடந்தது?'' என்று ஜானகியம் மாள் கேட்டாள்.

''சுந்தரியையே கேளு. அவள்தானே ராஜாவோடே சேர்ந்துக்கிட்டு, அவன் பேசுறாப் போலேயே பேசுறா'' என்றாள் அவள்.

ஒருவருக்கும் விஷயம் விளங்கவில்லை.

''விவரமாச் சொல்லேன்'' என்றாள் சுந்தரி.

''எனக்கு அவளைப் பத்திப் பேசவே பிடிக்கல்லே. என்னத்தைச் சொல்லச் சொல்றே?'' என்று சொல்லி விட்டு அவள் தன் முகத்தைத் திருப்பிக் கொண்டாள்.

சுந்தரி உடனே உரக்கச் சிரித்தாள். ''ராஜா! இவளுக்கு அந்தக் கோடி வீட்டுப் பெண்ணைப் பற்றிப் பேசினாலே பிடிக்கல்லே. அதனாலே நானும் நான் தவறாமே வேணும்னே ஏதாவது பேசி இவள் வாயைக் கிண்டுறதுன்னு வச்சிருக்கிறேன். இவளுக்கு... இவ ளுக்குப் பயம்!''

''என்ன பயம்?'' என்று ரங்கராஜன் கேட்டான்.

# செட்டிநாடு

பிராண்ட்

# போர்ட்லண்ட் சிமெண்ட்




செட்டிநாடு
பிராண்ட் சிமெண்ட்
உபயோகித்து இலாப
மடையுங்கள். கட்டுமானச்
செலவைக் குறையுங்கள். நவீன
முறையில், கடுமையான தரக் கட்டுப்
பாட்டின் கீழ் தயாரிக்கப்படுவது
செட்டிநாடு பிராண்ட் சிமெண்ட்.

**பட்டுப்போன்ற மென்மை!**
**உருக்கு போன்ற உறுதி!**

**இப்பொழுது**
**எல்லா இடங்களிலும்**
**தாராளமாகக் கிடைக்கிறது**

# செட்டிநாடு

பிராண்ட்

# போர்ட்லண்ட் சிமெண்ட்

*தயாரிப்பவர்கள்:*
செட்டிநாடு சிமெண்ட் கார்ப்பொரேஷன் லிமிடெட்
பதிவு அலுவலகம்: சென்னை-1
தொழிற்சாலை: புலியூர் (கரூர்)

*சோல் செல்லிங் ஏஜெண்டுகள்,*
செட்டிநாடு ஏஜென்ஸீஸ் பிரைவேட் லிமிடெட்
6, அரண்மனைக்காரத் தெரு—சென்னை-1

''அவன் எங்கே உன்னைக் கல்யா ணம் பண்ணிக்குவானோன்னு.''

''அப்படியே பண்ணிக்கிட்டாத்தான் என்ன? பேச்சுக்கு வைச்சுக்குவோம்'' என்றாள் ஜானகி அம்மாள்.

''அழகா, படிச்சவளா, பணக்காரப் பெண்ணைப் பார்த்துத்தான் நீ கல்யா ணம் பண்ணிக்கணுமாம்.''

''ஓஹோ! அந்தப் பயம்தானா உனக்கு? ஆமாம், இந்தப் பெண்ணும் படிச்சவளா, பணக்காரியா இருந்து விட்டால் நீ என்ன பண்ணுவே?'' என்று ரங்கராஜன் கேட்டான்.

''படிச்சவள்னா, அவளைப் பார்த் தாலே தெரியாது?'' என்றாள் அவள்.

''அது எப்படித் தெரியும்?''

''அகத்தின் அழகு முகத்தில் தெரி யும். படிச்சவளுமில்லே; பணக்காரியு மில்லே. பணக்காரின்னா இந்தச் சின்ன வீட்டிலே ஏன் குடியிருக்கிறா? கோயி லுக்கு உடுத்திக்கிட்டு வர்ற ஒரு சேலை யைத் தவிர வேறே பட்டுச் சேலை யிருந்தால், அவள் ஏன் வீட்டிலே இப் படிச் சாயம் போனதுகளைக் கட்டிக் கிட்டு இருக்கிறா?''

தங்கம் அவளை வெறுப்பதற்கு அவள் ஏழை என்பதும் ஒரு காரணம் என்று ரங்கராஜனுக்கு அப்போது தோன்றி யது. அவள் ஏழையாக இல்லாவிட் டாலும் நடுத்தரமான குடும்பத்தைச் சேர்ந்தவளாக இருக்க வேண்டும் என் றும் நிச்சயம் பணக்காரியாக இருக்க மாட்டாள் என்றும் அவனும் கருதி னான். அந்தச் சமயத்தில் அவனுடைய தோற்றத்தையும் அவளைக் கண்டு தான் புன்னகையும் நமஸ்காரமும் செய்தபோது அவள் மௌனமாக நின் றதையும் நினைவுக்குக் கொண்டு வந் தான். 'குடும்பத்தில் என்ன கஷ் டமோ! அவள் முகம் அப்படி உயி ரோட்டமில்லாமல் இருந்தது?' என்று எண்ணிக் கொண்டான்.

எல்லோரும் சாப்பிட எழுந்தார்கள்.

''ராஜா! நீ ஊருக்குப் போன காரி யத்தைப் பத்தி ஒண்ணுமே சொல் லல்லையே!'' என்று கேட்டுக் கொண்டே ''அப்பாவைச் சாப்பிடக் கூப்பிடு தங் கம்!'' என்று அவளை மாடிக்கு அனுப் பினாள் ஜானகி அம்மாள்.

எல்லோரும் சாப்பிட உட்கார்ந் தார்கள்.

ரங்கராஜன் கிராம வாழ்க்கையைப் பற்றிச் சிலாகித்துச் சொல்லி, மனப் பூர்வமாக அன்பு கொண்டிருக்கும் எத் தனையோ பேர் வசிக்கும் அந்தக் கிரா மத்தை விட்டு விட்டு வருஷக் கணக் கில் வாழ்ந்தாலும் அடுத்த வீட்டுக் காரன் அன்னிய மனிதனாகவே இருக்கும் நகரத்துக்கு வந்து வாழ்வதில் அர்த்த மில்லை என்பதோடு புத்திசாலித்தனம் கூட இல்லை என்றும் கூறினான். அப்புறம் அவனே சொன்னான்:

''சித்தப்பா கண்டிப்பாச் சொல் லிட்டார். ஊரிலே அவர் சொத்துக் களை வித்துட்டு அதைப் போல் நாலு மடங்கு சொத்துக்களைச் சாத்தூரிலே விலைக்கு வாங்கியிருக்கிறாராம். அது போல நாமும் செய்யணும்னு சொல் றார். கிராம வாழ்க்கையில் முன்னேற முடியாதாம். அப்படிக் கிராம வாழ்க்கை வேணும்னா நான் பி.ஏ. பி.எல். வரையும் படிச்சது எதுக் குன்னு கேட்கிறார்.''

''அவர் கேட்கிறதும் உண்மை தானே?'' என்றாள் சுந்தரி.

''உண்மைதான். என்ன செய்யறது? உண்மைதான்! இல்லேன்னா அவ ரோட பேச முடியாமல் நான் தோற் றுப் போயிருக்க மாட்டேனே! நான் என்னென்னவோ சொன்னேன். 'போடா பைத்தியக்காரா! வேலையைப் பாரு'ன்னு சொல்லிட்டார். அவரும் நாளைக்கு வரப் போறார். எப்படிக் கண் டிப்பாப் பேசறாருன்னு பாருங்களேன்.''

''எல்லாத்தையுமே வித்துடறதா முடிவு பண்ணியாச்சா? ஒரே ஆள் தான் அவ்வளவையும் விலைக்கு வாங்கப் போகிறாரா?'' என்று சுந்தரி கேட்டாள்.

ஒரு பகுதியைத்தான் ஒருவனுக்கு விற்க முடிவு செய்திருப்பதைத் தெரி வித்த ரங்கராஜன், வீட்டை மட்டும் விற்கக் கூடாது என்று தான் நினைப் பதைச் சொல்ல விரும்பினான். ஆனால் அந்தச் சமயத்தில் அதைச் சொல்ல அவனுக்கு மனமில்லை.

''அப்போ அருணாசலம் நாளைக்கு வர்றானா தங்கம்?'' என்று நடராஜ முதலியார் கேட்டார்.

''நாளைக்கு வர்றதாகத்தான் சொன் னார்'' என்று குனிந்து கொண்டே சொன்னான் ரங்கராஜன்.



**மூவாயிரம் ஆண்டுகளில் ஒரு விநாடி!**

ஸ்விட்ஸர்லாந்து நாட்டவர் கடிகாரத் தயாரிப்பில் நிபுணர்கள் என்பது நமக்குத் தெரியும். ஆனால் எப்படிப்பட்ட நிபுணர்கள்!

சமீபத்தில் அவர்கள் தயாரித்துள்ள ஒரு கடிகாரம் மூவாயிரம் ஆண்டுகள் ஓடினால் ஒரு விநாடி வேகமாகவோ ஒரு விநாடி மெதுவாகவோ போகுமாம்!

- ஸ்காலா

அவரும் குனிந்து கொண்டே, ''வர்றேன்னு சொன்னு வந்துடுவான்'' என்று சொல்லிக் கொண்டார்.

''அம்மா! நீ ஒரு தடவை ஊருக்குப் போயிட்டு வரணும். ஊரோடே உன்னைப் பார்க்கத் துடிச்சிக்கிட்டிருக்காங்க. அந்த மாடசாமி உன்னைத் தினந் தினமும் திசை நோக்கிக் கும்பிட்டுக்கிட்டிருக்கார்.''

''பாவம்! ரொம்ப நல்லவன்'' என்றுன் ஜானகியம்மாள்.

''மகனுக்கு உன் பேருதான் வச்சிருக்கிறார்.''

''தெரியுமே!'' என்று சொல்லி, அந்த அம்மாள் சிரித்தாள்.

''அவரோட மகனுக்கு என்ன பேரு தெரியுமோ? பலராமன்! நீ ஒரு வெள்ளைக் கன்றுக்குட்டிக்கு வச்சிருந்த பேராம் அது!''

''ராஜா! நீ அதுகளுக்கு ஏதாவது வாங்கிக்கிட்டுப் போயிருந்திருக்கணும். கையிலே அஞ்சஞ்சு ரூபாயாவது குடுத்திருக்கலாம்'' என்று ஆற்றாமையோடு சொன்னாள் தாயார்.

''எனக்குத் தோணல்லேம்மா'' என்று மிகவும் வருத்தம் தோய்ந்த குரலில் கூறிய அவன், அவ்வாறு தனக்குத் தோன்றாமல் போனதன் காரணத்தையும் யோசித்துப் பார்த்தான்.

''அம்மா! ஒருத்தர்கிட்டே ரொம்பப் பிரியம் காட்டறப்போ, அவங்களோட குறைகள் மட்டுமில்லே, அவங்களோட கஷ்டங்கள் கூட நம்ப கண்ணுக்குத் தெரியறதில்லே. அவங்களுக்கு நாம்ப செய்ய வேண்டிய உபசாரங்களைக் கூட மறந்துடறோம். ஆனால் மாடசாமி அப்படியில்லே. என்னைப் பார்த்தது கடவுளைப் பார்த்த மாதிரி அவருக்கு இருந்தாலும், ஞாபகமா நுங்கும் பதனியும் கொண்டு வந்து எனக்குக் கொடுத்தார் தெரியுமா?'' என்று உருக்கமாக ரங்கராஜன் சொன்னபோது, ''இன்னொரு தடவை போறப்பவாவது மறந்துடாமே ஏதாவது வாங்கிக்கிட்டுப் போ'' என்று அந்த அம்மாள் சொன்னாள்.

''பத்து ரூபா எம். ஒ. பண்ணிடலாம்'' என்று குரல் கொடுத்தார் நடராஜ முதலியார்.

அது மிகவும் அற்பத்தனமான யோசனையாக ரங்கராஜனுக்குத் தோன்றியது. மிகவும் சங்கடப்பட்டான். சித்தப்பாவைப் போலவே அப்பாவும் ரூபாய்க் கணக்கிலேயே எதையும் எடை போடுவதைப் பார்த்து அதைப் பலமாக ஆட்சேபிக்கும் முறையில், ''அம்மா' நீ மாடசாமிக்கும் அவர் பிள்ளைகளுக்கும் துணிமணிகள் வாங்கிக் குடுக்கிறதுக்குன்னே ஊருக்கு ஒரு பிரயாணம் போய் வரணும். தரும். அப்படி ஆத்மாக்களை இனிமேல் நாம் பார்க்கப் போறதேயில்லே. கட்டாயம் நீ ஒரு தடவை போகணும்'' என்று அவன் சொல்லி வாய் மூடு முன்பே தங்கம் சொன்னாள்:

''ஆமாம். கட்டாயம் ஊருக்குப் போகணும். உன்னைப் போலக் கறுத்து அம்மாவும் குடைத் துணியாகத் திரும்பணும்!''

இதைக் கேட்டுச் சுந்தரிதான் பலமாகச் சிரித்தாள்.

அவள் பேசியதும் இவள் சிரித்ததும் சேர்ந்து ரங்கராஜனுக்கு நாராசமாக இருந்தன. பொறுமை இழந்து போய் அவன் சொன்னான்:

''நீங்களும் ஆச்சு! உங்க சிவப்பும் ஆச்சு. சிவப்பா இருந்துட்டால், உலகம் கிரீடத்தைத் தூக்கித் தலையிலே வச்சிடப் போறதில்லே. எவ்வளவோ சிவப்பா இருக்கிற ஒருத்தியை நான் ஊரிலே பார்த்தேன். இப்போ அரைப் பட்டினி கிடக்கிறாளாம். — அதுவும் அஞ்சு பிள்ளைகளோட. வேறொண்ணும் வேண்டாம். அந்தக் கோடி வீட்டுப் பெண்ணையே எடுத்துக்குவோம். அவளும் சிவப்பாத்தான் இருக்கிறா. ஆனால் அவளை நீ எவ்வளவு இழிவாய்ப் பேசறே தங்கம்! சும்மா இரு. உலகத்திலே யார் யாருக்கு என்னென்ன கவலையோ; உனக்குச் சிவப்பைப் பத்தி கவலை.''

ரங்கராஜனா இப்படிப் பேசுகிறான் என்று திகைத்து நோக்கினார் நடராஜ முதலியார்.

ஊருக்குப் போய் வந்ததில் அவன் சுபாவமே அடியோடு மாறிவிட்டது என்று தனக்குத் தானே ஊர்ஜிதம் செய்து கொண்டாள் தங்கம்.

ரங்கராஜன் அவ்வாறு பேசுவதும் அவன் விளையாட்டுப் பேச்சின் ஒரு சாயலே என்று கருதிச் சுந்தரியும் ஜானகியம்மாளும் சிரித்துக் கொண்டார்கள்.

ஆனால் சூழ்நிலையில் மௌனம் பாய்ந்து அழுத்தியது. கொஞ்சம் இறுக்கமாகவும் இருந்தது. ரங்கராஜன் சுற்றுமுற்றும் திரும்பிப் பார்த்தான். சுந்தரியின் மடியில் சாய்ந்து படுத்துக் கொண்டு சாதத்தை அதப்பிக் கொண்டிருந்த ரூபியை நோக்கினான்.

''ரூபி! உனக்கு எதைப் பத்தியடி கவலை? உனக்கும் சிவப்பைப் பத்தித் தான் கவலையா?'' என்று கேட்டுக் கையலம்புவதற்காக இலையை விட்டு எழுந்தான் ரங்கராஜன். (தொடரும்)

# அவர் மனக்கவலையற்றிருக்க வேண்டும்...

மனித உயிர்களைக் காப்பாற்றுவது அவரது சாமர்த்தியத்தையும் ஒரே மனக்குறியுடன் வேலை செய்வதையும் பொறுத்திருக்கிறது. தன் வேலையை நன்கு தடையின்றி செய்ய அவர் மனக்கவலையற்றிருக்கவேண்டும்.

அதனால்தான் அவரைப் போன்ற சிரத்தை காட்ட வேண்டிய தொழில்களில் ஈடுபட்டவர்கள் யூகோபாங்கின் நம்பிக்கையான சேவையை நாடியுள்ளனர். அவருடைய யூகோபாங்கின் கரன்ட் அக்கவுண்ட் அவரது வாடிக்கையான பண விநியோகங்களை பாங்கின் மூலம் கொடுக்க உதவுகிறது. பாங்கிற்கு கொடுக்கும் அவரது நிரந்தரக் கட்டளைகளால் ஒரு செக் எழுதும் நேரத்தையும் கூட செலவிடாது சேமிக்கிறார். மேலும், அவர் செலுத்திய தொகைகளுக்கும் பலவித செலவுகளுக்கு எடுத்த தொகைகளுக்குமான கணக்கை பாங்க் ஒழுங்காகவும், சீராகவும் வைத்துக்கொள்கிறது.










தலைமை காரியாலயம் : கல்கத்தா




நீங்கள் சேமிக்கலாம்—
யூகோபாங்க் உங்களுக்கு
உதவி செய்யும்.








# ஒரே இனம்: ஒரே மக்கள்



"ஒரே கொடியின் கீழுள்ள ஒரே நாட்டு மக்களிடையே நிறைய ஒற்றுமை இருக்கிறது. நாட்டின் மீது ஒன்றாக மெய்ப்பற்றுக்கொண்டு, இந்தியா ஒரே நாடு என்று நம்புகிறவர்களிடம் சிறுபான்மையோர் அல்லது பெரும்பான்மையோர் என்னும் பிரச்சினையே எழ முடியாது. எல்லோரும் சமமான சலுகைக்கும் சமமாக நடத்தப்படுவதற்கும் உரிமை உடையவர்கள். நமது கருத்திற்கிசைந்த நாடு, அதன் ஒவ்வொரு அங்கமான பிரதேசங்களுக்கிடையே முற்றிலும் ஒற்றுமையுள்ள மதச்சார்பற்றதாயிருக்க வேண்டும்; குடியரசு நாடாகவும் இருக்க வேண்டும்."—மகாத்மா காந்தி






இண்டியன் ஆக்ஸிஜென் லிமிடெட்

# தூங்குகிறவர்களுக்கு மட்டும்...

எஸ். சுந்தரம்

நீங்கள் அடிக்கடி கனவு காண்பவரா? அப்படியானால் சரி, உங்களிடம் தைரியமாக இந்த விஷயங்களைப் பற்றிப் பேசலாம். ''எனக்குக் கனவுகளே வருவதில்லை'' என்று பீற்றிக் கொள்பவர்களை நம்பாதீர்கள். கனவு காணாத மனிதர்களே இல்லை; ஏன் விலங்கினங்கள்கூடக் கனவு காண்பதாகத் தெரிய வந்திருக்கிறது. தவளைகள், பூனைகள், நாய்கள், முயல்கள், குதிரைகள் எல்லாம் கனவு காண்பதுண்டாம்!

கனவு கண்டு விழித்தவுடனே அது நிஜமாகவே நடந்தது போன்ற உணர்ச்சி நமக்கு ஏற்படுவதும், அந்தக் கனவின் பெரும் பகுதியை அடுத்த நாள் காலையிலேயே நாம் மறந்து விடுவதும் சகஜம். கனவு காண்பதைப் பற்றிய பழைய நம்பிக்கைகள் பல மிக வேடிக்கையானவை. கனவு காணும்பொழுது, ஒருவரது ஆத்மா உடலிலிருந்து வெளிக் கிளம்பி, சம்பவம் நடக்கும் இடத்துக்கே போய்விடுவதாகச் சில பழங்குடி மக்கள் இன்றும் நம்புகிறார்கள். இதனால், ஆழ்ந்து உறங்குபவர்களை அவர்கள் அவசரமாக எழுப்புவதில்லை. ஒருவேளை ஆத்மா வெகு தூரம் சென்றிருந்து விழிப்படைவதற்குள் அது உடலை அடையாவிட்டால் மனிதன் இறந்து விடுவான் என்று அவர்கள் அஞ்சுகின்றனர். இதே காரணம் பற்றிச் சவங்களைக்கூட அவர்கள் உடனே அடக்கம் செய்வதில்லை. யார் கண்டார்கள்? ஒரு வேளை அந்த ஆத்மா கனவு காணப் போயிருக்கலாமே என்பார்கள்!

ஜூலியஸ் சீசரின் மனைவி கல்பர்னியா தனது கணவனின் அழிவைப் பற்றிக் கண்ட கனவு உடனே பலித்து விட்டது என்பார்கள். நம் நாட்டிலும் கட்டபொம்மன் வரலாற்றில் இப்படியொரு செய்தி கூறப்படுகிறது. நமது புராதன இதிகாசங்களான இராமாயண மகாபாரதங்களிலும் கனவுகளைப் பற்றிய விவரங்கள் ஏராளமாக எழுதப்பட்டிருக்கின்றன. விவிலியம் (Bible) குரான் முதலிய வேதப் புத்தகங்களிலும் கனவின் மூலம் முன்னறிவிப்புத் தரப்பட்டதாகத் தெரிகிறது. கனவுகளைப் பற்றிக் கூறும் 'கனு நூல்'' என்றொரு நூல் இருந்ததாக அடியார்க்கு நல்லார் உரை மேற்கோள் குறிப்பிடுகிறது. சீனர்கள் கனவுகளின் பலனைப் பற்றி ''மெங் ஷு'' என்று ஒரு புத்தகமே எழுதி வைத்திருக்கிறார்களாம். கனவுகளின் பலன்களைப் பற்றி இன்றைக்கும் நமது பஞ்சாங்கங்களில் எழுதி வருகிறார்களல்லவா?

## கனவே வா!

எதிர்காலத்தைப் பற்றிய கனவுகளை வரவழைக்க வேண்டுமானால் அதற்காக வெவ்வேறு நாட்டு மக்கள் வெவ்வேறு விசித்திர வழிகளைக் கடைப்பிடித்தார்கள்.

மூன்று ரோஜா மலர்களை எடுத்துக் கொள்ளவும். அவற்றைக் கந்தக ஆவியில் காட்டவும். அவற்றுள் ஒன்றைப் பிற்பகல் சரியாக மூன்று மணிக்கு ஒரு யூ (Yew Tree) மரத்தினடியில் புதைக்கவும். இரண்டாவதைப் புதிய சமாதி ஒன்றில் புதைக்கவும். மூன்றாவதைத் தலையணையின் அடியில் வைத்துப் படுக்கவும். உங்கள் எதிர்காலம் கனவில் வருமாம்!

நல்ல வெல்வெட்டினால் ஒரு குண்டூசி குத்தும் குஷனைத் தயாரிக்கவும். அதில் ஒரு புறமாக மிகச் சிறிய குண்டூசிகளை உங்கள் பெயர் வடிவத்தில் குத்தி வைக்கவும். இன்னொருபுறம் ஒரு வட்டத்தினுள் சிலுவை இருப்பது போலப் பெரிய குண்டூசிகளைக் குத்தவும். படுக்கைக்குப் போகுமுன்பு இந்தக் குஷனை உங்களது இடது கால் உறையினுள் (Stocking) போட்டுப் படுக்கையின் கால்மாட்டுப் பக்கத்தில் மாட்டவும். எதிர்காலம் உங்கள் கனவில் வரும்.

வரலாற்றில் இடம் பெற்ற கனவுகளைப் பற்றியே ஒரு வரலாறு எழுதலாம். ஆப்பிரிக்கக் கண்டத்தில் கென்யா பகுதியில் மாசாய்ப் பழங்குடி மக்களிடையே லியானுஷா



என்ற மிகச் சிறந்த ஒரு மந்திரவாதி இருந்தாராம். நூறு ஆண்டுகள் வாழ்ந்த அந்த மந்திரவாதி சாவதற்குமுன் தம் நாட்டு மக்களை அழைத்துத் தாம் கண்ட ஒரு கனவைப் பற்றிக் கூறி எச்சரிக்கை செய்தாராம். ''மக்களே, நம் நாட்டில் நெடுக நீளமான ராட்சதப் பாம்பு ஒன்று படுத்திருப்பதாகவும், மிகப் பெரிய பறவைகள் நாட்டின் மீது பறப்பதாகவும் அந்த நிழல் நம் மீது விழுவதாகவும் கனவு கண்டேன். வெள்ளைக்காரர்கள்தான் இந்தப் பாம்பையும் பறவைகளையும் கொண்டு வருகின்றனர். ஆகவே, வெள்ளைக்காரர்களுடன் நீங்கள் சண்டையிட்டால் பஞ்சத்தாலும் நோயாலும் மாள்வீர்கள். அதையும் கனவில் கண்டேன்'' என்றாராம். சில நாட்கள் கழித்துப் பிரிட்டன் தனது காலனியாகக் கென்யாவைப் பிடித்தபொழுது எதிர்ப்பே இல்லையாம்! பல ஆண்டுகள் கழித்து உகாந்தா ரயில்வே ஸ்தாபனம் ரயில்களை அங்கு ஓட்டிய பொழுது அவை தான் அந்தப் பாம்பு என்றும், விமானங்கள் தாம் பறவைகள் என்றும் மக்கள் நம்பினராம்!

திப்பு சுல்தான் ஸ்ரீரங்கப் பட்டினத்துச் சண்டையில் தோற்று மறைந்த பிறகு அவரது

அந்தரங்க டைரியை வெள்ளைக்காரர்கள் கைப்பற்றினராம். அதில் இப்புகல்தான் அவ்வப்பொழுது கண்ட கனவுகளைப் பற்றியும், அவற்றின் பலிதங்களைப் பற்றியும் அவர் கைப்படவே பெர்சிய மொழியில் எழுதியிருந்தாராம். அதில் சிலவற்றை மொழிபெயர்த்திருக்கிறார்கள்.

## கனவுக் கவிதை

கோல்ரிட்ஜ் என்ற ஆங்கிலக் கவிஞர் தாம் கண்ட கனவைப் பற்றி 'குப்ளகான்' என்று ஒரு கவிதையே எழுதி வைத்திருக்கிறார். ஆனால் அது முற்றுப் பெறவில்லை. நம்மில் பலர் கனவுகளை அலட்சியப்படுத்தி விடுகிறோம். வெளிநாடுகளில் அப்படி இல்லை. கனவுகளைப் பற்றி அதி தீவிரமாக ஆராய்ச்சிகளை நடத்தி வருகிறார்கள். சமீபத்தில்கூட 635 அமெரிக்கக் கல்லூரி மாணவர்கள் தங்கள் கனவுகளைப் பற்றி நிபுணர்களிடம் விவரித்தனராம்.

சாதாரணமாக நூற்றுக்கு நாற்பத்தாறு கனவுகளில் புதியவர்களையே நாம் காண்கி







றோம். கனவில் வரும் இடங்களில் பல நமக்குப் புதியவையாகவே இருக்கின்றன. கனவுகளில் நாமே இன்னொருவராகவும் மாறுவதுண்டு. கனவுகளில் நிறங்களை அடையாளம் காண முடியும். கனவுகளில் கால வேறுபாடு சரியாகத் தெரிவதில்லை. இப்படிப் பல உண்மைகள் தெரிய வந்திருக்கின்றன.

உறங்குபவனின் சூழ்நிலைக்கும் கனவுகளுக்கும் நல்ல தொடர்பிருக்கிறது. ஒரு முறை ஒருவர் கட்டிலில் படுத்து உறங்கும்போது பிரஞ்சுப் புரட்சியைக் கனவில் கண்டாராம். அப்பொழுது கட்டிலின் மேலே மாட்டியிருந்த படச் சட்டம் ஒன்று அவர் கழுத்தில் விழவும் அவர் கழுத்து வெட்டும் இயந்திரக் கத்தியே (கிலட்டின்) தமது கழுத்தில் விழுந்து தாம் கொலையுண்டதாகக் கனவு கண்டாராம். ஒருவர் கனவு காணும்பொழுது மின்சார மணி ஒலித்ததாம். அப்பொழுது அவர் விமானத்தில் போவதாகக் கனவு கண்டாராம். இன்னொருவர் தலையைத் தாழ்வாக வைத்து உறங்கும்பொழுது அவர் முகத்தில் இன்னொருவர் நீர்த் துளிகளைத் தெளித்தாராம். பிறகு உறங்கியவரை எழுப்பிக் கேட்டால் அவர் கடலில் மூழ்குவது போலக் கனவு கண்டதாகத் தெரிவித்தாராம்.

## அடக்கப்பட்ட இச்சைகள்

கனவுகளைப் பற்றி அநேக தத்துவங்கள் கூறப்பட்டிருக்கின்றன. பிளேட்டோ, — அரிஸ்டாட்டில், லீப்னிட்ஸ் முதலியவர்களும் சமீப காலத்தில் ஃபிராய்ட், யுங், ஆட்லர் முதலியவர்களும் கனவுகள் ஏன், எப்படித் தோன்றுகின்றன என்று ஆராய்ந்துள்ளனர். அடக்கப்பட்ட இச்சைகளே கனவாக வருவதாகச் சிலரும், கடந்தகால அநுபவங்களே கனவாக வருவதாகச் சிலரும், விழிப்பு ஏற்படாமல் தூக்கத்தை நீடிக்க மூளையின் தந்திரச் செயலே கனவு எனச் சிலரும் பலவிதமாகக் கூறுகின்றனர்.

தூங்கும் ஒருவரின் மூளையில் சில சாதனங்களைப் பொருத்தி வெகு தொலைவில் இன்னொருவரை ஏதாவதொரு விஷயத்தைப் பற்றிச் சிந்திக்க வைப்பார்கள். பிறகு உறங்குபவரை எழுப்பிக் கேட்டால் இரண்டாம் நபர் சிந்தித்ததற்கும், அவர் கண்ட கனவுக்கும் தொடர்பு இருப்பதாகத் தெரிய வந்தது.

பழைய காலத்தில் மக்கள் விசேஷமான முன்னறிவிப்புக் கனவுகளுக்காக உயிரையும் விடத் தயாராக இருந்தனர். புகையிலை, கஞ்சா இவற்றை அபரிமிதமாகத் தின்று கனவு காண முயன்றனர் சிலர். இன்னும் சிலர் புதிதாகக் கொல்லப்பட்ட மிருகத்தின் தோலால், விழி பிதுங்கும்படி ஒரு மனிதனின் கழுத்தை நெரிப்பர். அவன் மயங்கி விழுந்ததும் கனவு காண்பான் என நம்பினர். ஆனால் இன்றைக்கும் பலர் மயக்க மருந்து உண்டு கனவுகளை வரவழைக்க முடியும் என்று நம்புகின்றனர்.

என்ன தூங்கிப் போய் விட்டீர்களா? கனவா காண்கிறீர்கள்? சரி, சரி இனிமேல் உங்களிடம் பேசிப் பயனில்லை)

# ப்ரூக் பாண்ட்

# ப்ரூ இன்ஸ்டன்ட்

## நொடிப் பொழுதில் தயார்! கப்புகள் கணக்கிலே திருப்தி!

ப்ரூ தயாரிப்பது சுலபம்! வெந்நீரை ஊற்றி, விரும்பும் சுவை பெற பாலும் சர்க்கரையும் சேர்த்துக் கொள்ளவும். அசல் காபி–சிக்கரி மணமும் சுவையும் கொண்டு உங்களுக்குப் புத்துணர்ச்சி அளிக்க நொடிப் பொழுதில் ப்ரூ தயாராகிவிடுகிறது!

நினைவிருக்கட்டும், ப்ரூ தயாரிப்பதிலே, சிறிதுகூட சிரமமோ அல்லது வடிகட்டும் தொந்தரவோ கிடையாது.

இதற்கு மேலாக, நீங்கள் விரும்பும் சுவைக் கேற்றபடி ப்ரூவை சிறிது அதிகமாகவோ அல்லது குறைவாகவோ சேர்த்து தயாரித்துக் கொள்ளலாம்.

வாங்குங்கள் ப்ரூ—காபியும் சிக்கரியும் கலந்த சுவையை நன்கறிந்த ப்ரூக் பாண்டின் ருசி பார்த்துத் தரம் காணும் திறமையாளர்களால் கவனத்துடன் கலக்கப்பட்டது.

இது நொடிப் பொழுதிலாகிறது! நேரம் மிச்சம்! பணம் மிச்சம்!



பெர்க்லி-கல்கி
இலக்கியப்
பரிசுத்திட்டம்



[மூன்றாவது பரிசுக்குத் தகுதி பெறும் ஹாஸ்யக் கதை எதுவும் இல்லையாதலால் மூன்றாவது பரிசை ஒரு சமூகக் கதைக்கு அளிப்பதெனப் பஞ்சாயத்தார் முடிவு செய்தனர். — ஆசிரியர்]

# பால் மனம்

**கோமகள்**

மூன்றாவது பரிசு
பெறும் இரண்டாவது
சமூகக் கதை



**ப**டைப்பின் நேர்த்தி வெகு விசித்திரமானது. அதில் மனிதனின் ஆரம்ப கட்டமான குழந்தைப் பிராயம்தான் எத்தனை அழகு படைத்த ஒன்று! பட்டை தீட்டாமலேயே ஜொலிக்கும் கட்டி வைரமாக எழில் சிந்தும் அந்தப் பருவம். மீட்டாமலேயே குரலிடும் மோகன வாத்தியமாக இசை யிடும் நாத நயம் அதன் மழலை. லோகாயதலாப நஷ்டங்களை, சூதுவாதுகளைக் கற்ற பெரியவர்கள்கூட சின்னக் குழந்தையின் சிரிப்பில் சொக்கி நிற்கின்றனர், பெருங் காற்றே தென்றலுக்குத் தலை சாய்த்து நிற்பது போல்! எங்கள் வீட்டில் என் அண்ணாவின் முதல் குழந்தையாகக் கிருஷ்ணா பிறந்த போது நாங்கள் கடவுளின் கருணையை ஏற்று மகிழ்ந்தோம். எங்களிடையே கிருஷ்ணா வளர ஆரம்பித்தான். இல்லை — கிருஷ்ணாவை நாங்கள் வளர்க்க ஆரம்பித்தோம்!

''கிருஷ்ணு!'' என்று குரல் கொடுத்த வாறே குழந்தையைத் தேடினுள் மன்னி.

பிஞ்சு விரல்களால் ஜன்னலைப் பிடித்த வாறே நின்று தெருவைப் பார்த்துக் கொண் டிருந்த குழந்தை கிருஷ்ணு தன் முகத்தைத் திருப்பிப் பார்த்தாள். ஈரம் பிதுங்கும் வெள்ளரிப் பிஞ்சாக முகம். சிறகுகளாகப் படபடக்கும் இமைகள். கண்ணுடி மணி களாக உருளும் விழிகள். பூ நயம் போல் உதடுகள். ஒளியரும்புகளான பற்கள். நுங்கு நீரின் குளிர்ச்சியாகக் குரல். தெய்வ வடிவைச் சின்ன உடலில் சிறைப்பிடித்த கலை. முகத்தில் எந்த நேரமும் உலகைப் புரிந்து கொள்ள முயலும் மன வளர்ச்சிக்கான ஒரு சிந்தனைச் சாயல்.

''என்னடி கண் ணு! தெருவிலே என்ன பார்க்கிறே?'' என்று அவளை வாரி அணைத் துக் கொண்டாள் மன்னி.

''அம்மா! அதோ பாரம்மா, நாய்க் குட்டி!'' அவள் பிஞ்சு விரல் சுட்டிய இடத் தில் குப்பைத் தொட்டியோரம் ஒரு சொறி நாய் படுத்திருந்தது.

''சீ! அது அசிங்கம்! நம்ம நாய்க்குட்டி 'டாமி'யைப் பார். அழகாக, சுத்தமாக....''

''அம்மா! அந்த நாய்க்கும் சோப்பு போட்டுக் குளிப்பாட்டினு என்னம்மா?''

''அது தெரு நாய். அதைத் தொடப் படாது.''

''ஏன், தொடப்படாது? நம்ப நாயை மட்டும் தொடலாமா?''

''அப்பா திட்டுவாங்க'' என்று முத் தாய்ப்பு வைக்க முயன்றுள் மன்னி.



குழந்தையா விடுவாள்? ''அப்பா, திட்டாட்டா தொடலாமா அம்மா?'' என்று தன் கேள்வியைத் தொடர்ந்ததும் நான் அடக்க முடியாமல் சிரித்துவிட்டேன்.

மன்னி என்னிடம் குறைப்பட்டுக் கொண் டாள். ''பாரேன் ராமு! இவள் கேள்விக்குப் பதில் சொல்லவே ஒரு தனி ஆள் போட வேண்டியதுதான்! உம்! நீ படி. இவள் இப்படிப் பேசினுல் நீ படிக்கிறதெங்கே?.... வாம்மா, கிருஷ்ணு! உள்ளே போகலாம். சித்தப்பா படிக்கட்டும்.''

எனக்குப் படிக்க ஓடவில்லை. குழந்தைக்குத் தெரு நாயும், வீட்டு நாயும் வேறில்லை என்ற சமரச நோக்கா? அல்லது இத்தகு சந்தேகங்களின் மூலம் உலகை அறிய முயலும் ஆவலா?

சதா 'சள சள'வென்ற பேச்சு. சிலபோது அவசரத்துக்கு நினைத்தபடி பேச்சு வராமல் ஜாடைகள் காட்டும் அழகு. கூடக் கூட எந்த வேலைக்கும் வந்துவிடும் சுறுசுறுப்பு. மன்னிக்குத் தெரியாமல் அரிவாள்மணையில் உட்கார்ந்து விரலைக் காயப்படுத்திக்கொண்டு அதை அம்மா பார்த்து விட்டாளோ என்று ஓரக் கண்ணுல் நோட்டமிட்டு அச்சத்தோடு தூர வந்துவிடும் குறும்பு. மூன்றே வயதை எட்டிய குழந்தை கிருஷ்ணு கேள்விகளின் சொரூபம்தான்! காலையில் அப்பாவிடம் பாடம் சொல்லிக் கொள்ளும்போது ஆரம் பிக்கும் கேள்வியை, இரவு அம்மாவிடம் படுக்கும் போதுதான் முடிப்பாள். இடையே அவள் சிரிப்பதைவிடச் சிந்திப்பதுதான் அதிகம் போல் தோன்றும்.

காலையில் கீரை கொண்டு வரும் பெண், ''குழந்தை!'' என்றுதான் குரல் கொடுப் பாள். குழந்தை எங்கிருந்தாலும் ஓடிப் போகும்! கன்னத்தை வழித்து முத்தமிட்டு விட்டு அவள் தரும் கீரைக் கட்டை வாங்கி வருவதில் குழந்தைக்குத் தனி ஆசை. கீரைக்காரப் பெண் கல்யாணம் செய்து கொண்டு போய் விடவும், அவள் அம்மா கீரை சுமந்து வர ஆரம்பித்தாள். வயதான வள் அவள். நோய்க்காரி என்றும் தெரிந் தது. அவளைக் கண்டதும் கிருஷ்ணு உற் சாகத்துடன் ஓடினுள்.

''கிருஷ்ணு! கிழவியைப் போய்த் தொடாதே. உடம்பு சரியில்லாதவள்'' என்று மன்னி கூவினுள்.

அவள் குரலிலிருந்த கண்டிப்பால் திகைப் படைந்த குழந்தை என்னைப் பார்த்தாள். ''அப்பாவுக்கு உடம்பு சரியில்லாதப்போ நீ தொடலியா சித்தப்பா?''

நான் கிருஷ்ணுவைத் தூக்கிக் கொண் டேன். ''சமர்த்தா அம்மா சொன்னபடி கேட்டா, சாயந்திரம் காந்தி மண்டபம் அழைச்சுக்கிட்டுப் போவேன்.''

''நிஜம்மாவா சித்தப்பா?''

''ஆமாம்!''

காந்தி மண்டபத்துக்குக் குழந்தையை அழைத்துப் போய்விட்டாள். அவனுக்கு ஏற்படும் சந்தேகங்களுக்கு எவ்வளவு விடைகள்! புல் தரையில் ஓடுவதிலிருந்து, செயற்கைத் தாமரைக் குளத்தில் தன் நிழலுருவத்தைக் கண்டு கை கொட்டுவது வரை எதிலும் ஆச்சரியந்தான்! நேரு பூங்காவின் மிருகங்களிடம்தான் எத்தனை ஆசை! பயபக்தியான நேசமான பார்வை! எப்பொழுதும் பார்த்திருக்கும் பஞ்சவர்ணக் கிளியிலிருந்து, புதிதாக வந்த புலிக் குட்டி வரை எதைக் கண்டாலும், நேற்றுப் பார்த்த நேசப் பார்வையில் இம்மி மதிப்பும் குறைந்திருக்காது. குட்டி ரயிலில் குதூகல உருவமாய், மகிழ்வின் பனித் துளியாய்க் கையசைத்தவாறே செல்லும்போது ஒரு தனி சிலிர்ப்பு அவனுக்கு. ஊஞ்சலில் ஆடும் போதும், சறுக்கி விளையாடும் போதும் ஓர் ஆவேசக் குதூகலம் அவன் முகத்தில் ஏற்படும். வீட்டுக்குத் திரும்பும் போது தெருவில் எப்போதோ தென்படும் குதிரை வண்டி, ஓரத்தில் மேயும் ஆட்டுக்குட்டி ஆகியவற்றைக் கண் கொட்டாமல் பார்ப்பான். "குதிரையும், ஆட்டுக்குட்டியும் ஏன் நேரு பூங்காவில் இல்லை, சித்தப்பா?" என்ற கேள்வி வேறு!

அன்று மாலை சொன்னபடியே கிருஷ்ணனைக் காந்தி மண்டபத்துக்கு அழைத்துச் சென்று விட்டுத் திரும்பிக் கொண்டிருந்தேன். கை வண்டியை நிறைந்த பாரத்துடன் தெம்பி இழுத்தவாறே சென்று கொண்டிருந்தான் கூலியாள் ஒருவன்.

"சித்தப்பா! பாவம் அவன்! காலிலே செருப்பே போடலே சித்தப்பா! கல் குத்துமே. வெய்யில் சுடுமே! என்னோட செருப்பு அவனுக்குச் சின்னது! உன் செருப்பைக் குடுத்துடு சித்தப்பா! நீதான் பூட்ஸ் வச்சிருக்கியே....!"

குழந்தையின் குரலிலிருந்த உருக்கத்தையும், துன்பம் கண்டு பொறாத மனத்தையும் கண்டு நான் நெகிழ்ந்தேன். அவனை அப்படியே வாரி அணைத்துக் கொண்டேன். குழந்தையா பேசுகிறான்?

"செருப்பைக் குடுத்துடு சித்தப்பா!"

"அவன் தூரப் போயிட்டான். இன்னொரு நாள் குடுத்துக்கலாம்" என்று அவனைச் சமாதானப்படுத்திவிட்டுப் பேச்சை மாற்றினேன். "இன்னைக்கு நம் வீட்டில் அடைதானே? உனக்கு ரொம்பப் பிடிக்குமில்லே?"

"அடை மொறு மொறுன்னு இருக்கும். ரொம்பப் பிடிக்குமே!"

குழந்தை மறதி! அதை உபயோகித்துத் தானே அவர்களைத் தன் நினைவிலிருந்து மாற்றி நம் உணர்வுக்கு அடிமையாக்கி விடுகிறோம்?

அன்று கிருஷ்ணனுக்குப் பிறந்த நாள்! விசேஷமாகச் சர்க்கரைப் பொங்கலும், வடையும் செய்திருந்தாள் மன்னி. புதிய உடைகளைப் போட்டுக் கொண்டு குதித்தான் குழந்தை. சாப்பிடத் தோன்றாத அளவு சந்தோஷம் அதில். அவன் பெயரில் தயாரான விருந்தை நாங்கள் எல்லாம் வயிறு புடைக்க உண்டோம்!

இரண்டு மூன்று தினங்களாக வராமல் இருந்த கீரைக்காரக் கிழவி அன்று வந்தாள்.

"சமையல் எல்லாம் காலையிலேயே ஆச்சு. இன்னிக்குக் கீரை வேண்டாம்" என்றாள் மன்னி.

"அம்மா!" வேண்டுகோளாக ஒலித்தது கிருஷ்ணனின் குரல். "அந்தக் கிழவிக்குச் சர்க்கரைப் பொங்கல் குடேன்."

"அடி என் சமர்த்து! எனக்குக்கூட மறந்து போச்சே... ஏ கிழவி! கொஞ்சமிரு, வரேன்...."

இலை நறுக்கில் உணவு வகைகளை வைத்துக் கிழவியின் கையில் இட்டாள் மன்னி. கிழவியின் நடுங்கும் கரங்கள் ஆவலோடு உணவை ஏந்தின.

"அம்மா! கிழவி கை ஏன் நடுங்கறது?"

"வயசானவள். பலமில்லே."

"எனக்குப் பலம் வரணும்னுதானே டானிக் தரேம்மா. அந்த டானிக்கைக் கிழவிக்கும் குடும்மா!"

"இதோ பார், கண்ணு! எனக்கு எல்லாம் தெரியும். நீ பேசாமல் இருக்கணும்."

கிழவி போகவில்லை; கொடியருகே போய் உட்கார்ந்து சாப்பிட ஆரம்பித்தாள். அவளையே கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்த குழந்தை தன் தாயருகே தயக்கத்தோடு போனான்.

"அம்மா! பூச்செடிகிட்டே சொத சொதன்னு சேறுக் கிடக்கும்மா!"

"அப்படித்தான் இருக்கும்."

"கிழவி பாவம்மா! சேத்திலே உக்காந்து சாப்பிடறாளே....!"

"அவளுக்கு அப்படித்தான் கண்ணு பழக்கம்."

"அம்மா! கிழவிக்கும் மேஜையின் மேலே சாப்பாடு போடும்மா!"

"போடக் கூடாது. அப்பா வைவார்."

"நம்ப மட்டும் ஏன் மேஜையின் மேலே சாப்பிடறோம்?"

"அப்படித்தான் சாப்பிடணும்."

"போம்மா! கிழவி பாவம்!"

"உன்னைச் சீக்கிரமே கிண்டர் கார்டனிலே போட்டுடறேன், இரு. ஸ்கூலுக்குப் போனாத் தான் நீ கேள்வி கேட்க மாட்டே!"

"ஓ! எனக்கு ஸ்கூலுக்குப் போகப் பிடிக்குமே. 'யூனிபாரம்' போட்டுட்டுப் பெட்டி எடுத்திட்டு, பெரியம்மா வீட்டு அக்கா போற மாதிரி, நானும் பஸ்லே போவேனே!"

அவன் ஞாபகத்தைத் திசை திருப்பி விட்ட திருப்தி மன்னியின் முகத்தில் விரிந்தது. தனக்கென்று ஏற்படும் தனித்த உணர்ச்சிகளை ஓர் உருவமாக்கிச் சேமிக்க முடியாத குழந்தை மனம், இலேசான பஞ்சு போல் நாம் ஊதும் திசைக்கெல்லாம் பறந்தோடுகிறது. நாளைக்கே அவன் பெரியவனானால் தன் உணர்ச்சிகளைக் கடைப்பிடிக்க மாட்டானா என்ன?

"திருமழிசைப்பால் உற்சவத்துக்கு வரும்படி அக்கா எழுதியிருக்கிறாள்" என்று மன்னி ஆரம்பித்தாள்.

"இப்போது இருக்கிற வேலையில் சீர்காழி போகிறதாவது?" என்று அண்ணா எடுத்ததுமே மறுத்து விட்டார்.



மதராஸ், ஐ. எஸ். ஆர் ஐயங்கார் & கம்பெனியின் பாகஸ்தரான ஸ்ரீ எஸ். ராஜகோபாலனுடைய குமாரத்தி சௌபாக்யவதி ஜானகிக்கும், சேலம் ஸ்ரீ என். வி. சேஷய்யங்கார் குமாரன் சிரஞ்சீவி என். எஸ். விஜயராகவனுக்கும், 23-4-69 அன்று திருமணம் வெகு சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்!

## அறுபதாவது ஆண்டு விழா



திருச்சி, அகஸ்தியர் புத்தகசாலை உரிமையாளர் திரு **வி சுப்ரமண்ய அய்யர்** அவர்களின் 60-வது ஆண்டு விழா சமீபத்தில் திருச்சி குஜிலித் தெரு, சம்பூர்ணத்தம்மாள் திருமண மாளிகையில் விமரிசையாக நடந்தது. அதுசமயம் ஏராளமான அன்பர்களும் வர்த்தகப் பிரமுகர்களும் வந்திருந்து விழாவினைச் சிறப்பித்தனர்.

# முப்பது



## அவருக்கு 30 வருடங்களாக இன்பம் ஊட்டி வருகிறது பார்லே பிஸ்கெட்...

...ஆனால் இப்போதுதான் அவர்களுக்கு கிடைக்கின்றன பல ரகங்கள்— [illegible] இப்பொழுது ஒரு பெரிய குடும்பம். அவர் சுவைத்து மகிழ்வது **ஜெ::ப்ஸ், ஓர்லே, சீஸ்லிங்ஸ், ஸ்பின்–ஹெர்**— பாரதத்தின் முதன்மையான உப்பு பிஸ்கெட்டுகள்—குறிப்பாக **க்ரூகோ மற்றும் மொனேகோ** —பாரதத்திலே உச்ச விற்பனையுடைய இனிப்பு மற்றும் உப்பு பிஸ்கெட்டுகள். ஆனால் அவர் கருத்து உங்களுக்கு வழி காட்டத் தேவையில்லை—அவை யாவற்றையுமே நீங்கள் ருசித்துப் பாருங்கள். உங்கள் சுவைக்குகந்ததை நீங்களே கண்டறியுங்கள். அவை யாவுமே பாரதத்தின் மிக நவீனமான பிஸ்கெட் தொழிற்சாலையில் உயர்தரமாகத் தயாரிக்கப்பட்டவை.



க்ரூகோ



மொனேகோ



ஓர்லே



ஸ்பின்-ஹெர்



ஜெ::ப்ஸ்



சீஸ்லிங்ஸ்

**பார்லே**

**பிஸ்கெட்**

வாங்குக இன்றே, பார்லே நன்றே !

everest/565 a/PP tam

''நான் மட்டுமாவது போயிட்டு வரேனே. போகல்லேன்னு எனக்கு ஒரு குறையாவே இருக்கும்.''

''அடுத்த வருஷம் பார்த்தால் போச்சு!''

''அடுத்த வருஷம் அக்கா மாற்றலாகிப் போயிடுவாள்.''

''நமக்கே அந்த ஊருக்கு மாற்றலானால் பார்த்துக்கறது. இங்கிருந்தே மனசாலே சேவிச்சுடு இப்போது !''

மன்னி பதில் பேசவில்லே. அவளுக்கு இந்த விஷயத்தில் மனத்தாங்கல்தான் என்று காட்டிக் கொள்ளும் விதமாக, அழாமலிருக்கும் போதே, தூளியில் கிடந்த கைக் குழந்தை ரவியை ஆட்டிவிட்டாள் !

கோடை மழை கொட்டிக் கொண்டிருந்தது. தெருவெல்லாம் ஈர நசநசப்பு. மரங்களும், செடிகளும், மண்ணும் குளிர்ந்து கிடந்தன. இரவின் அமைதியை மழையும், சில் வண்டுகளின் ரீங்காரமும், தவளைகளின் சத்தமும் அவ்வப்போது கலைத்துவண்ணம் இருந்தன.

தெருவை ஒட்டிய வராந்தாவில் மழையின் குளிர் நடுக்கத்தைக் குரலில் பிரதிபலித்தவாறு இரண்டு சிறு ஆட்டுக் குட்டிகள் நின்றிருந்தன. ''ம்மே, ம்மே !'' என்ற அவைகளின் குரல்களைச் சங்கீதமாக அநுபவித்து ரசித்தான் கிருஷ்ணு. அவைகளின் பட்டுப் போன்ற உடல்களைத் தடவிப் பார்த்தான். கொஞ்ச நேரம் பயந்த ஆட்டுக் குட்டிகள் அச்சம் தெளிந்து அவனுடன் விளையாட ஆரம்பித்தன. தூக்கம் கண்களைச் சொக்கும் போதுதான் அவன் உள்ளே வந்தான்.

இரவெல்லாம் மழை கொட்டோ கொட்டென்று பெய்கிறது. தெரு வராந்தாவில் ஒதுங்கியிருந்த ஆட்டுக் குட்டிகள் அங்கேயேதான் இருக்கின்றன என்பதற்கு அடையாளமாக அவற்றின் ஈனசுரமான குரல்கள் நடுக்கும் குளிரூடே மந்தமாகக் காதில் விழுந்து கொண்டேயிருக்கின்றன.

விடிந்த பொழுதோடே கைக் குழந்தையின் பசிக் குரல் ஒலமிடுவதும், மன்னி ஃப்ளாஸ்க் வெந்நீரை எடுத்துப் பாலைக் கரைத்துப் புட்டியில் நிரப்புவதும் தெரிகிறது. குழந்தை ரவி புட்டிப் பாலை மெல்ல உறிஞ்சுகிறான். அப்போது தெருவில் பால்காரன் குரல் கொடுக்கிறான். மன்னி பால் புட்டியை ரவியின் வாயிலிருந்து எடுத்துக் கீழே வைத்து விட்டுப் பால் வாங்கப் போகிறாள். சிறிது வயிறு நிறைந்த மகிழ்ச்சியில் கைகால்களை உதைத்துக் கொண்டான் அவன்.

பாலை வாங்கி வந்த மன்னியிடம் அப்போதுதான் விழித்துக் கண்களைக் கசக்கிக் கொண்டிருந்த கிருஷ்ணு அதீத ஆவலோடு கேட்டான். ''அம்மா ! ஆட்டுக் குட்டி இருக்காம்மா ?''

''இருக்கே. தெருவிலே போய்ப் பாரேன். ராத்திரியெல்லாம் மழையில் நனைஞ்சிருக்கும் போலிருக்கு. பாவம் !''

கிருஷ்ணு 'விருட்'டென்று எழுந்தோடினான். தெருவில் அவன் மழலையுடன் ஆட்டுக் குட்டிகளின் நேச பாவமான குரல்களும் கலந்து ஒலித்தன.

## சிக்கலோ சிக்கல்!

ராணுவத்தில் உள்ளவர்கள் எல்லோரும் ஹிந்தி ஓரளவு பயிற்சி பெற வேண்டும் என்ற விதி அண்மையில் ஏற்படுத்தப்பட்டுள்ளது. 45 வயதைத் தாண்டிய ஒரு மேஜர் ஹிந்தி கற்பதில் ஆர்வம் காட்டவில்லை. இந்த மேஜரை ஓர் இளைஞரைக் கொண்டு பரீட்சிக்குமாறு கூறினர். இளைஞரும் எப்படியாவது மனச்சாட்சிக்குத் துரோகம் செய்யாமல் மேஜரைப் பரீட்சையில் தேர்வு பெறச் செய்ய விரும்பினர். மூன்று கேள்விகளில் ஏதாவது ஒன்றுக்குச் சரியான பதில் கூறிவிட்டாலும் மேஜர் தேர்வு பெற்றதாகக் கருதப்படுவார்.

இளைஞர் முதலாவதாக அவரிடம் 'கம் ஹியர்' என்பதை ஹிந்தியில் மொழிபெயர்க்குமாறு கூறினார். மேஜருக்கு விடை தெரியவில்லை. உடனே அந்த இளைஞர் '''கம் ஹியர்' என்பதை ஹிந்தியில் 'இதர் ஆவ்' என்றல்லவோ கூற வேண்டும்?'' என்றார். பிறகு அடுத்த கேள்வியைப் போட்டார்.

'' 'இதர் ஆவ்' என்பதை ஆங்கிலத்தில் மொழிபெயருங்கள்'' என்றார் இளைஞர். ஆனால் அந்தோ




பாவம்! இதர் ஆவ் என்பதன் அர்த்தத்தை அதற்குள் மறந்து விட்டார் மேஜர். விடை கூற முடியவில்லை.

இளைஞர் சொன்னார் : ''சார், சற்று முன்பு தானே இதர் ஆவ் என்றால் கம் ஹியர் எனக் கூறினேன். அதற்குள் மறந்து விட்டீர்களே ? சரி, மூன்றாவது கேள்விக்காவது சரியான பதிலைக் கூறுங்கள். நீங்கள் உங்கள் ஆபீஸ் அறையில் ஏதோ முக்கியமான விஷயத்தை எழுதிக் கொண்டிருக்கிறீர்கள். ஆங்கிலம் அறியாத பியூன் உள்ளே வருகிறான். அவனை ஹிந்தியில் பேசி எப்படி வெளியே போக வைப்பீர்கள்?''

மேஜர் நீண்ட நேரம் யோசித்துப் பார்த்தார். திடீரென்று, ''ஆஹா! தெரிந்து விட்டது. நான் என் ஆபீஸ் அறையை விட்டு வெளியே சென்று சற்றுத் தள்ளி நின்று கொண்டு அந்தப் பியூனை 'இதர் ஆவ்' என்று கூப்பிடுவேன். அவன் வெளியே வந்தவுடன் நான் உள்ளே சென்று அறைக் கதவை மூடி விடுவேன்'' என்றார்.

இளைஞரும் மனத் திருப்தியுடன் மேஜர் தேர்வில் வெற்றி பெற்றதாக எழுதினார். -- ராஜா

* * *

சிறிது நேரத்தில் மன்னியின் குரல் பல் விளக்கிக் கொண்டிருந்த என்னை உசுப்பியது. ''எங்கே, கைக் குழந்தைகிட்டே இருந்த பால் புட்டியைக் காணோம் ?''

''எங்கே போயிடும்?'' என்ற அண்ணா தினசரியை விரித்தார்.

''எங்கேதான் போயிடும் பின்னே ? பால் வாங்கணும்னு போனேன். இரண்டு வாய்ப்

பால்தான் குழந்தை குடிச்சிருப்பான். புட்டியைக் கிழே வச்சிட்டுப் போயிருந்தேன். இங்கே காணோமே ?''

எனக்கு ஒரு சந்தேகம் ஏற்பட்டது. வாய் கொப்புளித்துவிட்டு, தெருக் கதவருகே ஓசையிடாது எட்டிப் பார்த்தேன். என் ஊகம் பொய்யாகவில்லை. என் வித்தை உணர்ச்சியைக் கூறு போட்டுக் கொள்ள அண்ணாவையும், மன்னியையும் ஓசையிடாது வரவழைத்து விட்டுக் காமிராவையும் எடுத்து வந்தேன்.

மழைச் சாரலில் ஒன்றி நின்றதால் உரோமங்கள் நனைந்து கரும் பட்டாகப் படிந்திருக்க, இளம் குழவிகளாக நின்ற அந்த இரு ஆட்டுக் குட்டிகளில் ஒன்றின் வாயில் பால் புட்டியின் குமிழை வைத்துக் குழந்தை கிருஷ்ணா அதற்குப் பாலை ஊட்டிக் கொண்டிருந்தாள். அதன் ஈனக் கூச்சல் அடங்கி சந்தோஷ முனகல்கள், ஆனந்த உறுமல்கள் சூழ்ந்திருக்கின்றன. முன்னங் கால்களை ஊன்றி ஆட்டுக்குட்டி பாலைப் பருகும் விதம் கண்ணைக் கவர்கிறது. மற்றொரு ஆட்டுக் குட்டி நேசபாவத்துடன் கிருஷ்ணாவின் காதை நக்குகிறது. கூச்சத்தோடும், ஆமோதிப்போடும் முகம் களித்துக் கொண்டு சிரிக்கிறாள் குழந்தை. அவள் கண்களில் அருள் வெள்ளம். முகத்தில் அன்பு நிழல். மனத்திலோ பொங்கிப் பெருகும் கருணைப் பரிவு. அந்த இரு சின்ன உயிர்களுக்கும் அவள் ஒரு தாயாகி விட்டாளா? அந்த உணர்ச்சிக்கு வேறு என்ன பெயர் சூட்டலாம்? வியப்புடன் நிற்கிறோம் நாங்கள். தெய்வ சந்நிதானத்தில் அருள்சுடர் தெறிப்பில் கட்டுண்டாற் போல்!

என் 'ஃப்ளாஷ்' அந்தக் காட்சிக்கு நிரந்தர உருவம் தருகிறது. அப்போதும் குழந்தையின் ஈடுபாடு சிதறவில்லை.

''பார்த்தியா, சாவித்திரி ? திருமுலைப் பால் உத்ஸவம் இன்னிக்குத்தானே ? உனக்குக் குறையாகாம வைக்கத்தான் அதே உத்ஸவம் இங்கே நடக்கிறது ! இது தெய்வ சந்நிதிடி ! அம்பிகை அருள் கரந்து ஞான சம்பந்தருக்குப் பாலூட்டியது போலத்தான் இங்கேயும் ஞானப் பால் ஊட்டறாள் நம்ப பெண் ! நீ கும்பிடற தெய்வம்தான் உன் எதிர்த்தாப்பலேயே உனக்கு இதை நடத்திக் காட்டறது !''

அண்ணாவின் குரலில் கூடியிருந்த பெருமையும் பாசமும் மன்னியையும் பற்றிக் கொண்டன.

''பாவம்மா, ஆட்டுக்குட்டி ! அதுக்கு யாரம்மா பால் தருவா ? ராத்திரி பூரா சாப்பிடாமே இந்த ஆட்டுக் குட்டிக்கு ரொம்பப் பசிம்மா !''

''நீதான் இருக்கியேடி !'' என்று கிருஷ்ணாவை ஆரத் தழுவிக் கொண்ட மன்னி அவள் கன்னங்களில் மாறி மாறி முத்த மழை பொழிந்தாள்.

குழந்தை கிருஷ்ணா தனக்கென்று பெற்றிருந்த இரக்க சுபாவம், கருணை மனம் இவற்றைக் கண்டு மன்னி ரொம்பவும் வருத்தப்பட ஆரம்பித்தாள். ''ஒரு நிமிடநேர நெகிழ்ச்சியில் ஆட்டுக் குட்டிக்குப் பால் தந்ததைக் கண்டு மகிழ்ந்தாலும் இப்படியிருக்கிறாளே, தம்பிக்கு வைத்திருந்த பாலை விணாக்குகிறாளே என்று தெரியவில்லையே, பாச உணர்வு வரவில்லையே.... பிறத்தியாரிட்டே மட்டும் கனிவா இருந்தால் போதுமா ? எப்படி இந்த உலகத்திலே பேர் சொல்லப் போகிறாள் ? ஒவ்வொரு குழந்தை எத்தனை சமர்த்தாக இருக்கிறதுகள் !'' என்று பேச ஆரம்பித்து விட்டாள்.

''ராமு ! நீ ரொம்பச் செல்லம் தரே ! தப்புன்னு படறதைக் கண்டிக்கணும். 'பட்'னு ஒண்ணு குடுத்துடணும். போற போக்குக்கே விட்டு, அடிச்சு வளர்க்காத பிள்ளை உருப்படாது. அவளைப் புகழ்ந்து பேசிப் பேசி ரொம்பவும் ஏறி விட்டது. இனிமேல் அவளை மட்டம் தட்ட வேண்டியது தான். 'ஜீனியஸ்'ஸா வருவான்னு கணக்கு வழக்கில்லாத புஸ்தகங்களையும், பொம்மைகளையும் வாங்கிப் போடறேள் உன் அண்ணா. அவளும் அதைக் கொண்டா, இதைக் கொண்டா, அவனுக்குக் குடு, இவனுக்குக் குடுங்கிறாள். கொஞ்சம் கொஞ்சமா குழந்தை மனசைப் பெரியவங்க கஷ்டத்தை உணரும்படி மாத்தணும். இல்லேன்னா பின்னாலே கஷ்டம். ரொம்ப வெகுளித்தனமா இல்லாமே, நம்ம வீடு, நம்ம அப்பா அம்மான்னு உணர வைக்கணும்.... தன்னுடையது, தனக்கு வேணும்னு புரிய வைக்கணும்....''

''குழந்தைதானே அவள்! வளர்ந்தால் சரியாகிவிடும்'' என்றேன் நான். மனத்துக்குள் மட்டும் அவளைப் பற்றிய பெருமிதம் ஓங்கியிருந்தது.

மனிதனின் ஆரம்பப் படைப்புருவம்தான் எத்தனை விநோதமானது ! உள்ளதை உள்ளபடி உணர்வதுதானே குழந்தை மனம் ! தன்னைப் போன்றே பிறரையும் எண்ணும் குழந்தை தனக்குத் தோன்றுவதை யெல்லாம் செய்யும்படி கேட்கிறாள். என்னுடையது, என்னுடையதல்ல என்ற தனி மனிதப் பிரச்னையை அது உணர்வதில்லை. அந்தக் கல்மஷத்தை நாம்தான் கொஞ்சம் கொஞ்சமாய் விஷம் ஏற்றுவதைப் போல் அந்த மனத்தில் நாளாவட்டத்தில் கலந்து விடுகிறோம்.

அண்ணாவும் சிறிது சிறிதாய் மன்னிக்குத் தலை அசைக்க ஆரம்பித்தார். ''நீ சொல்றதும் சரிதான் சாவித்திரி ! குழந்தையை இப்படியே விடப்படாது. சாமர்த்தியக்காரர்கள் நிறைந்த சந்தை மாதிரி இந்த உலகம் ரொம்பப் பொல்லாதது. அதிலே ஏமாளியா இருக்கிறவனை, இரக்க மனம் படைச்சவனை, அயோக்கியன் ஜெயிச்சுடறான். இப்போதைய வாழ்க்கை முறையிலே கிருஷ்ணாவைப் போன்ற வெள்ளை மனம் படைச்சிருந்தால் வாழறது ரொம்ப சிரமம். அவளை மெள்ள மெள்ள மாற்ற வேண்டியதுதான் !''

நான் எனக்குள் சிரித்துக் கொண்டேன். எந்தப் பெற்றோரும் தன் பிள்ளை நல்லவனாக இருப்பதால் ஏமாந்து விடுமோ என்று கவலைப்பட்டு, சாமர்த்தியசாலியாக வாழ்வதையே பெரிதும் விரும்புகின்றனர். அதற்கு என் அண்ணாவும், மன்னியும் மட்டும் விதிவிலக்கா என்ன?

**VOLTAS**

# வருடத்திற்கு ஒரு தடவை இந்த காண்ட்ராக்டுக்குப் பணம் செலுத்தினால் போதும்



# பிறகு, உங்கள் வோல்டாஸ் ஏர்-கண்டிஷனரின் சர்வீஸ், ரிப்பேர், உறுப்பு மாற்றம் யாவுமே இலவசம்.

நீங்கள் வோல்டாஸ் தயாரிப்பான கிரிஸ்டல் ஏர்-கண்டிஷனர் வாங்கும் போது, கூடவே ஒரு வருட உத்தரவாதமும் கிடைக்கிறது. பிறகு வருடாந்தர "ஆல்-இன் சர்வீஸ்" திட்டத்தின் கீழ், ஆண்டுக்கு ரூ. 250 மட்டுமே செலுத்தி 100% முழு உத்தரவாதம் பெறலாம்.

அதாவது, நாங்கள் உங்களுடைய கிரிஸ்டலைத் தவறாது சோதித்து, சர்வீஸ் செய்வோம். அதை ரிப்பேரும் செய்து, சாதாரணமாகத் தேய்ந்து கெட்டுப் போன பாகங்களை மாற்றுவோம். இவை யாவுமே இலவசமாக!

உங்கள் மெஷினை ஓவர்ஹால் செய்ய சர்வீஸ் ஸ்டேஷனுக்கு எடுத்துச் சென்றால், உங்களின் இடை-உபயோகத்துக்காக ஒரு சர்வீஸ் யூனிட்டை அளிப்போம். அதற்கும் சார்ஜ் இல்லை.

ஏர்-கண்டிஷனர் எதுவும் வாங்குமுன் இந்த ஆதாயங்களை ஒப்பிட்டுப் பாருங்கள்.

இறுதியில் நீங்கள் கிரிஸ்டல் தான் வாங்குவீர்கள். அநேகமாக எல்லோருமே அப்படித்தான். ஏனெனில், அது உழைப்பிலே நம்பர் 1 சேவையில் நெ. 1. அதனால் தான் அது விற்பனையிலும் நெ. 1.



**கிரிஸ்டல் பாரதத்தின் நம். 1 ஏர்-கண்டிஷனர், விற்பனையில் நெ. 1, உழைப்பில் நெ. 1, சேவையில் நெ. 1.**

**வோல்டாஸ்** அளிக்கும் **கிரிஸ்டல்** ஏர்-கண்டிஷனர்.

**வோல்டாஸ் லிமிடெட்**

பம்பாய் . கல்கத்தா . சென்னை . புதுடெல்லி . பெங்களூர் . லக்னௌ
கொச்சி . அகமதாபாத் . செகந்தராபாத் . கான்பூர் . ஜம்ஷெட்பூர்.

Bensons-1527 Tam

விற்பனையும் சர்விஸும் செய்யும் இதர நிறுவனங்கள்:
ராஜாராம் டிரேடர்ஸ், 38 ப்ரோமனேட் ரோடு, கன்டோன்மென்ட், திருச்சிராப்பள்ளி-1. எக்செல்-ரேடியோ சர்வீஸ், எஸ்.எம். ஸ்ட்ரீட், கோழிக் கோடு. கோனா ரெப்ரிஜரேஷன் & என்ஜினியரிங் கோ., பிரை. லிட்., குருப்பம் ரோடு, திருச்சூர்-1 ஸ்ரீ ராமா கார்பொரேஷன், எல்லூர் ரோடு, தபால் பெட்டி எண் 303, விஜயவாடா-2. ரேடியோ & எலெக்ட்ரிகல்ஸ், மெட்ரோ ஹவுஸ், விசாகப்பட்டினம். ஏ.ஆர்.ஏ. செண்பக நாடார் & பி.வி.பி. பாலசுப்ரமணிய நாடார் & கோ., மதுரை. ஏ.ஆர்.ஏ. செண்பக நாடார் & பி.வி.பி. பாலசுப்ரமணிய நாடார் & கோ. திருநெல்வேலி.

காலப் பூங்காவில் ஐந்து 'வசந்தங்கள் வண்ண ஜாலம் செய்து மறைந்தன. அண்ணா ஊரூராக மாறிக் கொண்டிருந்தார், நான் சென்னையிலேயே தங்கி என் படிப்பை முடித்தேன். அதன்பின் வாழ்க்கைக்கு நிலைத்த ஒரு வருமானம் தரும் உத்தியோகத்தையும் ஏற்றேன். என் முதல் சம்பளத்தைப் பெற்றுக் கொண்ட நான், அதை என் அண்ணாவின் கையில் தந்து ஆசீர்வாதம் பெறத் திருச்சிக்குப் புறப்பட்டேன்.

முதலில் என் நினைவுக்கு வந்தவள் குழந்தை கிருஷ்ணா. கல்லூரி விடுமுறையில் கூடத் தட்டெழுத்தும், சுருக்கெழுத்தும் கற்றுக் கொள்ளும் முயற்சியில் ஈடுபட்டதால் இடையிடையே எப்போதோ வெளியூரில் தங்கியிருக்கும் அண்ணாவைப் பார்க்கப் போனேன். கிருஷ்ணாவோடு பழகும் நேரமும் மிகக் குறைச்சலாக இருக்கும். இப்போது எட்டு வயதிருக்குமே.... பள்ளியில் படிப்பாள், எப்படிப் பேசுவாள்! எப்படி நடப்பாள்? என்னுள் இனிய கற்பனையாக அவள் நடையுடை பாவனைகள் பொங்கிப் பிரவகித்தன. என் டயரியில் பத்திரப்படுத்தியிருந்த அவள் புகைப்படத்தை எடுத்துப் பார்த்தேன். என்ன அழகான காட்சி! குழந்தை கிருஷ்ணா ஆட்டுக் குட்டிக்குப் பாலூட்டும் காட்சி நேற்றே நடந்தாற்போல் தோன்றுகிறது.



''நம்ம பங்களா வாசலில் புது கார் நிற்கிறதே! நீ வேலை செய்கிற எல்லா வீட்டிலேயும் இந்தச் சங்கதியைச் சொன்னாயோ?''
''ஓ! அதையும் சொன்னேன். ஈட்டிக்காரன் அடிக்கடி வந்து போகிறதையும் எல்லாரிடமும் சொல்லிட்டேன்!''

கிருஷ்ணா என்னிடம் உடனே 'ஓடி வராமல் வெட்கத்துடன் நின்றிருந்தாள். என்னுடைய அழைப்பின் தூண்டுதலும், நான் வாங்கிப் போயிருந்த தின்பண்டங்களும் அவளை மெல்ல மெல்ல என் அருகே இழுத்து வந்தன. அவளுக்குச் சிறியவன் ரவியும் என்னருகே வந்தான். சிறிது நேரத்திலேயே பிரிந்திருந்ததால் ஏற்பட்ட வெட்கம் நீங்கப் பெற்றவளாய் சகஜ பாவத்துடன் என்னுடன் பழகினாள் கிருஷ்ணா.

அன்று மாலை கிருஷ்ணாவை அழைத்துக் கொண்டு கடைத் தெருப் பக்கம் போனேன். தன் பள்ளியைப் பற்றி, கூடப் படிக்கும் மாணவிகளைப் பற்றி, அப்பாவும், அம்மாவும் வாங்கித் தந்த உடைகளைப் பற்றி என்று அவள் கலகலப்பாகப் பேசிக் கொண்டே வந்தாள். அப்போது ஒரு கிழப் பிச்சைக்காரியை, ஒரு சிறுமி பற்றியவாறே என்னருகே வந்து, ''சாமி! இந்தக் கிழவி வயசானவ சாமி! ரெண்டு நாளாப் பட்டினி! ஏதாவது தர்மம் குடு சாமி!'' என்று நலிந்த குரலில் கேட்டாள். பிறகு கிருஷ்ணாவைப் பார்த்து அவள் கையிலிருந்த பிஸ்கட்டைக் கேட்டாள். கிருஷ்ணா பிஸ்கட்டை மறைத்துக் கொண்டாள். நான் நடந்தவாறே சில்லறை இருக்கிறதா என்று துழாவினேன். இதற்குள் பிச்சைக்காரச் சிறுமி என்னைத் தொட்டு மறுபடியும் பிச்சை கேட்டாள்.

நான் சற்றும் எதிர்பாராத வகையில் கிருஷ்ணாவிடமிருந்து ஒரு சீறல் கிளம்பியது. ''சீ! எங்க சித்தப்பாவைத் தொடாதே. போ. உனக்குக் காசு தரமாட்டோம்! பிஸ்கட்டும் தரமாட்டோம்!''

''கிருஷ்ணா! அவள் பாவம்! போனால் போகட்டும். பசிக்குமில்லையா? இந்த அஞ்சு பைசாவை நீயே அவள்கிட்டே போடு, பார்க்கலாம்!''

கிருஷ்ணா நாணயத்தை வாங்கி வெறுப்போடு முகம் சுளித்தவாறே சிறுமியின் மேல் தன் கை பட்டுவிடாமல் தூக்கிப் போட்டாள். பிறகு இதுவரையில் பேசி வந்த குரலிலேயே இப்போதும் பேசினாள். ''நிறையப் பிச்சைக்காரங்க இருக்காங்க சித்தப்பா! எல்லாருக்கும் போட்டா நம்ப காசெல்லாம் ஆயிடும்! அவங்க அப்படித்தான் இருக்கணும்! பிஸ்கட் வேணுமாம் அவளுக்கு! இது என்னோட பிஸ்கட். என்னோடது எனக்குத் தான்! இதை யாருக்கும் தரமாட்டேன்!'' என்ன அழுத்தம்! அவள் குரலில் இயற்கையான கனிவில்லை. என்னுடையது, என்னுடையதல்ல என்ற தனி மனிதப் பிரச்னை எப்படி இந்தக் குழந்தை மனத்தில் புகுந்தது?

கிருஷ்ணா தொடர்ந்தாள். ''ரவியைப் பாரு, சித்தப்பா! பால் சாதத்தைத் தெரு நாய்க்குப் போடறான். நம்ப 'டாமி'க்குத்தானே போடணும்?''

நான் குழந்தையைப் பார்த்தேன். அவள் வளர்ந்து விட்டாள். உலகைப்போலவே மற்றவர்களைப் பற்றி நினைக்கக் கற்றுக் கொண்டாள். ஆனால் என்னுள் மகிழ்ச்சி எழவில்லையே, ஏன்? நான் பெருமூச்செறிகிறேன். சிரிப்பதை விடச் சிந்திப்பதில் அதிகம் ஈடுபட்டிருந்த குழந்தை எப்படித்தான் மாறி விட்டாள்? புதிய கருத்துக்கள் பழைய கனிவை வெள்ளமாக அழித்து விட்டனவா? மனத்தைச் சுயநல எண்ணத்தோடு இயக்கக் கற்றுத் தந்தாகி விட்டதே. இனி அந்தக் குழந்தை தெய்வமா என்ன? ஒரு குழந்தை சுயநலத்தை உணரும் சக்தி படைத்தபின்தான் அது மானிட ஜாதியைச் சேர்ந்ததாகி விடுகிறதே!

தெருவில் கிருஷ்ணாவின் அட்டகாசச் சிரிப்பொலி கேட்கிறது. என்னவென்று எட்டிப் பார்த்தேன். எனக்கு ஏற்பட்ட அதிர்ச்சி! கல்லடிபட்ட ஆட்டுக்குட்டி, ''ம்மே, ம்மே!'' என்ற வேதனை முனகலோடு நொண்டியவாறே தத்தித் தத்தி ஓடிக் கொண்டிருந்தது. அதைப் பார்த்துக் கைக் கொட்டி நகைக்கிறாள் கிருஷ்ணா.

''கிருஷ்ணா! இப்படித்தான் ஆட்டுக்குட்டியைக் கல்லால் அடிக்கிறதா? நொண்டுறது பார்! முட்டாள்! இங்கே வா, சொல்லிறேன். சின்னக் குழந்தையில் இரக்கத்

தூடன் நடப்பாய். வரை வரை எல்லாம் போய் விட்டதா ? உள்ளே போ !''

இயல்புக்கு மாறான சூழ் நிலையில் அகப்பட்டுக் கொண்டாற்போல் அவள் முகம் வாடியது. என்னுடன் கொண்ட சகஜ பாவத்தை முறித்துக் கொண்டு, அழுத்தமான விறைப்போடு உள்ளே போனாள். முன்பெல்லாம் அவள் ரசனையில் தெரிந்த இரக்கப் பண்பு எங்கே போயிற்று ?

வாசலில் சாலை வேலை செய்யும் கூலியாள் குடிக்கத் தண்ணீர் கேட்கிறான். அவனைப் 'போ போ'வென்று விரட்டுகிறாள் கிருஷ்ணா. ''எப்பவும் இங்கேதான் கேட்பே, போ, நான் தரமாட்டேன்.''

நான் கண்டிக்கக் குரலெடுக்குமுன் மன்னியின் குரல் கேட்கிறது. ''நேத்திக்கு வந்தவன்தானே? தினமும் ஒரு ஆள் தண்ணீர் கொடுக்க நிற்க வேண்டியதுதான். வேறே வேலை இல்லே.''

''நான் விரட்டிட்டேன்மா !''

''அதுதான் சரி. சமர்த்து! உள்ளே வா!''

குழந்தை தெய்விக மனம் படைத்திருந்த போது சலித்த தாயார், சாதாரண உணர்வை ஏந்தியதும் புகழ்கிறாள். மலையருவி இமயப் போர்வையிலிருந்து விடுபட்டு, பூமித் தூசியில் கலந்து விட்டதற்கு இத்தனை மகிழ்வா?

இப்பத்தான் சமர்த்தாமே ! எம்மாதிரி பழக்குகிறோமோ அம்மாதிரிதான் பண்பு வளர்கிறது. இயற்கை உணர்வையே செயற்கை உணர்வாகத் திசை திருப்பிவிடும் நம் பழக்க வழக்கங்களுக்கு நாம்தான் பொறுப்பென்றால், நம்மை திசை மாற்றி அமைத்த நம் பெற்றோர், நம் மூதாதையர், நம் சமூகம் எல்லாம் பொறுப்பேற்க வேண்டியதுதான். குழந்தைகள் குப்பைகள் கலவாத மாணிக்கங்கள்! அவற்றின் மன மொழி மெய்யைச் சூழலுக்கு ஏற்ப நாம்தான் திருத்தியமைக்கிறோம். பச்சை மெழுகாகக் கடவுள் தரும் குழந்தையை நமக்கேற்ப மாற்றியமைத்துக் கொள்கிறோம். அதன் இயற்கை உணர்வுகளைக் கொன்று புதிய உள்ளத்தை பிரதிஷ்டை செய்கிறோம். அப்படி மாறாதவர்களை வெகுளி, அசடு என்கிறோம். மாறியவர்களைச் சமர்த்து என்கிறோம். இறைவன் சிருஷ்டியை நம் இஷ்டப்படி மாற்றிவிட்டு, சமர்த்து என்று சொல்லிக் கொள்வதில்தான் எத்தனை பெருமைப்படுகிறோம் ?

அன்று கிளைக் கிழவிக்குத் தன் பிறந்த நாள் உணவைப் படைக்கச் சொன்ன குழந்தை இன்று ஒரு பிச்சைக்காரச் சிறுமிக்கு ஐந்து பைசா போட வெறுக்கிறாள். ஆட்டுக் **குட்டிக்குப் பசிக்குமே என்று பரிதாபப்**



''படுமோசமான இந்தப் படத்துக்குக் கொடுக்கிற காசை இந்த ஏழைக்காவது தர்மம் பண்ணுங்க சார் !''

''நீ என்னமோ இந்தப் படத்தைப் பார்த்தவன் மாதிரி பேசறியே ?''

''இந்தப் படத்தைத் தயாரிச்சவனே நான்தாங்க!''

பட்டு, தம்பிக்கு வைத்திருந்த பீடிங் பாட்டிலை எடுத்து ஊட்டிய குழந்தை இன்று அதைக் கல்லால் அடித்து, அது நொண்டுவதைக் கண்டு கை கொட்டிச் சிரிக்கிறாள். தெரு நாயையும் குளிப்பாட்டலாம் என்றவள், அதுக்கு என் பால் சோறு, நம் நாய்க்கே போடலாம் என்கிறாள். செருப்பில்லாமல் வண்டி இழுக்கும் கூலியாளைக் கண்டு மனம் வெதும்பி என் செருப்பைத் தரும்படி தூண்டியவள், சாலையில் வேலை செய்யும் தொழிலாளியின் தாகத்துக்குத் தண்ணீர் தராமல் விரட்டுகிறாள்.

அன்பில் விஷமத்தை, அறிவில் ஆத்திரத்தை, பாசத்தில் பணத்தை, பண்பில் சுயநலத்தைக் கலந்து வைத்த உலக உணர்வுகள், ஒரு தெய்விகமான குழந்தை உணர்வில் மனித உணர்வைக் கலந்து விட்டதை உணர்ந்து கொண்டேன். என்ன செய்வது? அது ஒரு தவிர்க்க முடியாத நிகழ்ச்சிதான், காற்றில் தூசுகள் பறப்பதைப் போல்! எனக்கு அது ஒரு பெரிய குறை. வறுமை, நோய், முதுமை ஆகியவற்றைக் கண்டு கலங்கிய குழந்தையா இன்று எல்லா உணர்வுகளையும் ஜீரணித்துக் கொண்டு உலக உணர்வுகளோடு ஒன்றி விட்டாள் ?

இனி, மன்னி பயப்பட வேண்டாம் ! கிருஷ்ணா தனியே பஸ்ஸில் பள்ளிக்கூடம் சென்று படித்து வருகிறாள். சின்ன டிபன் பாத்திரத்தில் ஓர் உருண்டை தயிர் சாதம் மட்டும் எடுத்துப் போய்ச் சாப்பிட்டுப் பசியை அடக்கக் கற்றுக் கொண்டு விட்டாள். இயந்திர மயமாக நாம் நிர்ணயித்த சட்ட திட்டங்களுக்குள் எவ்வித எதிர்ப்பும் இன்றி லயித்துக் கலந்து பழகிய பசுவாகி விட்டாள் !

''நீ பார்த்ததுக்குக் கிருஷ்ணா ரொம்ப வளர்ந்துடலே ? கெட்டிக்காரியாகி விட்டாள் !'' அண்ணா பெருமைப்படுகிறார்.

அவளுடைய வளர்ச்சி எந்த ரூபத்தில் ஏற்பட்டுள்ளது? அருள் வடிவானவள் வெறும் லோகாயத சேற்றில் முளைத்த பூண்டாகி விட்டாளே.... அதை வளர்ச்சி என்று எப்படி ஏற்பது ?

நான் என் கிருஷ்ணாவை, எனக்குப் பிடித்த உணர்வுகளை ஏந்தி நின்ற குழந்தையை, காண வந்தேன். அவளைக் காண முடியாத ஏமாற்றத்தோடு திரும்பிப் போகிறேன். அப்படிப்பட்டவளை இனி காண முடியாது என்ற உண்மை, என் கண்டத்துள் ஒரு ரகசிய வேதனையாக முட்டுகிறது.

கடவுளின் பிரதிநிதியாகக் குழந்தை பூமியில் ஜனிக்கிறது! ஆனால் மனிதனின் **பிரதிநிதியாக உலகை விட்டு நீங்குகிறது!**

## மீன் இசை!

உலகிலேயே முதன் முறையாக ரஷிய விஞ்ஞானிகள், மீன், நண்டு இவைகள் போடும் சத்தங்களை ஒலிப்பதிவு செய்துள்ளனர்! மீன்கள் முட்டை இடும்போதும் சண்டையிடும் போதும் குளிர்காலத்தில் இடம் மாறும்போதும் போடும் சத்தங்களையும் பதிவு செய்துள்ளனர்! இதன் மூலம் மீன் எங்கு உள்ளது என அறிந்து மீனவர்கள் வலை வீச முடிகிறது.



ஆதாரம்: "சோவியத் யூனியன்" தகவல்: ச. ஸ்ரீதரன்

தன் நண்பனின் திருமணத்தின்போது ஒருவன் ஒரு மணி பர்ஸில் கொஞ்சம் பணமும் ஒரு கடிகாரமும் பரிசளித்தான். அப்போது அவன், "இந்த பர்ஸில் உள்ள பணம் ஓடிவிடும்" என்று சொல்லி, கடிகாரத்தின்மீது கை வைத்து, "ஆனால் இது ஓடவே ஓடாது" என்றான்.

ஆதாரம்: பேஜண்ட் தகவல்: சன்

## அதிசயக் கல்யாணம்!

பிஜப்பூர் ஜில்லாவிலுள்ள தங்கக் கோட்டை என்ற ஊரில் சமீபத்தில் ஓர் அதிசயக் கல்யாணம் நடந்தது. அந்தக் கல்யாணத்துக்காக 15000 ரூபாய் செலவழிந்தது. அன்று ஏராளமான ஏழைகளுக்குச் சாப்பாடு போடப் பட்டது; துணிமணிகள் வழங்கப் பட்டன. மணமக்கள் யார் தெரியுமா? ஒரு பப்பாளிமரமும் ஒரு வேப்ப மரமும்தான்! ஆம். அந்த ஊரில் அப்படி ஒரு வழக்கம் இருக்கிறது! கல்யாணத்துக்குச் செலவழிக்கப்பட்ட 15000 ரூபாயும் பொதுமக்களிடமிருந்து வசூல் செய்யப்பட்டதுதான்! இப்படி மரங்களுக்குத் திருமணம் செய்து வைக்கும் வழக்கம் அந்த ஊரில் பல வருஷங்களாக இருக்கிறது!



தகவல்: சரோஜா ராமச்சந்திரன்

## விளக்கேற்றும் பறவை!

பிலிப்பைன்ஸ் நாட்டுப் பறவையான 'பாயா' என்ற பறவை, தன் கூட்டில் விளக்கு வைக்கிறது. எப்படித் தெரியுமா? மின்மினிப் பூச்சிகளைக் கொல்லாமல் தன் அலகால் எடுத்து வந்து தனது கூட்டில் வைத்து விடுகிறது. இருட்டானதும் அந்த மின்மினிப் பூச்சிகள் மின்னுகின்றன. அந்த ஒளியில் 'பயா' எனும் பறவை இரவைக் கழிக்கிறது.

அது போலவேதான் இந்தியாவிலும் தூக்கணாங்குருவி மின்மினிப் பூச்சிகளைக் கொண்டுவந்து தனது கூட்டிற்கு விளக்கு வைக்கிறது.



தகவல்: [illegible]

## கண்ணீர் கூறிய பதில்!

ஒரு நாள் நான் ஓர் ஆங்கிலப் பத்திரிகையைப் புரட்டிக் கொண்டிருந்தேன். அப்போது கான்வென்ட் பள்ளியில் படிக்கும் என் ஏழு வயதுப் பெண் என்னிடம் வந்தாள். அவள் என் கையிலிருந்த பத்திரிகையை வாங்கிப் புரட்டிப் பார்த்தாள். அதில் கருத்தடை மாத்திரைகள் பற்றி ஒரு விளம்பரம் வந்திருந்தது. ஏனோ என் மகள் அந்த விளம்பரத்தைப் பார்த்து விட்டு அதை உரக்கப் படித்தாள். பிறகு அது பற்றி என்னிடம் ஏதேதோ கேள்விகள் கேட்டாள். நான் நம் நாட்டிலுள்ள ஜனத் தொகைப் பெருக்கத்தைப் பற்றியும் அதைக் குறைப்பதற்கு அந்த மாத்திரை பயன்படும் என்றும் அவளுக்குச் சுருக்க



மாகக் கூறினேன். கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்த என் மகள் என்னிடம் கேட்டாள்: "அப்பா! ஏற்கனவே பிறந்திருக்கும் குழந்தைகளை அழிப்பதற்கு ஏதாவது மாத்திரை இருக்கிறதா?"

இதைக் கேட்டதும் என் கண்கள் அருவியாய் நீரைப் பொழிந்தன. என் பெண் எவ்வளவு பயந்து விட்டாள் என்பதை அவள் கண்களில் தெரிந்த அச்சம் எனக்குக் கூறியது. என்னுடைய ஏழு பெண்களில் அவள்தான் கடைசி.

ஆதாரம்:
பெமினா பத்திரிகைக் கடிதம்

தகவல்:
சரோஜா ராமச்சந்திரன்

அட்டைப் படக் கதை

# இணைகோடுகள்

அதிகாரியின் அறையிலிருந்து திரும்பும் போது எல்லோர் கண்களும் என்னையே மொய்க்கின்றன. ஆனால் என்னிடமிருந்து விஷயத்தைக் கிரகிப்பது கல்லிலிருந்து நார் உரிப்பது போல என்று மற்ற செக்ஷன் சூபரின்டெண்டுகள் ஜாடையாகப் பேசிக் கொண்டதை நான் கேட்டிருக்கிறேன். இருந்த இரண்டு மூன்று ஆண்டுகளில் வேலை மாற்ற உத்தரவுகளோ, பதவி உயர்வுகளோ, கைக்கு வந்தபின் நான் தெரிந்து கொள்ள முடியும் என்ற நிலையில் இருந்ததால், அதிகாரிக்குக்கூட என்னிடம் தனி நம்பிக்கை.

நாற்காலியில் அமர்ந்தபோது கடிதம் ஒன்று கிடந்தது. கையெழுத்திலிருந்தே அது கல்யாணியின் கடிதம் என்று தெரிந்து கொண்டேன். அவள் எழுதும் 'தொடர் கதையை' நான் டிபன் வேளையில்தான் படிக்க முடியும். என் முக பாவத்திலிருந்து எதையும் புரிந்து கொள்ள முடியாது என்ற நிலையில் மற்றவர்கள் அவரவர் வேலையைக் கவனிக்கத் தொடங்கி விட்டார்கள். பாவம், அவர்கள் என்னை மனத்துக்குள் சபித்துக் கொண்டிருப்பார்கள். அடுத்தவரின் பலவீனத்தை ரசிக்கும் அவர்கள், அவர்களுடைய உறுதியை மட்டும் வரவேற்று விடுவார்களா, என்ன ?

சட்டென்று ஏதோ நினைவில் நிமிர்கிறேன். சடகோபன் கட்டுக்குள் முகத்தைப் புதைத்துக் கொண்டு தீவிரமாக எழுதிக் கொண்டிருக்கிறார். அலுவலகம் என்ற உலகத்தை விட்டு, வெளியே பிரிந்து இயங்குவது போன்ற அந்த பாவம் அவருக்கே உரியது. அந்த பாவம்தான் அவரை ரயில்வே ஆடிட்டில் கெட்டிக்காரர் என்று மேலதிகாரி வரை அறிமுகப்படுத்தி இன்று....

டிபன் பாக்ஸைத் திறந்தபடியே கல்யாணியின் கடிதத்தில் கவனம் செலுத்துகிறேன். அவளுடைய கணவரைப் பற்றியும், குழந்தைகளின் வளர்ச்சி, நாத்தனாரின் திருமணம், கொழுந்தனின் வைத்தியப் படிப்பு என்று எல்லாவற்றையும் விவரித்து விட்டுக் கடைசியில் வழக்கமாக எழுதும் பல்லவியையும் பாடி விட்டாள் — 'சீதா! நீ எப்போதுதான் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறாய் !'

கடிதத்தை மடிக்கிறேன். என் நினைவுகள் விரிகின்றன.

கல்யாணியும் நானும் ஒரே ஊரில் பிறந்து வளர்ந்து இன்டர் வரை ஒன்றாகப் படித்தவர்கள். அந்த உரிமைப் பிடிப்பு இன்று வரை அவள் எனக்கு எழுதும் கடிதங்களில் தொனிக்கிறது.

இன்டர் படித்து முடித்தபின் அவள் வாழ்க்கைச் சக்கரம் திரும்பி அவளைச் சம்சாரியாக்கி விட்டது. நான்.... படிப்பு படிப்பு என்று ஒரே நோக்கத்தில், ஏன் வெறியில் என்றுகூடச் சொல்லலாம், எம். ஏ. வரை வந்து விட்டேன். பட்டம் வாங்கியபின்தான் என் வளர்ச்சியையே நான் அறிந்து கொள்ள முடிந்தது. வாழ்க்கை என்னும் சாலையில் இருபத்தோரு கற்களை நான் கடந்து விட்டேன்.....!

அது வரையில் சும்மா இருந்த அம்மாவும் அப்பாவும் நச்சரிக்க ஆரம்பித்து விட்டார்கள், கல்யாணத்துக்கு. 'எம்மா, இனி மேல் என்ன செய்வதாக உத்தேசம்?' என்று அப்பா ஒரு நாள் மெதுவாக ஆரம்பித்த போது 'இனி மேல்தான் என் கடமையே ஆரம்பம் ஆகிறதப்பா.... இத்தனை நாட்கள் நீங்கள் எங்களுக்காக உழைத்தது போதும். இனி, நான் உங்களுக்குச் சம்பாதித்துப் போடப் போகிறேனாக்கும்' என்றேன். அப்பாவும் அம்மாவும் பிரமித்துப் போய் நின்றார்கள் ! அந்தப் பிரமிப்பு அடங்கு முன்பையே, நான் ஏஜி ஆபீஸில் அஸிஸ்டெண்டாகச் சேர்ந்து இப்போது சூபரின்டெண்டாகவும் உயர்ந்து விட்டேன். அவர்களும் பார்த்தார்கள் — வயது வந்த பெண். என்னைக்கு அவளாகப் பார்த்துப் பண்ணி வை என்று சொல்கிறாளோ, அன்று செய்து வைக்கலாம் என்று விட்டு விட்டார்கள் ! எனக்குத் தெரியாதா என்ன — பாங்கில் நான் போட்டு வரும் கணிசமான தொகையும், வி. ஐ. டி. நகரில் நான் வாங்கியிருக்கும் இடமும் அவர்களைச் சமாதானப் படுத்தாது என்று ! இருந்தாலும், ஒன்றும் புரிந்து கொள்ளாதது போல் ஒரே வட்டத்துக்குள் சுற்றி வருவதில் என்ன கஷ்டம்?

டிபன் அறையை விட்டு வெளியே வருகிறேன். இன்னமும் குனிந்தபடி எழுதிக் கொண்டிருக்கிறார்..... குனிந்து கொடுத்து முதுகில் பாரத்தைச் சுமந்தது போன்ற அந்த நிலை.... அவர் இன்னமும் சாப்பிடவில்லை. வலைப் பையினுள் டிபன்பாக்ஸ் அப்படியே இருக்கிறது.

''என்ன மிஸ்டர் சடகோபன்? இன்னும் டிபன் ஆகவில்லையோ ?''

அவரது கழுத்து எதிரிலிருந்த பைல் கட்டிலிருந்து இருபத்தைந்து டிகிரிக் கோணத்தில் எழும்புகிறது. லேசாக விளிம்பு வரை என்று சொல்லலாம்.

''லேசா ஜுரம் இருக்கு... சாப்பிட வேண்டுமா என்று பார்க்கிறேன்?''

ஜுரம் சாப்பிடுவதற்குத்தானா. வேலை செய்வதற்கு இல்லையா? — எனக்குள் நானே சிரித்துக் கொண்டேன்.

சடகோபன் அலுவலகத்தில் ஓர் அனாதையான போக்குடையவர். அவருடைய

இத்தனை வருட அனுபவத்தில் அவர் மற்றவ ருடன் பேசிய வார்த்தைகளை விரல் விட்டு எண்ணி விடலாம். தோழமை என்று வேண் டாம், சுபாவமாய்ப் பேசுவது என்பதுகூடக் கிடையாது. ஆண்களிடமே இப்படியானால் பெண்களிடத்தில் ரிஷ்யசிருங்கர்தான் ! தம் செக்ஷனில் இருக்கும் பெண்களை நிமிர்ந்து பார்த்து ஒரு சந்தேகம் கேட்டார் என்று ஒரு நாளாவது உண்டா? மற்ற அலுவலக ஊழியர்களுக்கு அவர் ஒரு சுவையான சர்ச் சைக் கரு.

அம்மாஞ்சிச் சர்ச்சைகளிடையே எப் பொழுதோ காதில் விழுந்த தகவல்கள் : 'இன்னும் கலியாணமாகவில்லை; தாயார் சகோதரிகளுடன் இருக்கிறார்.' இவ்வளவு தான்! அவரோ தம்மைச் சுற்றி, தம்மைப் பற்றி எழும்பும் எந்தப் பிரச்னையையும் காது கொடுத்துக் கேட்பதில்லை. ஒருகால் என்னைப் போல் ஒன்றிரண்டு வார்த்தைகளைக் கேட்டு விட்டுத் தமக்குள் சிந்தித்துக் கொள் வாரோ, என்னவோ....

நாற்காலியில் உட்காருகிறேன். கலாவும் வசந்தியும் அனுமதி கேட்டு எழுதியனுப்பி யிருந்தார்கள். மைத்துனனுக்குப் பெண் பார்க்க..... குழந்தைக்குக் காது குத்த... அப்பப்பா...! இந்தக் கல்யாணமான பெண் களுக்கு வருஷத்துக்குப் பதினைந்து நாட்கள் எப்படிப் பற்றும்! கல்யாணமான பெண்கள் வருமானத்திற்கு வேலை பார்க்கிறார்களே ஒழிய, கடமையின் முழுமையை அவர்கள் அவ்வளவாக மதிப்பதில்லை !

சட்டென்று சடகோபன் நாற்காலியைப் பார்க்கிறேன். அதே குனிந்த நிலை; பரபர வென்று வவுச்சர்களைப் புரட்டும் கரு கருப்பு.... உடலின் அசதி கைகளில் சற்று வது பிரதிபலிக்க வேண்டுமே ?



ஐந்து மணியாகிவிட்டது. கிருகிருவென்று இயங்கிய காரியாலயத்தில் ஒரு வெறிச்சிட்ட தோற்றம். எங்கோ அங்கொருவர் இங்கொருவராக உட்கார்ந்திருந்தாலும், வேலையில் கருத்தைச் செலுத்தாத நிலை.... இப்பொழுது வீட்டுக்குப் போய் என்ன செய்யப் போகிறோம் என்ற விரக்தியோ, என்னவோ....?

நான் நாற்காலியை விட்டு எழுந்திருக்கிறேன். வேலை உயர்வு உத்தரவு, மாற்றல்கள் இவற்றைப் போட்டு விட்டு எழுந்திருக்கும்போது உடலெங்கும் அசதி சூழ்ந்து கொள்கிறது. சாப்பிடாமல் வைத்திருந்த டிபன் பையைக் கையில் எடுத்துக் கொண்டு சடகோபனும் கிளம்புகிறார். முகம் சிவந்து தள்ளாடி அவர் நடந்து செல்கையில் நான் அவரைக் கவனிக்கிறேன்.....

* * *

"சீதா! கோயிலுக்குப் போயிட்டு வரலாமா....?"

அம்மாவை ஏறிட்டு நோக்குகிறேன். கண்களில் துரும்பு விழுந்ததுபோல் கைகள் கண்களை அளைக்கின்றன. துரும்பு கண்களிலா?

"அம்மா.... கல்யாணி கடிதம் போட்டிருக்கிறாளா....?"

"ம்...."

இந்தக் கல்யாணி... இருக்கட்டும், அவளுக்குச் சரியாக [illegible] கொடுக்கிறேன். கல்யாணமென்று ஒன்றை வைக்கும்போது வந்து போகும் அம்மாவுக்கும் எழுதி [illegible] குழப்பத்திலிருக்கும் அவள் மனத்தைச் சகஜமாக்குகிறாளா....?

சந்நிதியில் அம்மா வழக்கத்தைவிடப் பிரார்த்தனைக்கு அதிக நேரம் எடுத்துக் கொள்கிறாள். வெளியே விழ இருந்த கண்ணீரை எப்படித்தான் அவள் உள்ளடக்கிக் கொண்டாளோ....?

வழக்கமாக வரும் தூக்கம்? புரண்டு புரண்டு படுத்ததுதான் மிச்சம். கல்யாணியின் கடிதம், அம்மாவின் கலங்கிய முகம்— இவற்றினூடே சடகோபனைப் பற்றிய நினைவு.

அவரையும் கல்யாணம் செய்து கொள்ள வீட்டில் இப்படித்தானே வற்புறுத்துவார்கள்!

டெஸ்பாச்சிலிருந்து விஷயம் வெளியானவுடன் ஆபீஸில் ஒரே பரபரப்பு ஏற்பட்டது.

"எங்கேப்பா... அந்தப் பிஸ்டர்...? இன்னும் வரலையா...? எட்டு மணிக்கே வந்து உட்கார்ந்துடுமே !" — வயிற்றெரிச்சல் ஒன்றின் கேள்வி.

"அதுக்குப் பிரமோஷன் வந்ததில் ஆச்சரியமில்லை.... இத்தனை நாட்களாக வராததுதான் ஆச்சரியம்....!" — இது இன்னொன்றின் கடுகடுப்பு.

மேற்கொண்டு கேட்கவே வெறுப்பூட்டும் சர்ச்சைகள், சே, உத்தியோகம் என்ற உடுப்புக்குள் எவ்வளவு அசிங்கமான எண்ணங்கள்!

தொடர்ந்து ஓர் எண்ணம் — ஏன், சடகோபன் இன்றும் வரவில்லை...? உண்மையான உழைப்புக்குக் கிடைத்த இந்த உயர்வுக்குப் பாராட்டு தெரிவிக்க வேண்டுமென்ற எண்ணம் என்னுள் எழுந்தது.

ஒன்று, இரண்டு மூன்று நாட்களாக வரவில்லை. 'லீவு' என்று ஒரு வாரம் எம். ஸி. போட்டிருப்பதாகப் பேசிக் கொள்கிறார்கள். அவர் வீட்டில் போய்ப் பார்த்து விட்டு வந்தால் என்ன......? எண்ணமே என்னுள் ஆச்சரியத்தை ஏற்படுத்தியது !

"மிஸ்டர் சடகோபன் இருக்கிறாரா ?"

ஏழெட்டுக் குடித்தனங்களிடையே அவருடைய போர்ஷனைக் கண்டுபிடித்து உள்ளே நுழைந்த போது ஓர் இளம் பெண் நின்று கொண்டிருந்தாள்.

ஒரு முறை ஏற இறங்க என்னை நோக்கியவள் தலையை ஆட்டி விட்டு விருட்டென்று உள்ளே சென்று விட்டாள். நான் திகைத்து நிற்கையில் ஒரு வயதான அம்மாள் வெளியே வந்தாள். 'வா' என்று தலையாட்டியவள் ஒரு முறை என்னை உற்றுப் பார்த்து விட்டு உள்ளே அழைத்துச் சென்றாள். தன்னி வரும் போதே கட்டிலில் அவர் கிழித்த நாராகக் கிடப்பது தெரிந்தது. ஆபீஸ் வேலையைக் கையும் அணைகையாக விட்டு விட்டு எப்படிப் படுத்திருக்கிறார்! என்னையறியாமல் கண்கள் கலங்குகின்றன.

என்னைக் கண்டதும் மெதுவாக எழுந்து உட்கார்ந்து கொள்ளப் பார்க்கிறார்.

"பரவாயில்லை. நீங்கள் படுத்துக் கொள்ளுங்கள்" என்று நான் நாற்காலியில் உட்காருகிறேன்.

அவர் மெதுவாகத் தம் உடல் நிலையைப் பற்றிச் சொல்லி முடிக்கையில் மூன்று ஜோடிக் கண்கள் எங்களையே உற்றுப் பார்க்கின்றன! தம் சகோதரிகளையும் தாயாரையும் அறிமுகப்படுத்தி வைக்கிறார். இருவரில் மூத்தவள் விதவை என்றும் இரண்டாவது [illegible] ஊமை என்றும் ஆங்கிலத்தில் அவர் கோடிட்ட போது நான் மிகுந்த வேதனையடைந்தேன்......

தந்தையை இழந்து ஒரே ஆண் மகனாய் அந்தக் குடும்பச் சுமைக்குக் குனிந்து கொடுத்துப் பழகிய அவருக்கு அலுவலகச் சுமை, சுமையாகத் தெரியாதுதான்....!

இதன் நடுவிலும் அவருடைய பதவி உயர்வுக்கு நான் வாழ்த்துக் கூறிய போது அதை மகிழ்வோடு தலையசைப்பதன் மூலம் ஏற்றுக் கொண்டார். புறப்படுகையில் அந்த மூன்று ஜோடிக் கண்களும் என்னை உறுத்துப் பார்த்தபடி விடை கொடுத்தன.

"என் சீதா, இன்னிக்கு நாழியாயிடுத்து?" என்ற அம்மாவின் கேள்விக்கு 'ம்' என்ற தலையாட்டலோடு சரி. சடகோபன் வீட்டிலிருந்து புறப்பட்ட போது ஏற்பட்ட கலக்கம் இன்னும் என் நெஞ்சை விட்டகலவில்லை !

இது வரை நான் சக ஊழியர் யார் வீட்டுக்கும் போனதில்லை. சடகோபன்கூட என்னுடைய வருகையை வியப்போடுதான் பார்த்தார் !

அந்தப் பெண்கள்... அவர்களது பிடியில் அவர் நெருக்கப்படுகிறார்.... ஒன்று மட்டும் நிச்சயம் : சடகோபன் தம் சொந்த விருப்பு

வெறுப்பின் அடிப்படையில் பிரம்மசரியம் பூணவில்லை — என்னைப் போல் !

சடகோபன் அதிகாரியாகப் பதவி ஏற்றுக் கொண்டு விட்டார். முன்போல் இல்லை. ஒன்றிரண்டு வார்த்தைகள் எப்போதாவது அவரே பேசுகிறார். அதிகாரியானாலும் என்ன? கீழே இருப்பவர்கள் செய்ய விட்டதையும் மறந்ததையும்தானே உட்கார்ந்து எழுதுகிறார்.... !

அன்று — ''மிஸ் சீதா.... ஒரு உதவி பண்ண முடியுமா.... ?''

நான் அசந்து போனேன் !

''நிச்சயமாக!''

அவருடைய இளைய சகோதரியைப் பெண் பார்க்க வருகிறார்களாம்; அதற்கு நான் வரமுடியுமா என்று கேட்டபோது நான் என்ன சொல்வேன் ?

பெண்ணின் கனத்தைச் சாக்காக்கிக் கொள்ள நினைத்த மாப்பிள்ளை வீட்டாரின் போக்கு எனக்கு அருவருப்பையூட்டிய தென்றாலும், அவள் வாழ்வு ஒரு மாதிரி மலர்கிறதே என்ற நிறைவில் அதை மறைத்துக் கொள்கிறேன் !

அன்று சடகோபனின் தாயார் என்னிடம் கொஞ்சம் மனம் விட்டுப் பேசினார். ஏதோ ஒரு மாதிரியாகச் சின்னவளுக்கு வழி பிறந்ததே என்ற திருப்திதான். சடகோபன் என்னுடைய உதவிக்குப் பல முறை நன்றி சொல்லிய போது எனக்குக் கஷ்டமாகக்கூட இருந்தது !

அம்மாவிடம் இதற்குள் சடகோபன் வீட்டாரைப் பற்றிச் சொல்லியிருந்தேன். அவளுக்குத்தான் எத்தனை விஷய ஞானம்!

''இதோ பார் சீதா, தன் பெண்களுக்கு ஒரு வழியும் இல்லாத போது, தாயார் தன் வீட்டுக்கு மாட்டுப்பெண் வரட்டுமென்று நினைப்பாளா? ஏதோ இளையவளுக்கும் கல்யாணமாகிப் பெரியவளையும் எங்கேயாவது ஆசிரியைப் பயிற்சி அது இதுன்னு சேர்த்துட்டா, தாயாரும் பிள்ளையும்தானே ? ஒண்ணும் கஷ்டமிருக்காது....!''

அம்மா இப்படிச் சொன்னது முதல் என் மனத்தில் ஒரே எண்ணம் எழுந்தது. சடகோபனுக்குக் குடும்ப வாழ்க்கையில் நல்ல எதிர்காலம் வேண்டும்... அவருடைய வயதான தாயாரையும் அவரையும் கவனித்துக் கொள்ள ஒரு நல்ல துணைவி தேவை.

ஃ ஃ ஃ

சடகோபனின் இளைய சகோதரி கல்யாணமுமாகிக் குடித்தனமும் செய்யப் போய் விட்டாள், கணவன் வீட்டுக்கு. மூத்த சகோதரிக்கும் கல்யாணியிடம் சொல்லி அவர் உறவினர் மூலமாக ஆசிரியைப் பயிற்சிப் பள்ளியில் இடம் பிடித்துக் கொடுத்தாகி விட்டது.



''எப்படியோ கஷ்டப்பட்டு உங்கள் ஒன்பது பெண்களுக்கும் கல்யாணம் பண்ணிக் கொடுத்து விட்டீர்கள். இனி என்ன செய்யப் போகிறீர்கள் ?''

''பிரசவ ஆஸ்பத்திரி கட்டப் போகிறேன்!''

சடகோபன் தாயார் என்னைத் தூக்கித் தலையில் வைத்துக் கொள்ளாத குறைதான்! வீட்டுக்கு வரப் போக என்று அம்மாவுடனும் நெருக்கம் ஆகிவிட்டது.

இப்பொழுதெல்லாம் சடகோபனின் கல்யாணத்தைப் பற்றி அம்மாவிடம் அடிக்கடி பேசுவதை நான் ஜாடையாகக் கேட்டுச் சிரிக்கிறேன். அம்மாவும் ஆமோதிப்பது போல் பேசுவாள். என்ன முடிவெடுப்பார்களோ...?எதுவானால் என்ன, என் எண்ணத்தின் போக்கில் சடகோபனின் தாயார் வந்து விட்டார் — அது ஒன்றே போதும்....

''மிஸ் சீதா....'' சடகோபன் கூப்பிட்டு அனுப்பினார்.

''உங்களுடன் சில விஷயங்கள் பேச வேண்டியிருக்கு..... முடியுமா?''

''தாராளமாக !''

என் மனத்தில் ஒரே குதூகலம் எழுந்தது. அவர் என்ன சொல்லப் போகிறார் என்பதை, அவர் தயங்கித் தயங்கி ஆரம்பித்ததிலிருந்து அறிந்து கொள்ள முடிந்தது. என்றாலும் ததும்பத் தவிக்கும் ஆவலைச் சிரமப்பட்டு அமுக்கிக் கொள்கிறேன்.

கடற்கரையின் கூட்டமற்ற ஓர் ஒதுக்குப்புறத்தில் நாங்கள் உட்கார்ந்திருக்கிறோம். கைகள் மணலையும், எண்ணங்கள் மனத்தையும் அளைகின்றன !

''மிஸ். சீதா ! ம்... இத்தனை நாட்களாக நினைக்காதிருந்த என் திருமணத்தைப் பற்றி என் தாயார் அடிக்கடி நினைவுபடுத்துகிறார்.....''

மணலை விட்டு நான் அவரை நோக்கினேன். தயங்கியவாறு அவர் தொடர்ந்தார். ''....இதுவரை என் சகோதரிகள் இருந்தனர். ஆனால்... ஆனால் அவர்கள் இருந்த போது அதைத் தடையாகவோ அல்லது...''

''அல்லது.... ?''

''இப்போ அதற்குச் சுதந்திரம் கிடைத்து விட்டதாகவோ நான் நினைக்கவில்லை.''

''இல்லை, மிஸ்டர் சடகோபன் ! ஒரு தாயார் தன் குழந்தைகளுக்கு ஒரு நல்ல பாதை கிடைப்பதை எந்தக் காலத்திலும் நினைக்காமல் இருக்க முடியாது. சமய சந்தர்ப்பங்கள், வசதிகள் — இவற்றைப் பொறுத்துத்தான் அதை நிறைவேற்ற முடிகிறது...... அந்த வகையில்.....''

சடகோபனின் பார்வை என்மீது பதிந்திருந்தது. நான் சற்றுத் தூரத்தில் தெரிந்த ஒரு குழந்தையின் மீது பார்வையைச் செலுத்தினேன். பாவம், எந்த அலையாவது வந்து தன் பாதங்களை நனைக்காதா என எதிர்பார்த்துக் கொண்டிருந்தது அந்தக் குழந்தை !

'' ஆம்.... அந்த வகையில் உங்கள் தாயார் நினைத்தது சரியாகத்தான்படுகிறது !'' நான் அவர் பக்கம் பார்வையைத்

திருப்பினேன். அவரோ எங்கோ பார்த்தபடி யோசித்துக் கொண்டேயிருந்தார் — அதுவும் சரியோ என்று எண்ணுகிற மாதிரி.

தூரத்தில் கைகொட்டி ஆரவாரிக்கும் அக் குழந்தை அவர் கவனத்தை ஈர்த்திருந்தது!

ஃ ஃ ஃ

"ஏண்டி, பொண்ணே! இதென்னடி, கூத்து....? நானும், அந்தச் சடகோபன் அம்மாவும் என்னவெல்லாம் கோடிச்சோம்" என்று அம்மா குதிகுதியென்று குதித்தாள்!

"சரியம்மா! இப்போ பார்த்திருக்கிற பெண்ணுக்கு என்ன குறைச்சல்! கண்ணுக்கும் அழகா, பதவிசா, ஏன் என்னை விடச் சின்னவளாய் இருக்கிறாள்....."

பெண்ணைப் பார்த்த திருப்தியில் சடகோபனின் தாயார் என்னைக்கூட மறந்துவிட்டாள்!

சடகோபன் கலியாணத்தில் ஓடியாடித் திரிந்ததில் ஓய்ந்து போய் ஒரு வார லீவில் இருந்தேன். கல்யாணி என்னைப் பார்க்கக் கைக்குழந்தையுடன் வந்திருந்தாள். அம்மாவுடன் சேர்ந்து கொண்டு அவள் நச்சரித்த நச்சரிப்பில் நான் லீவைக்கூட ரத்து பண்ணிவிடலாமா என்று நினைத்தேன். அப்புறம் மட்டுமென்ன? கடிதத்தில் எழுதுவது இருக்கவே இருக்கிறது!

சடகோபன் இப்போது சிறிது தாமதமாக வருவதையும் சீக்கிரமாக எழுந்து போவதையும் வழக்கம் போல் விமர்சிக்கிறார்கள் மற்றவர்கள்.

நானும் ஆபீஸுக்குப் போய்க் கொண்டு வருகிறேன்....!

# வட்டமேஜை

## ஸ்ரீ சங்கர சரித்திர நூல்கள்

உலகம் ஒற்றுமையாக இருந்து சாந்தி, சுகம் பெற, இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் அவதாரம் செய்த ஸ்ரீ சங்கர பகவத் பாதரின் திவ்விய சரித்திரங்களைக் கூறுவதற்காக முன்னோர்களும் பின்னோர்களும் எழுதிய பல நூல்கள் இன்றும் இருக்கின்றன. அவை சிவரஹஸ்யம்; மார்க்கண்டேய ஸம்ஹிதை; ப்ராசீன சங்கர விஜயம்; ப்ருஹத் சங்கர விஜயம்; ஆனந்த கிரீயம்; வ்யாஸாசலீயம்; சங்கராப்யுதயம்; பதஞ்ஜலி சரிதம்; கோவிந்த நாதீயம்; குருரத்ன மாலிகை; மாதவீய சங்கர விஜயம்; சங்கரதிக் விஜயம்; சித்விலாஸீயம்; குருவம்ச காவ்யம் முதலியவையாகும்.

இந்தச் சங்கர சரித்திர நூல்கள் எல்லாவற்றிலும் பல கதா பாகங்கள் ஒரே மாதிரியாகக் கூறப்பட்டாலும், சிற்சில கதா பாகங்கள் ஓர் இடத்தில் கூறப்பட்டது மற்றோர் இடத்தில் கூறப்படாமல் விடப்பட்டு ஆங்காங்கு வெவ்வேறு விதமான மாறுதல்கள் காணப்படுகின்றன. சிற்சில சங்கர விஜயங்கள், ஆசார்யர்கள் திக்விஜய யாத்திரை செய்யும்போது உள்ள சிற்சில ஊர்களை மாத்திரம் கூறுகின்றன. மற்றவற்றை விட்டுவிட்டன. மாதவீய சங்கர விஜயம், ஆசார்யர்கள் ஸ்தாபித்த மடங்கள் இவ்வளவு என்று சொல்லவில்லை. காச்மீரத்தில் ஸர்வக்ஞ பீடாரோஹணம் என்பதை மாத்திரம் கூறுகிறது. ஆனால், கோவிந்த நாதீயத்தில், காச்மீரம் என்பது காஞ்சி என்றும், அங்கு ஆசார்யர்கள் ஸர்வக்ஞ பீடாரோஹணம் செய்தார்கள் என்றும் கூறப்பட்டிருக்கிறது. மட விஷயம் கூறப்படவில்லை. மேலும், மார்க்கண்டேய ஸம்ஹிதையிலும், ஆனந்த கிரீயத்திலும் ஸ்ரீ காஞ்சி மடம், சிருங்கேரி மடம் ஆக இரண்டின் விவரமும், ஐந்து லிங்கங்களை ஆசார்யர்கள் ஸ்தாபித்த இடங்களும் அதிகமாகக் கூறப்பட்டிருக்கின்றன. சிவரஹஸ்யத்தில் ஆசார்யர்களுடைய காஞ்சி ஸ்ரீமடமும், கைலாசத்திலிருந்து ஆசார்யர்கள் கொண்டு வந்த ஐந்து ஸ்படிக லிங்க விஷயமும் காஞ்சியில் ஸித்தியடைந்த விவரமும் கூறப்பட்டிருக்கின்றன. பதஞ்ஜலி சரிதம், சங்கராப்யுதயம் இரண்டிலும் கடைசியில் ஆசார்யர்கள் காஞ்சியிலேயே தங்கிய விவரம் விளக்கப்பட்டிருக்கிறது. வியாஸாசலீயத்தில் (பழைய ஏடுகளில்) காஞ்சி மடம் விவரம் கூறப்பட்டிருக்கிறது.

ஆனந்த கிரீயம் முதலிய மற்ற சங்கர விஜயங்களும், சிவரஹஸ்யம் என்ற நூலும் ஐந்து ஸ்படிக லிங்க விவரத்தைக் கூறும் போது, சித்விலாஸீயம், குருவம்ச காவ்யம் இரண்டும் ரத்னகர்ப்ப விநாயகருடன் ஒரே ஸ்படிக லிங்கத்தைப் பற்றிக் கூறுகின்றன.

மேற்சொன்ன விஷயங்களைக் கவனத்தில் கொண்டு, எல்லா சங்கர சரித்திரங்களையும் ஒன்று சேர்த்து, அவைகளில் கூறப்பட்ட பல மடங்களையும் விடாமல் ஒரு சரித்திரம் தயார் செய்து ஸ்ரீ சங்கர பகவத் பாதருக்குப் பிரீதியான சாந்தி மார்க்கத்தில் அனைவரும் ஒருமுகமாக ஈடுபடுமாறு பெரியோர்கள் ஏற்பாடு செய்தால் சாலப் பொருத்தமாக இருக்கும்.

கவிலாயபுரம்,
சென்னை—6 கி. நாகராஜன்

## ஒரு திருத்தம்

'சேதி தெரியுமா?' என்ற பகுதியில் பதினெட்டாவது புதிர் பின்வருமாறு அமைந்துள்ளது: "கடற்கரையில் தூர்விபத்தில் காணாமல் போன நியூசிலாந்து பிரதமர் திரு ஹோல்ட்டுக்குப் பதிலாக திரு .............. பதவி ஏற்றார்."

இந்த வாசகம் தவறு. "............? ஆஸ்திரேலியப் பிரதமர் திரு ஹோல்ட்டுக்குப் பதிலாக..." என்று இருக்க வேண்டும்.

சென்னை — 28
24-4-69 ஆர். பட்டாபிராமன்

(தவற்றைச் சுட்டிக் காட்டியதற்கு நன்றி.
— ஆசிரியர்)

Printed & published by K. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam

# காலைப் புத்துணர்ச்சியை மாலை வரை நீடிக்கச் செய்யுங்கள்!

காலையில் குளித்தபின் பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்க்கை உடலில் தூவிக் கொண்டால் புத்துணர்ச்சி மணிக்கணக்கில் நீடித்திருக்கும். வியர்வையை விரைவில் உறிஞ்சும் தன்மையுடைய பாண்ட்ஸ் ட்ரீம்-ஃப்ளவர் டால்க் கடுங்கோடையில் கூட உங்களை இதமான உணர்ச்சியுடனும் உல்லாசத்துடனும் இருக்கச்செய்யும். உங்கள் உடலைத்தழுவி நிற்கும் ட்ரீம்ஃப்ளவர் நறுமணம் உங்களைச் சூழ்ந்துள்ளவர்களை மகிழ வைக்கும். எல்லா காலநிலைகளுக்கும் ஏற்றதாகையால் வருடம் பூராவும் தினமும் உபயோகிக்கச் சிறந்தது பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்க்!




## பாண்ட்ஸ்

**ட்ரீம்ஃப்ளவர் டால்க்—**

**மென்மை மிக்க மகோன்னத டால்க்!**

சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பொரேடெட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன்
யு.எஸ்.ஏ.வில் இணைக்கப்பட்டது)

P-6926

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon